உ

சிவமயம்.

பராபரவித்யா விவரணை

சிவாகம வேத தாரதம்யம்.

# வேதாகம தாரதம்யம்.

இஃது

திருசிரபுரத்திற்கடுத்த

திருவானைக்காவலி லிருக்கும்

சிவாகம பாடசாலை உபந்யாஸகராகிய

பச்சாம்பேட்டை

## ஸத்யோஜாத சிவாச்சாரியாரால்

இயற்றப்பட்டு

திருசிராபுரம்

ஸ்ரீ கிருஷ்ண விலாஸ அச்சுக்கூடத்தில்

வெளியிடப்பட்டது.

1910

உ

சிவமயம்.

பராபரவித்யா விவரண

சிவாகம வேத தாரதம்யம்.

# வேதாகம தாரதம்யம்.

---

இஃது

திருசிரபுரத்திற் கடுத்த

திருவானைக்காவலி லிருக்கும்

சிவாகம பாடசாலை உபன்யாஸகராகிய

பச்சாம்பேட்டை

## ஸத்யோஜாத சிவாசாரியாரால்

இயற்றப்பட்டு

---

திருசிரபுரம்

லக்ஷ்மீ விலாச முத்திராக்ஷர சாலையில்

வெளியிடப்பட்டது.

1908

உ

## சிவமயம்.

# வேதாகம தாரதம்ய முகவுரை.

சிவபக்த சிகா மணிகளாகிய நம்மனோர் பலர்க்குந் தெரிவித்துக் கொள்வதாவது. மதுரை சிவதர்ம பரிபாலன சபையாரால் பிரசுரித்த சைவ தூஷண நிராகரண மென்னுந் தலைப்பேர் புனைந்த புத்தகத்திற் வேதஸாரஞ் சிவாகம மென நிரூபத்திருத்தலை சிற்சிலர் ஆக்ஷேபித்து வேத முயர்ந்ததா? சிவாகமம் உயர்ந்ததா? அல்லது இரண்டும்சமனு? என ஆசங்கிக்க புகு முன்னிலையில் வேதசாரம் சிவாகம மென்பது விடையாக தெனவும் இவர்கள் கூறிய சமாதானம் வேதத்திற்கே மகிமை சார்ந்துள்ளதெனவும் இஃதன்றி வாயுஸம்ஹிதா வாக்கியத்தில் சிரௌதா சிரௌத விவகாரங் கூறியவிடத்தில் சுருதிஸாரம் சிரௌதமெனவும் ஸ்வதந்திரம் இதரமெனக் குறித்துள்ளது அச்ரௌதமெனவும் கூறப்பட்டிருத்தலின் காமிகாதிகளான அசிரௌதசிவாகமங்களை சிரௌதமென வலிந்தீட்டிப்பொருள்கொண்டது குற்றமாமெனவும் சுருதி சூத்திரர் முதலினோர்க்கு அத்யயன விலக்காய் நிற்றலின் சூத்திரரும் படிக்க விதித்துள்ள சிவாகமம் வேதஸார மாதல்யாங்ஙன மெனவும் வேதத்தை நோக்க ஸாரம் விசேஷ மாதல் பற்றி இங்ஙனம் சூத்திரர்க்கு அத்யயன ஹேது உண்டாகா தெனவும் இவ்வாறுள்ள பல் வகையாம் ஆசங்கைகளை எம்பால் சிற்சிலர் ஆசங்கிக்கப் புகுந்ததால் அவ்வாசங்கை நிராகரித்து உண்மை யுபகரிக்க வேதாகம தாரதம்மிய மென்னும் இப்பமெய் நூல் வெளிப்படுத்த துணிந்தோம்.

இந்நூல் வெளியிட எம்மை பன்முறை வற்புறுத்தி பொருள் நலம் உபகரித்து சைவாபிமான மேற்கொண்டு நிற்கும் பூதலூர் பிரும்மஸ்ரீ சுப்பிரமணிய சிவாச்சாரியா ரவர்களுக்கு எப்பொழுதும் நன்றி பாரர்ட்டக் தக்கவராயிருக்கின்றோம் அவர் வேதசிவாகமங்களில் வைத்திருக்கும அன்பும் அவ்வன்புதடித்து நம் சிவ பெருமானிடத்து அந்தரங்க விசுவாசமும் வைத்ததது. மென்மேல் அபிவிர்த்தி யடையு மென்பதில் தடையில்லை.

சுபம்:—இப்புத்தகம் வேண்டுபவர் எமக்காவது பூதலூர் சுப்பிரமணிய சிவாச் சாரியாரவர்களுக்காவது தெரிவித்துக கொண்டால் விலாஸதாரர்களுக்கு வி. பி. மூலியமாய் அனுபபப்படும்.

ஸத்யோஜாத சிவாச்சாரியார்.

ஆகம பாடசாலை உபன்யாஸகர்

திருவானைக்காவல், திருச்சி.

உ

திருச்சிற்றம்பலம்.

# சைவதூஷண நிராகரணம்.

## வேதாகமதாரதம்யம்.

[illegible] ||

[illegible] ||

[illegible] ||

சைவதூஷணநிராகரணமென்னும்

இத்தலைப் பெயரிட்ட புத்தகமொன்று மதுரை பிரும்மஸ்ரீ கல்யாண சுந்தரபட்டரவர்களால் கிடைக்கப்பெற்றவை நோக்கி யானந்தமுற்றோம்—அவற்றுள்? தியஸாபிகல் ஸொஸைட்டியாரது ஒரு குறிப்பு வருமாறு? எனத்தொடங்கி மூன்று வைதிக மதங்களில்? ஒன்றாகிய விசிஷ்டாத்வை தத்தைப்பற்றி? இஃது எழுதப்பட்டதாகையால் இதில் சைவமதமானது அடங்கவில்லை எனவும்? சிவஞானமுனிவர் முதலியவர்கள்சைவத்தை வேதாந்தத்தைவிட்டு முற்றும் விலக்கி? வேதாந்திற்கு புறம்பான ஆகமசாஸ்திரங்களையே ஆதரவாக்கி சிலவேறுபாடுள்ள தாத்பரியங்களுட

னும். சித்தாந்தம் என்கிற நாமதேயத்துடனும் சைவமதத்தை ஸ்தாபித்து? அது அவருக்குப் பின்வந்தவர்களால் அநுஷ்டிக்கப்பட்டு வருகின்றது எனவும்? அதை வைதிக விசிஷ்டாத் வைதத்துடன் சேர்க்காமல் பிரத்தியேகமாக விவரித்துப்பேசுவதுதான் உசிதமென்றெண்ணி இப்பத்திரிகையில் பிரஸ்தாபப் படுத்தவில்லை என்பது ஸொஸைட்டியாரது அபிமதமென்பதைக்காட்டப் பட்டிருந்தது- வைதிகமதமென இதுகாருஞ்செவியுற்றதில்லை யாதலின் உபயரட்டைக் கெருடனென்பதுபோல் மூன்று வைதிக மதமென வரைந்துள்ளது யாதென உற்றுநோக்கப் புகுவோமாக - த்வைதம் -அத்வைதம்-விசிஷ்டாத்வைதம்-இம்மூன்றும் மூன்றுவைதிகமத மென்பதவர் கொள்கையாதலால் இவை முயற்கோடுபோல் முடிந்துள்ள மதங்களேயாகும் - த்வைதம்-அத்வைதம்-விசிஸ்டாத்வைதமென பாட்டி கதையாய் வழங்கற்பாலதன்றி உலகினருள் இம்மதத்தவருளரென்பதெங்கெனுங் காணேம் உளரேல் ஈண்டெடுத்து விளக்குவாராக. ராணுவத்தார்ஜனகணிதக்குறிப்பில் பிராமணஜாதிசிவமதமென தம்மதத்தை வெளியாக்கியுள்ளதோடும், ஒத்தி பந்தகம் சாஸனம் கடன்பத்திரம் முதலியவற்றிலும் இவ்வாரே குறிக்கப்பட்டிருக்கின்றதை இவர்கள் இன்றுமறியார்கள்-த்வைதம்-அத்வைதம்- விசிஷ்டாத்வைதம் முதலியமதங்களுளதாயின் அவற்றை யேன்வரிவித்துக்காட்டாதொழிந்தனர். இவற்றால் மதத்தொகையில்கணக்கிடா வைதிகமதமென புதிதாய்ப்புதுக்கிய இம்மதங்களைவேத விஹிததர்மங்களன்றென்பதா யொதுக்கப்படும். வேதங்களிலோ- ஶிவமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே-என்னுஞ் சுருதிவாக்கியத்தால் சிவ பெருமானை அத்வைதராகவும் துரீயராகவும் சுருதிகளினுத்கோஷிக்கின்றபடியால் அத்வைதம் அங்கமும்சிவமங்கியுமாய் முடிபுற்றிருத்தல் பற்றி அங்கிரூபமான சிவத்தை முன்னற்கொண்ட சைவமதமே அத்வைத மென்பது தெற்றென விளங்கும். இவற்றை நீற்று அத்வைதமெனத் தனிமதம்புதுக்குதல் யெதுநிமித்தம்-அத்வைத மென்பது தனித்துள்ளபதார்த்த மன்றாதலால் அத்வைதப்பட்டு நிற்கும் பதார்த்தம் யாது-சிவபெருமானே யன்றோ-இவற்றால் பரம வைதிக சிகாமணிகளும்சைவஸமயத்தவராய் வெளிவரத்துணிவுற்றனர் இவற்றில் சிறிதுன்னோக்காது மூன்று வைதிக மதமென வறிவித்துணர்த்தியதும் விந்தையே இம்மும்மதங்களும் ஒறு

ங்கே வைதிகமதமாயின் ஒன்றையொன்று கண்டிக்கக்காரணமில்லை - த்வைதம் அத்வைதத்தைக்கண்டித்தும்-அத்வைதம் த்வைதத்தைக் கண்டித்தும்- விசிஷ்டாத்வைதம் த்வைதாத்வைதங்களைக் கண்டித்துமிருப்பதால் இம்மூன்று மொன்றிலொன்று முறணியவேறுவேறு விஷயங்களை நிலைநாட்டியுளதாதலின் மூன்று வைதிகமதமென ஒருங்கு சேர்க்க முயன்றது சரியாகா-இம்மூன்று மதமும் வைதிகமதமா- இதி லொன்றிற்கொன்று தாரதம்மியமுளதா- எது வைதிகம்-எது அவைதிகம்-எண்டெடுத்து விளக்குவாருக - மதமென்பது தெய்வத்தை முன்னுகக்கொண்டுவரும் நற்பேராதலால் அத்வைத மதத்தவர்க்குத் தெய்வம் யாது-அவரணியும் புண்டிரங்களெவை-அவர்கொள்ளும் பிரமாண நூலெது பிர்ம்மமே தெய்வம்- பஸ்மபுண்டிரம் சித்திரபுண்டிரம் மிர்த்திகாவூர்த்தவபுண்டிரம் முதலியவைகள் இம்மதஸ்தரணியும் புண்டிரங்கள் இதற்கு வேதமே பிரமாணமெனக் கூருவராயின் - பிரமாணம் - பிரமேயம் - பிரமிதியென்னும் திருபுடி வியவகாரம் இங்ஙனம் வருமாதலின் அத்வைதக் கொள்கையுடைய இவர்களுக்குத் தனக்கன்யம்மித்தையாதலால் வேதம் மாத்திரம் சத்யமாதல் யாங்கனம் - பிரம்மம் வேதமென யிரு பொருள்த் தொந்தமுண்டாதலால் இவர்க் கத்வைத ஹானி வந்து விடும் பிரம்மத்தின் உச்சுவாஸம் நிச்சுவாஸம் வேதமெனக்கூருதலின் பாதையேர்படக்காரணமில்லை யென்பரேல்-அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதமேதத்யத்ருக்வேதோ-என்னும் வாக்கியத்தால் இந்த மஹத்தானபூதத்துக்கு உச்சுவாஸ நிச்சுவாஸமே ரிக்காதி வேதங்களெனக்கூரியிருத்தலின் மஹதோபூதசப்தம் யார்பொருட்டு வேதங்களில் பிரஸ்தாபித்துள்ளது—மூக்கிருந்தாலன்றோ உச்சுவாஸ நிச்சுவாஸ மேர்ப்படக்காரணம் மூக்குள்ள பிரம்மம் இவர்களுக்கு மித்தையாயிருத்தலின் அவற்றால் வெளிப்பட்ட வேதங்களில் சத்யபுத்தி வருதல்யாங்கனம்-இவர்கள் விவஹாரம் மேல்ச்செல்லச் செல்லத்தான் மாத்திரமே ஸத்யம் மற்றயாவும் பொய்யெனக் கூருவராதலால் இவர்க்கன்யமான வேதமும் பொய்த்துஅவற்றாலாய வைதிகமும் பொய்த்துவிடும், வைதிகம்வேதாகமபுராண இதிஹாஸாதி பிரமாணங்களை கைப்பற்றிநிற்கும் ஸத்பிராமணர் ப்ரத்தெநிற்றலால் இவற்றையப்ராமாண்யமென்றோதுக்குவோர்க்கு வைதிகம்ஏராதுஏராது. இவர்கள் தங்களை வைதிகரெனப்பிறர்கூ

ராது தாமே கூறிக்கொள்வதென்போலிருக்குமெனின் கிறிஸ்துவர் தங்களைஞாநியெனவும் வேதாகமாதி சர்ச்சாத்திராராய்ச்சியும் சர்யை கிரியை யோகம் ஞானமென்னும் சாதனசதுஷ்டய சுத்தாத்வைத சிவஸாக்ஷாத்கார மயமாம் சைவசமயத்துள்ள ஸத்பிராமணாதிகளையும் மற்றுள்ளவர்களையும் அஞ்ஞாநியெனக் குறைகூறுதலை யொத்திருக்கும். இங்ஙனம்நோக்காது யாம் வைதிகர் எனமென்மேலெழுவதால் யாதுபயன் இவர்கள் மூன்று வைதிக மதமென காட்டியது - த்வைதவிசிஷ்டாத்வைத அத்வைத பாஷ்யங்களை நோக்கியதாலென தெரியவருகிறதால் ஸ்ரீகண்டபாஷ்யத்தை எங்ஙனம் வைத்துள்ளாரென்பது விளங்கவில்லை-அவற்றை உட்கொண்டிருப்பதால் நான்கு வைதிகமதமென கூட்டி முடித்தலுங்கூடும் இவர் பாஷ்ய விவரணங் கூறி இருப்பது பஞ்சபாண்டவரை தெரியாதாக் கட்டில்க்கால்போல் மூக்கிலை இரண்டுபிரிவாய் என ஒருவிரல் நீட்டி கீழே ஸைபர் எழுதி அதையும் அழித்து விட்டதை யொத்திருக்கின்றது வேதபாஷ்யம் நான்காயிருத்தலின் நான்கு வைதிகமதமென்பதொழிந்து மூன்று வைதிகமதமென பிரஸ்தாபித்ததெதக் கருத்துப்பற்றியோ விசிஷ்டாத்வைதமென்பதால் ஸ்ரீகண்டபாஷ்யம் அதனுள்ளடங்குமெனின் ராமானுஜ பாஷ்யமொன்றிருப்பதால் அவை என்னுமென்பதையுற்று நோக்குவாராக ஸ்ரீகண்ட பாஷ்யம் ராமானுஜ பாஷ்யம் இவ்விரண்டும் விசிஷ்டாத் வைதமாயிருத்தலின் அங்ஙன கூறப்பட்டதெனின் இவ்விரண்டும் பதித்வனிரூபணத்திலும் பத்தமுத்திலோகோத்பத்தி முதலிய விவரணங்களிலொன்றிலொன்று முரணிய வேறுவேறு சித்தாந்தங்களைநிலைநாட்டியுள்ள இவ்விரண்டும் ஒருபுடைத்தாய நூலாதல் யாங்கனம்-விசிஷ்டாத் வைதமென்னுஞ் சொல்லானே அவை ஒரு புடைத்தாய் நிற்குமெனின் விசிஷ்டாத் வைதமென்றதால் அத்வைதமும் அதனுள்ளடங்கிய பொருளாதலின் வேறு பிரித்துகூற வெளிவந்ததென்றுக்கோ- இவற்றால் மூன்று வைதிக மதமென கூறியது குளறி விசேஷநாய் நிற்கின்றது இவர்கள் வைதிகரென்பதுண்மையாயின் வேதம் பிரமாணமாய் கொள்ளவேண்டி வருகிறது- ஈசாநஸ்ஸர்வவித்யாநாம் என்னுஞ் சுருதி வாக்கியத்தால் ஈசானமுகத்தில் சகலவித்தைகளும் தோற்றியதென்பது வெளியாயினமையின் இம்முகத்திலின்று வெளிவந்ததற்கு வித்யாவாசகம் சிறப்பித்து கூறப்பட்

டிருக்கின்றது-முண்டகோபநிஷத்தில்-த்வேவித்யேவேதிதவ்யே இதிஹஸ்மயத்ப்ரஹ்மவிதோவதந்தி பராசைவாபராச- என்னும் வாக்கியத்தால் இரண்டுவித்தைகள் அறியவேண்டுமெனவும் பிரும்மவித்துக்களாயுள்ளோர் இவ்வாறே அறிகிறார்களென்றும் அவைபரமபரமென பேதப்பட்டு நிற்குமெனவுங் கூறியிருத்தலால் வித்தை இரண்டுடையதென்பது தெற்றெனவிளங்கும் | தத்ராபராருக்வேதோ யஜுர்வேத: ஸாமவேதோதர்வவேத: ஶிக்ஷாகல்போவ்யாகரணம் நிருக்தம்சந்தோஜ்யோதிஷமிதி அதபராயயாததக்ஷரமதிகம்யதே - என்னும்வாக்கியத்தால்-ருக்கு-எஜுஸ்-ஸாமம்-அதர்வணம்முதலியவேதங்கள் நான்கும்சிக்ஷவியாகர்ணம் சந்தஸ்நிருக்தம்ஜோதிஷம்கற்பமுதலியவேதாங்கங்களாறும்அபரவித்தையெனவும்அக்ஷரத்தை அதிக்கிரமித்துள்ளதுபரவித்தையெனவுங் கூறியிருத்தலால் வைதிகவாதம்பூண்ட இவர்களிங்ஙனமென்செய்வர்-வேதம்அபரமெனவும்வேதாதீதமாம்வித்தையொன்றுளதெனவேதமுகத்தால்வெளிப்படுவின்முன்னர்ஈசானமுகத்தில்ஸகலவித்தைகளுந் தோற்றியதென்னும்சுருதிக்கும் இங்ஙனம்பரவித்யாபிரதிபாத்தியங்கூறியசுருதிக்கும்ஒருபுடையொற்றுமையிற்றலால்இப்பரவித்தையாதெனவைதிகராவார்யாவரும் ஊகித்தறியப்புகுவாராக-பரவித்தை உபநிஷத்துக்களென கூறுவராயின் உபநிஷத்து வேதமோ அல்லது வேதான்னியமா - வேதமெனின் - அபரவித்தை என்பதாயிவற்றை பொதுக்கப்படும்-வேதான்னியமெனின்-வேதபாஹ்யத்வம்உபநிஷத்துக்களுக்கு கூறவேண்டிவரும்-வேதத்தினின்றே வெளிப்பட்டதாய் உபநிஷத்துக்களைக்குறிக்கப்பட்டிருத்தலின் வேதான்னியமென்பது கூடாது வேதான்னியமாய் ஒரு மெய்நூல் வெளிப்பட்டிருக்குமாயின் அவை தோற்றியதற்கு பிரமாணம் வேண்டும் ஈசான ஸர்வவித்யானாம் மென்னும் சுருதியே இவற்றிற்கு பிரமாணமெனின் உபநிஷத்துக்கள் ருக்காதி வேதமூலகமகங் கூறியிருப்பதால் இவற்றை ஈசான முகோத்பவங் கூறுதலிழுக்காய் முடியும் இவற்றால் உபநிஷத்துக்களும் அபரவித்தையென்பதே முடிபாம்-பிரும்மத்தை அடையுந்நிலையை பரவித்தையென கூறுவோமெனின் ஜெகஜ்ஜீவேசுரர்முதலிய முப்பொருளும்மித்தையாயிருத்தலின் இவரடைதலெங்கும் ஜீவேசுவரபேதமிருந்தாலன்றோ அடையுங்கா

லக்குறிப்புண்மையாம் இவ்விரண்டுமற்ற ஏகான்மவாதிகளுக்கு இவை பொய்யாயிருத்தலின் அடையுங்காலமென்றதும் பொய்யாய் முடிந்துவிடும் இதுவுமன்றி வித்தை இரண்டுளதெனவேதங்கூறியிருக்க அபரவித்தையை மாத்திரம் அங்கீகரித்து பரவித்தைக்கலத்தில் ஸைபர் போடும் இவர்கள் வைதிகம் சாலச்சிறப்புடைத்தே-அபரவித்தைக்கு-அஸ்யமஹதோ பூதஸ்யநிஸ்வஸிதமேதத் ருக்வேதோ எனவும் பரவித்தைக்கு ஈசானஸர்வ வித்யாநா மெனவும் சுருதிகளிரண்டு பிரகாரமாய் கூறியிருத்தலின் இவ்விரண்டும் இரண்டு வித்தைகளேயாகும் இவற்றுள் அபரவித்தையாதென்பதை பிரமாண புரஸ்ஸரமாய் முன்னற்குறிப்பிட்டோம் இங்கனம் பரவித்தையாதென்பதை நிர்மாணிக்கப்புகுவோமாக-ஈசானஸர்வவித் யாநாமென்னும் சுருதிக்கேர்ப்ப சைவபுராணம் அகஸ்திய ஸம்ஹிதையில்-ப்ரணவாத்யா மஹா மந்த்ராஶ்சாக்ஷராண்யபி ! ஶிவஜ்ஞாநாநி ஸர்வாணி காமிகாதீநி ஸம்பவா: | ஶ்ரீமதீஶாநவக்த்ராத் ஸம்பவந்தி ஸுவ்ரத | ப்ராஜ்ஞைர்வேதைஶ்ச ஸாங்கைஶ்ச தத்புருஷவக்த்ரத: | யஜுர்வேதஶ்ச ஸாகாபி: அகோராத் ப்ரவர்த்தித: | ஸாமவேதோ வாமதேவாத் ஸம்பூதஸ்ததா | அதர்வம் ஸத்யோஜாதாத் ஸம்பவதீதி ! என்னும் வாக்கியத்தால் பிரணவாதிமஹா மந்திரங்களும் அகாராதி அக்ஷரங்களும் சிவஞான மயமாம் காமிகாதி திவ்யாகமங்களும் - சிவபெருமான் ஈசானமுகமாகிய ஊருத்வமுகத்திற் றோற்றியதெனவும் - உக - சாகைகளோடுங்கூடிய ருக்வேதம் தத்புருஷ முகத்திற்றோற்றியதெனவும் - ௱க - சாகைகளோடுங்கூடிய எஜுர்வேதம் அகோரமுகத்திற்றோற்றியதெனவும் - ஆ - சாகைகளோடுங்கூடிய ஸாமவேதம் வாமதேவ முகத்திற் றோற்றியதெனவும் - கூ - சாகைகளோடுங்கூடிய அதர்வணவேதம் ஸத்யோ ஜாத முகத்திற்றோற்றியதெனவுங்கூறியிருத்தலின்-ஈசானமுகத்தில் ஸகலவித்தைகளும் தோன்றிற்றென்னும் வேதத்துட் கருத்து வெளியாயிற்று இஃதன்றி அக்ஷராதிகம்பம் நாதநாதாந்தமேயாதலால்-நாதரூபம் ஶிவஜ்ஞாநம் ஸர்வவித்யாஶ்ரயம் பரம்-எனவும் ஶிவாகமவிஶேஷம் ஸம்யுதம் நாதகோ ஶஶ்ச தா | எனவும்-ப்ராஹ்மணேந ஹேதுநா பவிஷ்யதி |

[illegible] என்னுஞ்சிவாகமம் வாக்கியங்களால் நாதரூப சிவஞான மயமான சிவாகமங்கள் பரவித்யா ஸரூப மெனவும் நாதாந்தமான மேம்பாடுடையமதத்தையே இச்சைவாகமங்கூறுகின்றதெனவும்வேதசிவாகமம் இரண்டும் பராபரமென்னும் பேதத்தால் பதியையும் பசுவையும் பொருளாகக்காட்டுமெனவும் - பதியைப் பொருளாக்காட்டு ஞானம் காமிகாதியான பரஞானமெனவும் பசுவை பொருளாகக்காட்டுவது வேதாதிகளான அபரஞானமெனவும் - இந்தபராபர ஞானங்கள் இராத்திரியில் மநிதற்கண்ணும் பூனையின்கண்ணும் வித்யாஸத்தை அடைந்திருப்பதுபோல் இவ்விரண்டும் வித்யாஸத்தை அடையுமெனவுங் கூறியிருத்தலால் காமிகாதிகளான திவ்யாகமங்கள் பரவித்தை யென்பதமையப்பெறும்-இஃதன்றி-[illegible] என்னும்வாக்கியத்தால்ஊருத்வமுகத்தாலும் - அதோமுகத்தாலு மிரண்டுபிரிவாய் வேதங்கள் வெளிப்பட்டதெனவும் - ஊருத்வமுகத்தால் வந்தது பரவித்தை எனவும். அதோமுகத்தால் வந்தது அபரவித்தை எனவும் இப்பராபர மென்னும் பேதத்தால் சிவஞானம் பிரகாசித்து விளங்குகிறதெனவுங்கூறியிருத்தலின் சிவாகம்பரவித்தைஎன்பதற்கய்யமில்லை வேதம் சிவாகமங்களை பரவித்தையென குறித்துணர்த்தியதின்றெனின்- பராபர பேதத்தால் வேதமிருகூறாய் நிற்றலின் சிவாகமமுணர்த்தியது வேதவுணர்ச்சியேயாகும் - இவற்றால் வேதம்வுணர்த்தியதின்றென்னும் அபவாதம்திரஸ்கரிக்கப்படும் ருக்காதிவேதத்தால் பரவித்தையெனச்சுட்டியுணர்த்தியதென்றெனின்ருக்காதிவேதம்அபரமாயிருத்தலின் அபரம் பரத்தைகுறித்துணர்த்தா-இதுவுமன்றி சிவஞானத்திற்கு வேதாகமங்கள் அங்காங்கி பாவமுடையதுபற்றி வேதம் அங்கமுஞ்சிவாகமம் அங்கியுமாய் இருத்தலின் அங்கி அங்கத்தை குறித்துணர்த்தும் தரமுடையதும் அங்கம் அங்கியைக் குறித்துணர்த்தத் தரமற்றதுமா

ய்க் காணப்படுதலின் வேதங்கூறுது விடுத்தது பாதகமாஹாது. வேதஅங்கமென எவற்றால் நிரூபிப்பதெனின் - தஸ்யயஜுரேவ ஶிர: ருக்தக்ஷிண: பக்ஷ: ஸாமோத்தர: பக்ஷ: அதர்வாங்கிரஸ: புச்சம் ப்ரதிஷ்டா - என்னும் வாக்கியத்தால் எஜுர்வேதம் சிரமெனவும் ருக்குவேதம் வலப்புரத்து சிரகெனவும் ஸாமவேதம் இடப்புரத்து சிரகெனவும் அதர்வணவேதம் வாலெனவும் வேதத்திலேயே அங்ககல்பனை கேழ்க்கப்படுவதால் இவை சிவஞானத்திற்கு அங்கமென்பதிற்றடையில்லை இஃதற்றால் வேதம் அங்கமாயினை தன்றி சிவாவாகமமங்கியாயினதின்றெனின் அஜிதாகமம் - ஶிவஜ்ஞானாங்கம் வேதாங்கம் ஶைவாகமம் ததங்கி ஸம்ஸ்ரயாத் ஸாமஸ்த்யேன ஸம்ஸ்தித: ஶிவ: - என்னும் வாக்கியத்தால் சிவஞானத்திற்கு வேதம் அங்கமாகவும் சிவாகமம் - அங்கியாகவும் - சொல்லப்படுகிறதெனவும் அங்காங்கி பாவத்திறைல் சிவபெருமான் விளங்குகிறுரென வெளியாயினமையினுல் வேதம் அங்கமும் சிவாகமம் அங்கியுமாய் முடியப்பெரும் - அங்ககல்பனைக்கு வேதமும் அங்கிகல்பனைக்கு சிவாகமத்தையும் பிரமாணமாக்கி வியவஹரித்தல் தகுமோவெனின் - சிவாகமம் வேதாதிகமான பரவித்தையென்பதாய் முன்னெடுத்துக் காட்டியுள்ளோமாதலாலும் அங்கம் அங்கியைக்குறித்துணர்த்தாதென்னும் ஞாயமூகத்தாலும் சிவாகமம் வேதவிசேஷமானஸத்பிராமாண்யமென்பது சாதிக்கப்படும் - சிவாகமங்கள் வேதோதக்கிருஷ்டமானஸர்வோத்கிருஷ்டபிரமாணமாயிருப்பின் - யானி ஶாஸ்த்ராணி த்ருஶ்யந்தே லோகேஸ்மின் விவிதானி து । ஶ்ருதிஸ்ம்ருதி விருத்தானி நிஷ்டா தேஷாம் ஹி தாமஸீ । காபாலம் லாகுலம் சாக்தம் பைரவம் பூர்வபஶ்சிமம் । பாஞ்சராத்ரம் பாஶுபதம் ததான்யானி ஸஹஸ்ரஶ: । என்னுங் கூர்மபுராண வாக்கியத்தால் - காபாலம் - லாகுலம் - சாக்தம் - பைரவம் - பாஞ்சராத்திரம் - பாசுபதம் - இவை முதலிய மதங்களை அசுராதி வியாமோஹார்த்தம் சிவகேசவாதிகளிருவரும் கற்பித்தாரெனக் காணப்படுதலின் சிவாகமங்களுக்கு பாதிதமுண்டாகாதோவெனின் அக்கூர்ம புராணத்திலேயே - நிர்மிதம் ஹி மயா பூர்வம் வாமம் பாஶுபதம் ஶுபம் । மோஹாய ஸர்வஜந்தூனாம் வேதவாதவிரோதினே । வைஷ்ணவம் ச ததா தேவி ஶைவம் பாஶுபதம் ததா । ஹரிணா ஹர நிர்மிதம்

[illegible] ॥ என்னும் வாக்கியத்தால் ரஹஸ்யத்திற்கெல்லா ரஹஸ்யமாயும் சூக்குமமாயும் வேதஸாரமாயுமுள்ள பாசுபதவிருதத்தைத்தெறிவிக்கும்ஆகமமந்திரங்கள் முக்தியின்பொருட்டு முன்னரெம்மால் கூறப்பட்டதெனவும் இஃது பூதிசாதன சிவசின்னம் புனைந்த புனிதராயுள்ள முமுக்ஷுக்களால் ஸேவிக்கத்தக்கதென்றும் நிஷ்காம்யர்களாகிய பரமவைதிகசிகாமணிகளுக்கு இதுவேசுருதியெனவுங் கூறியிருத்தலால் இவற்றாலும் சிவாகமங்களுக்கு பரசுருதியென்பதை நிலைநாட்டப்படும். அக்கூர்ம புராணத்திலேயே- [illegible] ॥ என்னும்வாக்கியத்தால் வாமபாசுபதம்-ஸோமம்-லாகுளம் பைரவம் முதலிய மதங்களை அஸுராதி வியாமோகார்த்தமாய் என்னால் கற்பிக்கப்பட்டதெனவும் இவை வேதாகம விருத்தமுடைய துர்மதமாதலின் சாதுக்களால்சேவிக்கத்தக்கதன்றெனவுங் கூறியிருத்தலால் மோகனசாஸ்திர மினத்தென்பதினிது விளங்கும். அன்றியும் - [illegible] ॥ என்னும் வாக்கியத்தால் வாம பாசு பதாச்சாரமும் பாஞ்சராத்திராச்சாரமும் சுருத்யாகமவிருத்ததர்மங்களாதலின் இவ்ற்றையும்பரித்தியஜிக்க கூறியிருக்கின்றது. இக்காரணம்பற்றி வேதாதீத சுத்தசிவஸாக்ஷாத்கார பரவித்தையாம் சிவாகமங்களை மோகனசாஸ்திரமென்பதை பிரமாணமுகத்தால் திரஸ்கரித்தொதுக்கப்படும். இஃதிங்கனமாயின் ஸ்ரீநீலகண்டசிவாச்சாரியார் அவர்கள் பாஷ்யம் ௩-௩-வது சூத்திரத்தில் - [illegible] என்க் கூறியிருப்பதாலும்- [illegible] -என்னும் வாக்கியத்தால் ஆகமத்தி

ஷ்டதர்மங்கள் கேவலதந்திரமென புறக்கணித்தொதுக்கியிருக்க அவைவேதோத்கிருஷ்டமாதல் யாங்ஙனமெனின் பரமேசுவரரு க்கு சுருதிஸித்தமாயுள்ள ஜகதுபயகாரணத்வங் கூறுவதில்அதா வதுநிமித்தகாரணம் உபாதானகாரணம் இவ்விரண்டையுஞ்சுருதி ஸித்தமாய்க்கூறும் ஆகமநிஷ்டர்கள் அபிப்பிராயத்தைஅறியாத வர்களான ஏகதேசிகளான தாந்திரிகர்கள் பிரும்மத்திற்கு உபா தானகாரணமின்றி கேவலம் நிமித்தமாத்திரமேகூறுகிருர்கள். அ துஸரியா ஸரியன்ருவென்னும் ஆசங்கைசெய்து கேவலநிமித்தத் வங்கூறும் பரிணுமவாதிகளையும் விராட்ருபஸிருஷ்டிகேவல நிமி த்தமுடைய ஹிரண்ய கர்ப்பவாதிகளையுங் கேவலதாந்திரகரெனக் கண்டித்தொதுக்குவதால் இவற்றைச் சைவாகமத்திலேற்றி தூஷி க்கமுயன்றதும் வியப்பினும்வியப்பே. பரிணுமவாதமாவதுபிரும் மமே பிரபஞ்சரூபமாய் பரிணமித்ததென்பது. அஃதென்போலெ னின் தங்கம்பல்படித்தான ஆபரணங்களாதல்போலாம். பிரும்மம் ஸத்தாதலின் பரிணுமம்வருதல் யாங்கனம். பரிணுமம் அஸத்தா தலின்தானே பரிணமிக்கக் காரணமில்லை. தங்கம் பல்படித்தான ஆபரணங்களாதற்கு கம்மாளனன்றி தங்கந்தானே ஆபரணமாகா ததுபோல் பிரும்மஞ் செகத்தாய்ப்பரிணமிக்குமிடத்தில் பிரும்ம த்தைஜகத்தாய் பரிணமிக்கச் செய்தகர்த்தாவொருவன் வேண்ட ப்படுவன். இவற்ருல் பிரும்மமஸத்தும் பரிணமிக்கச்செய்த கர்த் தாஸத்துவமாய் முடிதலால் சுருதிகளில் ஸத்தாமாத்திரமாய் பிருமத்தை பிரதிபாதித்திருப்பது பற்றி கேவலம் நிமித்தத்தால் பரிணுமங் கூறுதல் சுருதிக்கிலக்கான அவைதிகமே யாதலா லிவற்றை வைதீகமன்றென்பதாய்க் கண்டித் தொதுக்கப்படும். அப்பிரும்மத்தின் சத்தியால் பரிணமிக்குமெனின் -சத்திநிமித்த மும் பிரும்மம் உபாதானகாரணமுமாய்முடிதலால் முன்னர்பிரு ம்மம் ஜகதுத்பத்திக்கு நிமித்தமென்றதுகுற்றமாய்முடியும். உபா தானகாரணத்திற்கு நிமித்தத்வம் விருத்தமாம். இவற்ருல் பிரும் ம சக்தியால்பிரும்மம் பரிணமிக்கப்பட்டதென்பதுங்கூடாது. இ ஃதன்றி பரிணுமவாதிகளுக்குச்சக்திபொய்யாயிருப்பதால் சக்தி யால்பிரும்மம் பரிணமித்ததென்பதும் பொய்யாம். இவர்களுக்கு ஜகதுத்பத்தியோபொய்யாயிருத்தலின்-[illegible] [illegible] என்னும்லோகோத்பத்தியைக்கூறுஞ் சுருதிவாக்கியங்க

னும் இவர்களுக்குவிருத்தமாம். இங்ஙனம் யாவும் பொய்யாய்க் கூறுவதாலிவரிருப்பும்பொய்யாய்முடிந்துவிடும். இப்பொய்யுடைத்தாயஉறுப்பினர் பிரும்மமும் பொய்யாய் முடிந்துவிடும் இவ்வாறுள்ள நாயம் யலவற்றையும் ஊகித்தறியாது உபாதானகாரணமின்றி கேவலம் நிமித்தகாரணமாத்திரங்கூறிபிரும்மஸ்தானத்தில் சைபர்போட யத்தனிக்கும் இவர்கள் வைதிகஞ் சாலச்சிறிப்புடைத்தே-வேதத்தைகேவலந்தாந்திரிகமெனக்கூறியதேயன்றிசுருதிமூலகமகமான ஜகதுபயகாரணத்வங்கூறும்சைவாகமங்களை அவ்வாறொதுக்கியதன்று வேதத்தால் கூறப்படாதபொருள் யாவுஞ்சிவாகமத்தில் கூறப்பட்டுள்ளதாதலின் சிவாகமத்தை நீக்கின் இங்ஙனம் வைதிகவாதத்திற்கு நாஸ்திகத்வம் வந்துவிடும். லௌகிகம்-வைதிகம்-அத்யாத்மிகம்-அதிமார்க்கம்-மாந்திரீகமெனபேதம் ஐந்துடையது. அவற்றை எண்டெடுத்து விளக்குவோமாக-

[illegible]

காஶ,ெத ॥ என்னும் வாக்கியத்தால் லௌகிகம்-வைதிகம்- அத்யாத்மிகம்-அதிமார்க்கம்-மாந்திரிகம் என பேதமைந்துளதென வும் வைத்யம், க்ஷத்திரிய தர்மமாகிய தண்டநீதியைக் கூறும் ஸ்மிருதி இதிஹாஸம், இந்தமூன்றும் லௌகிக சாஸ்திரமென வும் மீமாம்ஸம் நியாயம் வைசேஷிகம் இந்த மூன்றும் வைதிக சாஸ்திரமெனவும் சாங்கியம் பாதஞ்சலம் வேதாந்தம் இந்தமூன்றும் அத்யாத்மக சாஸ்திரமெனவும் பாசுபதம் காபாலம் மஹாவிரதம், இந்தமூன்றும் அதிமார்க்கசாஸ்திரமெனவும் இருபத்தெட்டு ஸங்கியையுடைய சைவசித்தாந்த ரூபமானசிவாகமம் அனுக்கிரஹஸ்வரூபமானமாந்திரீகமும் இதற்கன்னிய மானயாவும் பரித்யஜித்து மாந்திரிகத்தை கிரகித்தல்வேண்டுமெனவும் ஆத்மலாபத்தை உத்தேசித்து பரமேசுவரரால் சொல்லப்பட்டதென வும் ரிஷிகள் கல்பபேதத்தினால் மோஹத்தால் வேதார்த்தமென வேதாகமவிருத்தமான வசனங்கள் கூறியிருக்கின்றாரெனவும் பரம்அபரமென்னும்பேதத்தினால் சுருதி இரண்டு பிரகாரமாகுமெனவும் ருக்கு யஜுர் ஸாம அதர்வணம் முதலிய வேதங்களும் வேதாங்கமாறும் அபரசுருதி எனவும் நாதோத்பன்னமான சிவாகமம் பரசுருதிஎனவும் இவ்விரண்டு சுருதிகளையும் அறிய வேண்டுமெனவும் விசேஷமான பரசுருதியை நன்றாய் அறியவேண்டுமெனவும் அபரம் பூர்வபக்ஷமும் பரஞ்சித்தாந்தமாகவும் சொல்லப்படுமெனவும் பராபரவிபாகமாய் சிவஞானம்பிரகாசிக்கின்றதெனவும் கூறியிருத்தலால் சிவஞானமுனிவர்வேதாந்தமதத்திற்குவேறாய் சைவமதத்தை ஆகமவாக்கியத்தால்சித்தாந்தித்திருக்கிறாரென துக்கப்படுவதால் யாதுபயன்? வேதாந்தம் அத்யாத்மகமாதலின் அதற்குமேல் அதிமார்க்கம் அதற்குமேலன்றோ சிவாகமமிருக்கின்றது வேதாந்தம் சிவாகமத்திற்கு அடுத்தபடிக்கி கீழ்படி-ரொம்ப கீழ்ஸ்டெப்பிலிருப்பதைஉயர்த்தநினைப்பது எப்படி-வ்ரக்ரூத்யா ஷிவ்ரயிவ்ஷு வெஷாஷெஷவ்ரகாஶி-தம் ! நாஷாஷிஶிவதகவாம்தோமஷெஷவஸநிஶி-தம்॥

என்னும் வாக்கியத்தால் பிரகிருதிதத்வம்முதல் பிரதிவிதத்வ பர்யந்தம்வேதாந்தத்தால்வெளிப்படுமெனவும்—நாதாதிசிவதத்வபர்யந்தம்ஆகமத்தால்வெளிப்படுமெனவும்— கூறியிருத்தலால் வேதாந்தத்தால்எட்டப்படாததத்வங்களைசிவாகமம்

வெளிப்படுத்துவதால் வேதாந்தம்இவற்றைஒட்டிபிடித்துக்கிட்ட
வந்தரமன்று—வேதத்திற்கு உதாத அனுதாதஸ்வரங்கள் அமைந்
துள்ளதுஸ்தோத்திரஞ் செய்யும்பொருட்டேயன்றி உபாஸனா
பாஸ்யபேதம்நோக்கியன்று இந்தஸ்வரம் சிவாகமத்திற்கில்லாத
தாலும்சுலோகரூபமாயிருத்தலாலும்—பரசுருதிஆகாதென்பாரா
யின்—வேதம்ஷட்ஜமமத்தியநிஷாதகாந்தாராதிஸப்தஸ்வரமில்லா
ததால் அபஸ்வரமாயிருக்கிறதென ஸங்கீதஞ்ஞர் குறைகூறுவரா
யின்இவரென்செய்வர். வேதத்திற்கேற்பட்ட ஸ்வரம் இதுதான்
என்பதைத்தவிர தோடி பைரவி கானடாகௌரீ மனோஹரீ முத
லிய ராகங்களில் வேதத்தைப்பாட மாட்டாராதலின் அதனதற்
குள்ள ஸ்வரத்தைத்தவிர நம்மால்கற்பித்தல்கூடுமோ. வேதம் நா
ன்காயிருத்தலால் யஜுர்வேதத்திற்கு ருக்குவேத ஸ்வரம் மாறு
படும் ருக்வேதத்திற்கு ஸாமவேதஸ்வரம் மாறுபடும். ஸாமவேத
த்திற்கு அதர்வணவேதஸ்வரம் மாறுபடும். இவற்றுள் எந்தவேத
உதாத அனுதாதம் சரி எந்தவேத ஸ்வரம் பெசகு அதனதின்
ஸ்வரம் அதனதற்குச்சரி என்பதுபோல் சிவாகமும் சுலோகரூ
பமாய் அமைந்துள்ளதும் சரி இவ்வுண்மை நீற்று ஸ்வரம் சுரு
தி லயம் அந்தபிராணம் பஹிப்பிராணம்முதலிய பரதலக்ஷணங்
கள் வேதாதீதமாகிய பரவித்தைக்கு வேண்டுமென்பது வேதமறி
யாதோர் செயலேயாகும். வேதம்பதார்த்தலக்ஷணமின்றி ஸ்துதி
பரமான தடஸ்தலக்ஷண முடையதாதலின். ஸ்தோத்திரத்திற்
கு உதாத அனுதாத ஸ்வரங்கள் வேண்டப்படும் சிவாகமங்கள்
கேவலம் ஸ்துதி பரமல்லாத பதார்த்த நிச்சயமும் ஸ்வரூபஞான
முமாயிருத்தலின் ஸ்வரம்-இம்மெய்நூலிற்கு அனவச்யக மாகும்
ஸ்வராதீதவஸ்து பிரதி பாத்தியமுடைய சிவாகமங்கள். ஸ்வரம
ல்லாதிருக்கிறதென்னும் துர்வாதம் திரஸ்கரித்து இவ்வாதிகளை
அவைதீகரென வேறுபிரித் தொதுக்கப்படும். சிவாகமங்களி
லே ஹ்ருஸ்வம் தீர்க்கம்-புலுதம்-ஸூக்ஷ்மம்-அதிஸூக்ஷமமெ
னஉச்சாரண பேதம் கூறியிருத்தலின் இவ்வுச்சாரணபேதங்கள்
குருமுகமாய் உணர்ந்துய்தல்பற்றி பரிபவமற்றோர்க்கு இவற்றை
யுணர்த்தல் கூடாதென்னும் பரவித்தையின் நியாமகமுணர்ந்து
இவற்றை விரித்துணர்த்தாது சுருக்கிக் கூறவிடம் பெற்றது.
இவ்வாறுள்ள ஐவகைப்பட்ட உச்சாரணத்தின் முன் உதாத

அனுதாத ஸ்வரங்கள் தலைநீட்டி வாழுதலெங்ஙனம்-இவற்றால் அபரவித்தை ஸ்வரமுடையதும் பரவித்தை ஸ்வராதீத உச்சாரணபேதமுடையதுமாய்காணப்படுதலின் இவற்றில்ஸ்வரவியவஸ்தை ஏற்படுத்தமுயன்றதும் விசாரணைக் குறைவாகும். இவ்வதிமகிமைதங்கிய பரவித்தையாம், சிவாகமங்கள் பிராம்மண பரிக்கிரிஹீதமன்றெனவும் சூத்திரர்க் குறியதெனவுங் கூறி சிற்சிலர் தம் அவைதிகத்தை நிலைநாட்ட வெளிவருகிறார்கள் அவை தப்போ ஒப்போவென்பதை விசாரிக்கபுகுவோமாக-யாம் முன்னர் வேதம் அபரவித்தை யெனவும் சிவாகமம் பரவித்தையெனவும் சுருதி யுக்தி அனுபவம் முதலிய நியாயவாயிலாய் நிரூபித்துள்ளோமாதலின் அபர சுருதி தமக்கெனவும் பர சுருதி சூத்திரர்க்கெனவும் ஓதுக்கப்புகுவோர்-சூத்திரரினுங் கடையாவரேயன்றி பிராம்மணராதல் யாங்ஙனம் வேதம் பிராம்மண க்ஷத்திரிய வைசியபர்யந்தமே அத்யயநம் செய்யவிதித்திருக்க சூத்திரரும் படிக்கவிதித்துள்ள சிவாகமம் பரசுருதியாதல் யாங்கனமெனின் அபரசுருதி கேவலம் கர்மப்பிரதி பாத்யமுடையதும் பரசுருதி ஞானப்பிருதி பாத்யமுடையதுமாய் யிருத்தலால் கர்மத்திற்குறியார்பிராம்மணாதி வைசியபரியந்தமுள்ளவர்களெனவும் ஞானத்திற்குறியார் பிராம்மணாதி பரிபவமுடைய ஸர்வான்மாக்களும் மென்க்கூறியிருத்தலால்ஞானம்தமக்கங்கீகாரமன்றி அவற்றைசூத்திரர் பரந்தொதுக்கி கர்மபலதாதாவாய்நின்றனுக்கிரகிக்கும் சிவபெருமானை இழந்த இவ்வாதம் நாஸ்தீகத்வமெய்தப் பெறுதலால் இவர்கள் ஆஸ்திகராதல் யாங்ஙனம் -சிவாகமாகிய பரவித்தை -ஸம்ஸாரஜ்ஞ விஷ்ரா நாம-என்னுஞ் சுருதிவாக்கியத்தால் ஸர்வவித்தியாபிரதி பாத்யங்கேட்கப்படுதலால் இவைதீவிரதர பரிபாகிகளாகிய ஸர்வான்மாக்களுக்கும் முத்தியின் பொருட்டுப்பயன்படத்தக்கவை. இவற்றால் முத்திநிசையில் பரிபாகமொன்றுமாத்திரமே விளங்கப்படுவதன்றி வருணதாரதம்ய மின்றுதலால் பரிபாகமல்லாத உயர்ந்தவருணிகளுக்கும் சிவாகமங்களில் அதிகாரமல்லாது போய்விடும்-தீக்ஷாவிஹீ நவிப்ராஃ்ராஃ க்ஷத்ரிய வணிஃ ஶூத்ராஃ ஜாதய: । வ்ருத்திஶிவஶாஸ்த்ரேஷு நைவ ரௌரவம் நரகம் வ்ரஜேத் ॥ என்னும் பரவித்தியா வாக்கியத்தால் சிவதீக்ஷை யல்லாத பிராம்மணன் முதல்சூத்திரரிறுதியாக சிவாகமபடனஞ்செ

ய்யக்கூடாதெனவும் மீறிச்செய்வாராயின் நரகத்தை அடைவரெனவும் கேட்கப்படுதலால் இப்பரவித்யாத்யயனத்திற்கு அபர ஸம்ஸ்காரமாகிய உபனயனாதி கர்மஸம்ஸ்காரம் போதாதென்பது கருத்து. இப்பரசுருதி அத்யயனத்திற்கு அபரசுருதியால் ஸம்ஸ்கறிக்கப்பட்ட திவிஜத்வஸித்தி போதாது- ஜந்மநாஜாயதே ஶூத்ர: கர்மணாஜாயதே த்விஜ: என்னும்அபரசுருதிவாக்கியத்தால்ஜன்மாவால் சூத்திரத்வமும் கர்மாவால்த்விஜத்வமுங் கூறுதல்பற்றிசூத்திரற்குவேதாதிகாரமிவர் பரத்தேவந்துவிடுவதால் சூத்திரர்வேதாத்யயனஞ் செய்யக்கூடாதென்னும் வேதவாக்கை இவர்கள்உல்லங்கனஞ்செய்தவர்கள் ஆகின்றார். இவற்றாலிவ்வபர ஸம்ஸ்காரிகளைவேதாத்யனத்திற்கு லாயக்கற்ற சூத்திரரெனவே திரஸ்கரிக்கப்படும். பிராம்மணருக்குத் விஜத்வஸித்தி வந்தவிடமென்பாராயின்-ஜந்மநாஜாயதே ஶூத்ர: என்பதிவர் பிறமாணமாதலால் ஜன்மாவிலுள்ள சூத்திரற்குத்தானே வேதாத்யயனங் கூடாதென சுருதிகள் புறக்கணித்தொதுக்கிஇருக்கின்றது. ஜன்மாவால் சூத்திரத்வமுடைய இவர்கள் இவ்விதியை மீறி நடப்பதெங்ஙனம். கர்மாவால்த்விஜத்வம்வந்துவிடுவதால் அவ்விதி எமக்குடன்பாடென்பாராயின் சூத்திரனுக்கு த்விஜத்வம்வந்து வேதாதிகாரம்வந்துவிடும் என்னுமிவர்கள் ஸமாதானத்தையாவரொப்புவர்-சூத்திரற்கு வேதாத்யயனம் விலக்கென்பதையாவருமங்கீக்ரித்துள்ள விஷயமாதலின் சூத்திரற்குக் கர்மாவால் த்விஜத்வம் வந்து வேதாத்தியனத்தில் அதிகாரம்வந்து விட்டதென்னும் இச்சூத்திரர் வார்த்தையை ஸத்பிராம்மணர் அங்கீகரிப்பரோ கண்டோக்தியாய் சூத்திரரெனக்கூறிக்கொள்ளுமொருவர்வேதாத்யனத்திற்கு பரிபவமுடையார் யாமெனமுந்தி நிற்பதுயாங்ஙனம்-இவற்றால்சூத்திரற்கு வேதாத்யயனம் விலக்கென்பதுபிரஸித்தவிதியாதலின்-சைவஞ்சூத்திரற்குறியதெனக்கூறிதாஞ்சூத்திரத்வம் பெற்று அத்யயனவிலக்காய் நிற்பது இவர்கள் பரத்தன்றி சைவஸம்யிகள் பரத்தன்று. சிவபிராம்மணர்களுக்குஜன்மாவால் பிராம்மணத்துவமுங் கர்மாவால் சிவத்வமு முண்டாகின்றபடியால் வேதாகமாத்யயனதர்மம் அவர்பரத்து நிற்கின்றது இவற்றால் வேதாத்யயனத்திற்கு இவர்களே யுரியவரென்னும் வாதந்திரஸ்க்ரித் தொதுக்கப்படும். ஆதிசைவ பிராம்மணர் சிவபெருமான்

திருமுகத்தினின்று வெளிவந்தவரென பரவித்தை கூறுவதால் சிவம் பிராம்மணராதல் பற்றி ஜன்மாவினாலேயே பிராம்மணத் வஸித்தி இவர்களுக்கேற்பட காரணமாயிற்று-ஸம்ஸ்காரத்தாலும் சிவமாந்தன்மையுடைய சிவதீக்ஷா ஸத்பாவத் போதகமாயிருத்தலின்-இவ்விருதிறத்தாலும் பிராம்மண ஸ்வரூபியாகிய சிவபெருமானுக்கு ஸஜாதியராகின்றர்-இக்காரணம்பற்றி இவர்க்குற்ற பிராம்மணத்வத்தை யாவராலும் அசைக்கமுடியாப் பொருளேயாகும்-இவற்றைசிறிதுமுற்று நோக்காது சைவஞ்சூத்திரற்கேயுறியதெனக் கூறுவோர் தமக்குற்ற சூத்திரத்வத்தை வெளிப்படுத்தற் பொருட்டேயன்றே-ஈசாநவக்த்ராஜ்ஜாதா ஹ்யாதிசைவாஸ்ஸ்மிருதா: | தஸ்மாச்சிவப்ராஹ்மணா: ப்ரோக்தாஜந்மனைவ நஸம்சயா: | தஸ்மாதாதிசைவாநாம் ஸர்வேஷாம் சிவஸேவ்யா | ப்ராஹ்மணஸ்யதஸ்யைஷாம் த்விஜாதேரதிகாரிண: | என்னும் பரசுருதிவாக்கியத்தால் பிராம்மணராகிய பரமேசுவரரது முகத்தின்னின்று ஆதிசைவர்கள்வந்ததால்இவர்களுக்கு ஜன்மாவினாலேயே பிராம்மணத்வஞ் சித்திக்கிறதெனவும் இவர்களுக்கு கர்மத்தால் நாசரகிதமாகிய சிவத்வம்வந்து விடுவதால் அதிமஹிமைதங்கியத்விஜர்களாகிறரெனவும் த்விஜத்வலக்ஷணங் குறிக்கப்பட்டிருத்தலின் இவர்களின் முன்ஜன்வால் சூத்திரத்வமெய்தப் பெற்றுள்ளார் பிராம்மணராதல்யாங்னய் இவற்குற்றசூத்திரத்வத்தைநோக்காது வேதந்தமக்கேஸர்வமான்யமாய் விடப்பட்டது அவற்றால்யாம் வைதிகரென தற்புகழ்ச்சிகூறுதல் குற்றமாம் வைதிகமென்பது ஜன்மாவாலுங்கர்மாவாலும் பிராம்மணத்வம் பெற்றோர்கன்றே பொருந்தும் ஜன்சூத்திரத்வமுடைய இவர்பரத்து வைதிகம் ஏராதுஏராது. இவற்றால் பரமபரமென்னும் உபயசுருதி அத்யயனம் சிவபிராம்மணர்களாகிய ஆதிசைவப்பிராம்மணர்களுக்கும்-பரசுருதி அத்யயனம் ஜன்மசூத்திரர்கள் கர்மத்தால் சிவமாய்த் விஜத்வஸித்தி பெற்ற ஸத்சூத்திரருக்கும் விதித்துள்ளது தீக்ஷாவிஹீநவிப்ராத்யா: ச்ரவண-ஸ்ம்ருதிஜாதய: | படந்தி சிவசாஸ்த்ரேஷு ரௌரவம் நரகம் வ்ரஜேத் | என்னும் பரசுருதி வாக்கியத்தால் சிவதீக்ஷையல்லாத பிராம்மணர்-க்ஷத்திரியர்-வைசியர்-சூத்திரர் முதலினோரும் சிவஞானமயமா பரவித்தையாகிய சிவாகமங்களை நோக்குவராயின் ரௌரவாதி நரகத்

ந்தையடைவரெனக் கூறுதல் பற்றி நம்பூர்வபக்ஷியார் ஜன்மாவால் சூத்திரத்வமெய்தப் பெற்றிருத்தலின் வேதாதிகாரமுமற்று சிவதீக்ஷாதி ஸம்ஸ்காரமின்மையின் சிவாகமம் முதலிய சிவசாஸ்திர படனத்திற்கும் அர்ஹரல்லா தொழிந்துவிடுவார் சிவாகமம் அப்பிராமாண்ய மெனக்கூற வெளிவந்ததாலிவற்கு வேத சிவாகம பாஹ்யத்வம் உடன் பாடாயின ஜன்மசூத்திரத்வ முடைவ சைவசமயததுள்ள ஸத்சூத்திரி பரஸம்ஸ்கார விசேஷத்தால் பரசுருதி அத்யயனத்திற்கு அதிகாரியாய்நிற்கின்றார் பூர்வபக்ஷியாகிய சூத்திரர்கள் பரசுருதிக்கும் விலக்காயிருத்தலின் அபரசுருதியாகிய வேதந் தமக்குடன்பாடன் றென்பதை ஏனின்னமிவர்களூகித்தரிந்திலர் இக்காரணம் பற்றி வேதமொன்றே பிறமாணம் சிவாகமம் அப்பிராமாண்யமெனக் கூறுபவற்கு சூத்திரத் வஸித்தியுண்டாய் வேதாதிகார மிழந்து அவைதிகத்வம் ஸித்திக்கப் பெருதலால் அபரஸம்ஸ்காரமாகிய உபனயனாதிஸம்ஸ்காரத்தோடு பரஸம்ஸ்காரமாகிய சிவதீக்ஷை செய்யப் பெருவாராயின் இவர்கள் மஹா சைவத்வஸித்தி பெற்று ஆச்சார்ய முகமாய் ஸம்ஸ்கார விசேஷத்தால் ஜன்மாவால் பிராம்மணத்வமும்கர்மாவால் சிவத்வமும் பெற்று த்விஜத்வசித்தி பெருகின்றார் அங்ஙனமாயின் இவர்களுக்கு வேதாகமாத்யயனத்தில் அதிகாரம் வந்து விடும் இவ்வாரன்றி கேவலம் கர்மபரமாயுள்ள ஸ்மிருதி ஸம்ஸ்காரமாகிய அபரஸம்ஸ்காரத்தால் வைதிகம் வந்துவிடுமென்னும் வாதந்திரஸ்சுரிக்கப்படும்-[illegible] | என்னும் பரசுருதி வாக்கியத்தால் ஸம்ஸ்காரம்

பாஹ்யம் அந்தரம்மென இரண்டு பேதமுடையதெனவும்பாஹ்
யம் கர்மஸம்ஸ்காரமும் அந்தர் நிஷ்டம் ஞான ஸம்ஸ்காரமுமா
மெனவும் ஸ்மிருதியில் சொல்லப்பட்ட ஸம்ஸ்காரங் கர்மஸம்ஸ்
காரமும் சிவாகமத்தால் சொல்லப்பட்ட ஸம்ஸ்கார ம் ஞானஸம்
ஸ்காரமுமாய் முடியுமெனவும் ஸ்மிருதி ஸம்ஸ்காரத்தால்ஸ்வர்க்
காதி புவனபோகமே பல பிராப்தி யெனவும் சிவாகம ஸம்ஸ்கார
த்தால் முக்தியே பல பிராப்தியாமெனவும் ஸ்மிருதி பிராம்மணு
தி வரண ஸம்ஸகாரமும் சிவாகமம் பிராம்மணுதி உபாஸனு மார்
க்க ஸமய ஸம்ஸ்காரமுமாய் முடிதலால் ஸமயஸம்ஸ்காரமில்லா
திருப்பருயின் ஜன்மத்தால் சூத்திரரெனக்குறிக்கப்படுமெனக்கூ
றியிருத்தலால் ஸ்மிருதியும் பிராம்மணத்வஸித்திக்கு சிவாகமஸ
ம்ஸ்காரத்தையன்றோ அபேக்ஷித்து நிற்கின்றது சிவாகஸம்ஸ்கா
ரமல்லாவிடில் ஸ்மிருதியால் ஜன்ம சூத்திரத்வந்தானேசித்திக்கப்
பெறும் இவற்றுல் வரண ஸம்ஸ்காரமாகிய அபர ஸம்ஸ்காரம்
பெற்ற பிராம்மணர்கள் ஸமய ஸம்ஸ்காரமாகிய பரஸம்ஸ்காரஞ்
செய்யப் பெறாதிருப்பராயின் வரணத்தாலுயர்ந்த பிராம்மணரா
யிருப்பினும் ஸமயங்கைவரப் பெறாததால் ஸமயத்தால் தாழ்ந்
து சூத்திரரிலுங்கடையாவார் அபரஸம்ஸ்காரம் கர்மஸம்ஸ்கார
மேயாதலால் கர்மம் ஜடமாதலால் கர்மபலதாதாபரமேசுவரராத
ல் பற்றி இப்பர ஸம்ஸகாரத்தை இழந்து நிற்கும் பிராம்மணர்
கள் நாஸ்திகரேயாவார் இன்னுத்திகர்க்கு அத்யயனம் பயன்
படாதொழிந்து விடும் பௌத்தர் முதலிய பிராம்மணர்களும் அத்
யயனஞ் செய்திருக்கின்றார் இவ்வபர ஸம்ஸகாரிகளும் அத்யய
னஞ் செய்திருக்கின்றார் பௌத்தர் கூறுந் தர்மம் வேத விஹித
தர்ம்ம மல்லாதது போல் உபாஸனை யற்ற அபரஸம்ஸ்காரிக
ள் கூறுந் தர்மமும் வேதவிஹித தர்மங்களன் றென்பதாய் வே
று பிரித்தொதுக்கப்படும் இன்னுத்திகர்க்கு வேதத்தாலாய பய
னென்னே வேதாத்யயனம் புனகிராப் முதலிய அசேதன பதா
ர்த்தத்திலுமிருக்கின்றது வேதமென்னும் சப்தகிரஹணஜடவஸ்
துக்கள் கர்த்திரு போக்திருத்வவிஷயபோதனுகர்வில் அறிவின்
மையாதலின் புனகிராப் வேதவாக்கியம் பயன்படாதது போல்
இவ்வபர ஸம்ஸகாரிகள் அத்யயனமும் பயன்படா தொழிந்து நி
ற்கும் இவற்றுல் அத்யயனஞ் செய்த மாத்திரத்தாலே வைதி

கத்வ ஸித்தி வந்துவிடுமென்பது தப்போ ஒப்போவென்பதை விவேகிகள் ஊகித்தறிவார்களாக வேதசிவாகமிரண்டினுட்கருத்த றிந்து அபரம்பரமென்னும் ஸம்ஸகார மிரண்டுடையார்க்கன்றோ வைதிகத்வஞ்சொந்தப் பொருளாம் இவ்வாறுள்ள ஞாயம் பல வுளவற்றால் அபரசுருதி அத்யயனத்திற்கு உபனயனாதி ஸம்ஸ் காரமும் பரசுருதி அத்யயனத்திற்கு சிவதீக்ஷாதிஸத்பாவஸம் ஸ்காரமும் பெருதல் வேண்டுமென விதிமுகத்தால் விளங்கலால் இவ்வுபய சுருதிபோதமுணர்ந்துபிரும்ம ஞானம்பெற்றோர் பிரா ம்மணராதல்பற்றி பிரும்மஞானவிஹீன ஸம்ஸ்கிருதர்கள் பிரா ம்மணருதலெங்கனம் இக்கருத்தை யுட்கொண்டேயன்றோ ஸ்ரீ நீலகண்ட சிவாச்சாரிய சுவாமிகளும் அபரவித்யா பிரும்ம ஸூ த்திர பாஷ்யத்திலும் - வயம் து வேத ஶிவாகமயோர் பேதம் ந பஶ்யாம: வேதோऽபி ஶிவாகம இதி வ்யவஹாரோ யுக்த: தஸ்ய தத்கர்த்ருகத்வாத் | அத: ஶிவாகமோ த்விவித: த்ரைவர்ணிகவிஷய: ஸர்வவிஷயஶ்சேதி | வேத: த்ரைவர்ணிகவிஷய: ஸர்வவிஷயஶ்சாந்ய: உபயோரேக ஏவ ஶிவ: கர்த்தா - [illegible] - என்னும் வாக்கியத்தால் வேதசி வாகமங்களுக்கு பேதங்காண்கிலோம் வேதமே சிவாகமமென வி யவஹரிப்பது யுக்தமெனவும் இவ்விரண்டிற்கும் கர்த்தா ஒருவ ராகிய சிவபெருமானே யெனவும் இவற்றால் வேதமும் சிவாகம மெனப்பெயர் பெருமெனவும் இச்சிவாகமம் இரண்டு பிரிவுடை

த்தானதெனவும்ஒன்று திரியீவர்ணிகவிஷயமும்மற்றொன்று ஸர்வவிஷயமுமாய் முடிபுருமெனவும்வேதந்திரயீவர்ணிகவிஷயமும் சிவாகமம் ஸர்வவிஷயமுமாய் இவ்விரண்டிற்கும் சிவபெருமானாகிய ஒருவரே கர்த்தாவெனவும் ஈசானஸர்வவித்யானாம் என்பது சிவாகமோத்பத்திக்கும் அஸ்யமஹதோபூதஸ்யநிசுவஸிதமெதத் ருக்வேதோஎன்றதுவேதோத்பத்திக்கும் பிரமாணமாகக்கூறி அனேக மார்க்கங்களோடுகூடிய அஷ்டாதசவித்தைகள் அதாவது ௧அ வித்தைகளுக்கும் ஆதிகர்த்தாவாயுள்ளவர் சூலபாணியாகிய பரமேசுவரரேஎன்பது சுருதிநியாயமெனவும் இவற்றால் வேதத்திற்கு சிவபெருமான் கர்த்தாவாகிறாரெனவும்சிவாகமங்களுக்கும் பரமேசுவரரே கர்த்தாவாகிராரெனவும்இவ்விரண்டிற்கும்கர்த்தா ஒருவராயிருத்தலால் இவ்விரண்டினாலும் ஒரேஅர்த்தத்தை நிர்ணயித்தறிதல்வேண்டுமெனவும் இவற்றால்இவ்விரண்டும்பிரமாணபூதமாமெனவும் சிவாகமங்களில் பஞ்சபிரும்மபிரணவ பஞ்சாக்ஷர பிராஸாதாதி மந்திரங்களுக்கும் பதி பசு பாசம் முதலிய வஸ்துவியவஹாரங்களுக்கும்பஸ்மோத்தூளன திருபுண்டிரதாரணலிங்கார்ச்சனம் உருத்திராக்கதாரணாதிபர தர்மங்களுக்கும் இதற்கன்யமானமற்ற எல்லா தர்மங்களுக்கும் இந்த வேதாகமமிரண்டும் ஸமமாகவே காணப்படுவதால் அபரதர்மம் பரதர்மம் இரண்டிற்கும் பிரமாணபூதங்களாகிய வேதாகமங்கள் ஒரு கர்த்தாவாகிய பரமேசுவரருக்கே பரத்வஞ்சாதித்து சிவாகமத்திற்கே கார்த்தபரமாய் நிற்றலின் விரோதமாகாதெனவுங் கூறியிருத்தலால் சிவாகமம் பரவித்தையென்பதிவற்றானுஞ் சுட்டப்படும் ஆகமம் வந்ததென பொருளாதல்பற்றி பசுபதிபரமேசுவரர் திருமுகமைந்தினாலும் வெளிவந்த வேதசிவாகமங்களை சிவாகமமெனவே ஒன்று சேர்த்து கூறப்படும் ஆகமம் என்பது வேதத்திற்கே உறிய உயர்ந்த நாமமாம் இவைஊர்த்வாதோ முகங்களின் வழியாய் வெளிவந்துள்ளவை ஊருத்வம் ஈசானமுகமாதலால் அதினின்று தோற்றிய சிவாகமங்களாகிய பரசுருதிக்கு ஸர்வவித்யா பிரதிபாத்யம் வேதத்தால் குறித்தோதப் பட்டிருக்கின்றது அதோமுகம் தத்புருஷாதி நான்குமுகங்களே யாதலால் அதில் தோற்றிய அபரசுருதியாகியருக்காதி நான்கிற்கும் வேதத்வம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது இவற்றால் ஊருத்வமுகத்தால் வெளிவந்ததை பரமெ

ணவும் அதோமுகத்தால் வெளிவந்ததை அபரமெனவுங் கொள்ளப்படும் வேதம் பிராமணக்ஷத்திரிய வைச்யபர்ந்தமே பயன்படத்தக்கவை சிவாகமம் பிராமணாதி சூத்திரபர்யந்தம் பக்குவான்மாக்கள் யாவருக்கும் பயன்படத்தக்கவை வேதம் திரிவீவரணபரமாய் கேவலங்கர்மபிரதி பாத்யமாயும் ஞானசாதகமாயும் இருத்தலின் பிராம்மணாதி வைசியபர்யந்தமே சொந்தம் பாராட்டத்தக்கவர்கள் சிவாகமம் ஞானகநிஷ்டசுத்தாத்வைத சிவஸாக்ஷாத்காரம் பெற்றிருத்தலின் பரிபாகமுடையார் யாவருஞ் சொந்தம் பாராட்டத்தக்கவர்கள் திரிவிவர்ணிகள் கர்மானுகுண்யமான உபநயனாதி அபரஸம்ஸ்காரம் வேதாதிகளால் பெற்றிருப்பினும் ஞானகநிஷ்டஸமயஸம்ஸ்காரமாகிய பரஸம்ஸ்காரஞ் செய்யப்பெறாதிருப்பராயின் இவர்கள் பிராம்மணத்வம் வஸித்திக்கப்பெற்றவர்களாகார் பிராம்மணர்பரமேசுவரரும் விஷ்ணுக்ஷத்திரியரும் பிரும்மாவைச்யரும் இந்திரன் சூத்திரனுமாய் வேதங்களிலுத கறிக்கப்பட்டிருத்தலின் சிவத்வஞ்சித்திக்கப் பெறாதோர்க்கு பிராம்மணத்வஸித்தியுண்டாதல் யாங்ஙனம் திரிவீவர்ணிகபரத்தில் அபரகாயித்திரி யொன்று மாத்திரமே உபதேசிக்கப்படும். ஸர்வவிஷயபரஸம்ஸ்காரத்தில் பரகாயித்திரி உபதேசிக்கப்படும். அபரகாயித்திரி சக்தியும் பரகாயித்திரி சிவமுமாய் முடிதலால் சிவம்மங்களனுதல் பற்றி சிவகாயித்திரியையெழந்த சக்திகாயித்திரி அமங்களத்வமெய்தப்பெரும் இவற்றால் சிவகாயித்திரி இழந்து சக்தி காயித்திரியைமாத்திரமே ஜபிக்கும் பிராமணர்களும் அமங்கள பிராம்மணராவார்.

யயாஐ்ரமஉ-கிஂசுஜஹீாவெநஹீதளமஜவஹூகா | கஹீக்ஷிதாவி-கஂஷிஂமஂசுஜஹீாஹீதளஉெஹஹரூ: |

என்னும் பரசுருதி வாக்கியத்தால் வனத்திலுள்ள யானைஸிம்மத்தைக் கண்டு அஞ்சுவதுபோல் அதீக்ஷதரால் பூஜிக்கும் சிவலிங்கத்தில் சிவபெருமான் ஆவிர்ப்பவிக்க அஞ்சுவரெனக் காணப்படுவதால் பரஸம்ஸ்காரசிவதீக்ஷையல்லாதோர்சிவபூஜையும் அஸத்பாவமுடைய தென்பதிதன்கருத்து சிவபெருமான்ஸத்தாயிருத்தலால் ஸத்தை பூஜிப்பதில் அஸத்பாவம் வருதற்குக் காரணம் யாதெனில் சிவபெருமான் பதியும் ஆன்மாக்கள் பசுவுமாயிருத்தலால் இப்பசு சிவகைங்கர்யமாகிய ஸத்கார்யத்தைச் செய்ய

த்தனிக்கின்றது. ஒரு காரியத்தைச்செய்ய நிமித்தோபாதானஸமவாயம் முதலிய மூன்று காரணம் வேண்டப்படுவதால் இச்சிவகைங்கர்யமாகிய காரியத்திற்கு ஆத்மா நிமித்தனும் உபாதானஞ் சரீரமும் ஸஹகாரீகாரணங் கைகளுமாய்க் கொள்ளப்படும். இம்மூன்றுஞ்சிவாகாரமான பாவம் வருதல்வேண்டும். சிவாகாரபாவமில்லாவிடில் சிவஸஜாதீய பாவன்னீங்கி பசுகரணமாய் நிற்றலின் பதிபாவத்திற்கு விஜாதீயமாய் நின்றுவிடும். விஜாதீயத்வம் பதிஸ்வரூப பரசிவத்தையும் பசுரூபமாக்க முயற்சித்து நிற்கும் இத்யாதி காரணத்தால் ஸத்பாவமுடைய சிவபூஜை அஸத்பாவப்பட்டு நிற்றலின் சிவதீக்ஷையல்லாதோர் சிவபூஜை குற்றமேயாம்.

வேதாதிமந்திரங்களால் ஸத்பாவம்வருமெனின் வேதாதிமந்திரங்கள் சிவபூஜையை விதிமுகத்தால் விளக்க வெளிவந்தநின்று. இவற்றால் அந்தர் நிஷ்டதர்மபரஸம்ஸ்காரம் விளங்கதபெறு இவைவிதித்துள்ள சிவாகமத்தாலன்றி ஸத்பாவம்வருதல் கூடுமோ சிவாகமத்தால் ஸத்பாவம் விளங்கப்பெறுத லெங்கனமெனின் முதலில் சிவகைங்கிரியமாகிய காரியத்திற்கு நிமித்தபூதமான ஆன்மா பசுவாயிருத்தலால் இப்பசுவை அந்தர் நிஷ்டாக்னியால் தகித்து திரும்ப மிருதமான ஆத்மாவை அமர்தத்தால் உண்டாக்கி பஞ்சப்ரம்ம மயமாய் தியானித்து ஞானமயமான சரீரங்கர்ப்பித்து ஹிருதயாதி ஷடங்கம் பர்விக்க சிவாகாரமாம். இவ்வாறே உபாதானகாரணமாகிய சரீரத்தையும் அங்கன்யாசத்தால் சிவாகாரமாக்கி ஸஹகாரிகாரணமாகிய கைகளையும் சிவாகாரமாக்குவது கரந்யாஸாங்கன் யாசமாகும். இவ்வாறுள்ள ஸம்ஸ்காரத்ரயங்களும் பரதர்மத்தால் விளங்கப்படுவதன்றி அபர தர்மத்தால் இவை மருந்திற்குங்கிட்டுவதரிதாய் முடியும். அபர தர்மத்திலோ அஸத்பாவமே வெளிவந்திருக்கும் அஃதெங்கன மெனின் ப்ரதர்மத்தில் சிவாஸ்த்ராயஹூம்படியென கையைமுதலில்மார்ஜனம்செய்து இது பசுகரணமாகிய கரங்கள் சிவாஸ்தரத்திலுண்டான சிவாக்னியால் தெகிக்கப்பட்டதாகும். பின் சக்தியை வெளஷட்என புருமத்யத்தில் அஞ்சலிசெய்வது இது மிருதமான கை அமர்தத்தால்திரும்ப உண்டான பாவமாகும். அதன் பின் சிவாஸனம் சிவமூர்த்தி சிவமூலத்தால் உள்ளங்கையில் சிவனை ஆவாகித்து ஐந்து விரல்களையும் மீசானுதி பிர்ம்மபஞ்சகமாய்பாவித்துவித்யாதேகஸ்வ

ரூபமான ஞான சரீரம் கற்பித்து திருநேத்ரமுண்டானதாய் பாவித்து ஹிருதயாதிஷடங்கங்கற்பித்து சிவாகாரமாக்குவது பரஸம்ஸ்காரக ரன்னியாசமாகும். அபரசம்ஸ்காரத்திலோ இச்சத்பாவம் விளங்கப்பெறு. அங்குஷ்டாப்யாநம: தற்ஜனி ப்யாநம: மத்யமாப்யாநம: அநாமிகாப்யாநம: கனிஷ்டிகாப்யாநம: கறதலகறப்ருஷ்டாப்யாநம: யென கையாகவே அஸத்துரூபமான அபரஸம்ஸ்காரத்தின் கரன்யாசமாதலின் கட்ட விரலாயனம: ஆள்காட்டி வெரலாயனம: நடுவிரலாயனம: அணிவிரலாயனம: கடைவிரலாயநம: கை பின்புறம் முன்புறமாயனம: யென்னும் அஸத்பாவமாம் கருங்கன்யாஸ அபரஸம்ஸ்காரிகள் சிவசாக்ஷாத்காரபரஸம்ஸ்காரஸதாசாரமுடையோர்களை அவைதிகரென தூஷிப்பது கிறிஸ்துவர் தங்களை ஞானியென தற்புகழ்ச்சிகூறுதலை யொத்திருக்கும் இஃதன்றி வஶு-ஹோ ஒஷெஹ வஶு-ஂவஶா என்னும்அபரசுருதி வாக்கியத்திற்கு பசுவென்பதை பிராணி ஸாமான்யமாய் பொருள் செய்து பறக்கிற பிராணியில் பட்டம் நீக்கியும் ஊருகிற பிராணியில் படுக்கும் கட்டில் நீக்கியும் மற்ற பிராணி யாவற்றையும் கொன்றுதின்ன மனுஸ்மிருதி விதித்திருக்கின்றது. இஃது அபரசுருதியின் அந்தர்கதமென்பது பூர்வபக்ஷிகளது அபிப்பிராயமாகும். பரசுருதியிலோ பசுவென்பது ஆத்மாவாகக்கொண்டு ஆத்மா ஆணவம் மாயை கர்மமென்னும் மூன்று பாசத்தால் பந்திக்கப்பட்ட பசுவேயாதலால் இப்பசுவை பந்தித்திருக்கும்பாசத்தை ஆசாரியன் ஞானாக்னியாகிய சிவாக்கினியால் தகித்து பசுத்வத்தை நிராகரித்து சிவத்வத்யோதகம் செய்வது பசும்வதாவென்னும் அபரசுருதிக்கி சிவாகமம் பொருள் படுத்தி யிருத்தலின் வேதம் ஜீவஹிம்ஸை செய்ய துணிந்திலதென்பது தெற்றெனவிளங்கும் இஃதன்றியும் அஹிஂஸாபூரயொயஃ என்னும்சுருதி வாக்யத்தால் ஹிம்ஸையல்லாதிருப்பதே முதன்மையான தர்மமென்வேதம் விதித்திருக்க இத்திருவாக்கை மீறி சகல பிராணிகளையும் உயிர் செகித்துண்ண வேதம் விதித்துளதாய் மயங்கி அபரார்த்தம் கொண்டு சுருமாம்ஸம் புசிக்க நியமவிர்தம் கைக்கொண்ட இத்துருசாரமுடையார் ஹிம்ஸையற்ற சிவஸாக்ஷாத்கார நிஷ்டானுபூதிபெருஞ் செல்வபரம வைதீகசிகாமணிகளாகிய பரஸம்ஸ்காரம் பெற்றோரை அவைதிகரெனக் குறை கூற வெழுந்தது தம

க்குற்ற அவைதிகத்தை பிறர் மேலேற்றி தூஷிக்கமுயன்றவவஸரமேயாகும். ஹிம்ஸையற்றிருக்குங்கொன்றுதின்னுத்தூய்மையும் பசுத்வநிராகரணமுஞ் சிவத்வத்யோகமும் பிராமணத்வ ஸித்தித்விஜத்வமும் வேதாகம பிராமாண்யமுமுடைய பரமவைதிக சிகாமணிகளை பிராம்மணபிரஷ்டரெனவுஞ் சூத்திரற்குச்சமானமெனதூஷிக்கமுயன்றது. புலைத்தனமுற்றோர் செயலாய் ஒதுக்கப்படும். நம் வேதாகமாதி சற்சாத்திரவாயிலாய் சுறுமாம்ஸம் புசிப்போர் இழிந்தோர் என்பதும் கோ மாம்ஸம் புசிப்போர் புலையரென்பது வெளிப்படுதலால் இவ்விருதிரத்தாரும் ஸத்சூத்திரியில் மிகவுந் தாழ்வுற்று அஸத்சூத்திரியெனவும் புலையரெனவும் பேதப்பட்டு நிற்பர். இஃதிங்ஙனமாயின் மனுஸ்மிருதியில் நண்டு நத்தைகளுடைய மாம்ஸத்தால் பிதிருக்கள் ஒரு மாஸந்திருப்தி அடைகிரார்களெனவும். பன்றி எருமை செம்மறிஆடு மணிப்புறு இவைகளின் மாம்ஸத்தால் பிதுருக்கள் மூன்றுமாஸம் திருப்தி அடைகிறார்களென்றும் வெள்ளாடு முசல் ஆமை முதலிய மாம்சத்தால் ஆறுமாஸந் திருப்தி அடைகிராரெனவும். மான் முதலிய மாம்ஸத்தால் மூன்று வருஷம் பிதுருக்கள் திருப்தி அடைகிராரெனவுங் கோமாம்ஸத்தால் பன்னிரெண்டு வருஷம் பிதுருக்கள் திருப்தி அடைகிறார்களென்றுங் கூறியிருத்தலால் ஸ்மிருதியினந்தர்கதம் புலயற்கனுகூலமாயிருத்தலின் இவற்றை பிரமாணமாக அங்கீகறித்தொழுகுவோற்கும் ஏன் புலைத்தனம் வருதல் கூடாது பராசரஸ்மிருதியில் கலியுகத்தில் மாம்ஸம் புசித்தல் கூடாதெனகண்டித்திருத்தலால் மனுஸ்மிருதி இந்த யுகத்திற்குப் பிரமாணமன்றெனின் எந்தயுகத்திலும் மாம்ஸங்கூடாததாயிருக்க கலியுகத்திற்கு மாத்திரம் விலக்கெனக்கூறிய பராசரர் வாக்குபிரபல பிரமாணமாவதெப்படி கலியுகந்தவிர மற்றயெந்த யுகங்களிலும் மாம்சம் புசிக்கலாமென்றன்றோ பராசரர் வாக்கைக்கொள்ளத்தக்கதாயிருக்கின்றது. பராசரர் வாக்குமாம்ச பக்ஷணத்தை நிஷேதிக்காதிருந்தமையின் எந்த யுகங்களிலுஞ் சுராமாம்ஸம் புசித்தல் கூடாதெனக் கண்டித்தொதுக்கும் பரசுருதியனுஷ்டேய வைதிகசிகாமணிகளின் முன் சுராமாம்ஸம் புசிக்க விதித்துள்ள விதியைகையாண்டுவரும் அவைதிகர்வைதிகரென வெளிவருதலெங்கனம் வைதிகமென்னுஞ் சொல்லிற்கே அனர்கராயிருக்க யாம் வைதிக

மெனதலை மயக்கெய்தித்திரிவார்வாதம் அவைதிகமென்பதாய் தீர்மானித்தொதுக்கப்படும். இவ்வாருள்ள ஞாயம் பலவுளவற்றையும் விறிவஞ்சிவிடுத்தோம். மற்றுள்ளவை நோக்க விரும்புவராயின் பிரும்மஸ்ரீ நடுக்காவேரி ஸ்ரீனிவாஸ தீக்ஷதருக்கும் எமக்குன்னேர்ந்த விவாதத்தில் வேதாகமதாரதம்யம் வைதிகதாரதம்யம் முதலிய அனேக சந்தேகங்களை விவேகதிவாகரன் பத்திரிகைவாயிலாய்விடையளித்துநிவர்த்தித்துள்ளோமாதலால் ஆங்குற்றுநோக்கி சந்தேகநிவர்த்தி செய்து கொள்வார்களாக.

இவற்றால் வைதிகராவார் யாவருக்கும் வேதம் அபரமெனவும் சிவாகமம்பர மென்பதோடும் அபரம் பரத்தின்ஐக்கிய பத்யத்தாலன்றி உண்மை பொருள் விளக்காதென்பது தீர்மான மாயிற்று. சிவாகமம் பரசுருதியாயிருப்பின் வாயுசம்ஹிதையில்

சைவாகமோऽபி த்விதா ஶ்ரௌதாஶ்ரௌதஶ்ச ஸம்ஸ்ம்ருத: । ஶ்ருதிஸாரமய: ஶ்ரௌத: ஸ்வதந்த்ர இதரோ மத: ॥ ஸ்வதந்த்ரோ தஶதா பூர்வம் ததாஷ்டாதஶதா புந: । காமிகாதிஸமாக்யாபி: ஸித்தஸித்தாந்தஸம்ஜ்ஞக: ॥

என்னும் வாக்கியத்தால் சிவாகமம் இரண்டுபேதமுடையதெனவும் அவைசிரௌதம்அசிரௌதமென பெயர்பெருமெனவும்சுருதிஸாரமயமாயுள்ளது சிரௌதமும் ஸ்வதந்திரமாயும்வேத இதர அபிமதமுடையது அசிரௌதமெனவுங் கூறி இந்த ஸ்வதந்திரம் முதலில் பத்தாகவும் பின் பதினெட்டாகவும் பேதப்பட்டு காமிகாதிகளான பேர்களினாலே ஸித்தமெனவுஞ் சித்தாந்தமெனவும் ஸம்ஞைகுறிக்கப்பட்டிருத்தலினால் அசிரௌத மென்றதால் வேதபாஹ்யத்வ முண்டாகாதோவெனில் இவற்றுள் சைவாகமமிரண்டுபேதமெனக் கூறியிருத்தலால்- இவ்விரண்டும் சுருதிஎனவே பொதுவிலமயப்பெரும் இவ்விரண்டு சுருதிகளும் சிரௌதம் அசிரௌதமென பேதப்பட்டிருக்குமென கூறியதால் சிரௌதம் அக்ஷராத் மகமும் அசிரௌதம் அக்ஷாரதிகம்யமுமா யிருத்தலின் சிரௌதசப்தம் அபரசுருதிக்கேற்றுவது தகுதியேயொழிய பரசுருதிக்கு சிரௌதசப்தம் பிரதிபாதித்தல் குற்றமாம். இக்கருத்தை நோக்கியேயன்றோ சிரௌதாசிரௌத வியவஹாரத்தை வாயுஸம்ஹிதை எண்டெடுத்து விளக்கியது. சிவாகமங்கள்

சுருத்யதீதமான வித்யாபிரதிபாத்யமுடைய பரவித்தையே யாதலால். இவை சுருதி சம்மந்தப்பட்ட சிரௌதமாயிருப்பின் அஸ்வதந்திரப்பட்டு ஸ்வதந்திரமல்லாதொழிந்துவிடும். இக்காரணத்தை நோக்கியே யன்றோ ஸ்வதந்திர இதரோமத: என சிரௌதத்தை நோக்க விசேஷத்வமுடையதென்பதை விளக்கிக்காட்டியுள்ளது. சிவாகமங்களை ஸ்வதந்திரமென்றதினால் சிரௌதம்-பரதந்திரமுடையதென்பது கருத்து இதரோமதக என்றதினால் வேதத்தில் கூறுதலும் வேதாதீத அரும்பொருள் விளக்குமுடைய பரதர்மமாய் சிவாகமங்கள் நிற்றலின் இவற்றை இதரமதமென நீக்கிக்கூறவிடம்பெற்றது. மேலும்காமிகாதிகளானபெயரினால் சித்தம் சித்தாந்த மென்னும் ஸம்ஞையோடு கூடியதென முடிபொருளாக்கி யிருத்தலால் பூர்பக்ஷ ஸித்தாந்த ரூபமாய் வேத சிவாகமங்களை சிவ பெருமான் கூறியிருத்தலால் வாயுஸம்ஹிதையும் சிவாகமம் ஸித்தாந்தமென குறித்துணர்த்தியது-இவற்றால் சிவாகமம் அக்ஷராதிகம்யமும் ஸ்வதந்தரமும் வேதாதீதாபிமதமுடையதும் முடிபொருளான ஸித்தாந்த ரூபமாயுள்ளதென வெளியாயினமையால் வேதத்தை நோக்க சிவாகமம் கோடி மடங்குயர்ந்ததென்பதிற் றடையில்லை. வேதத்தை நோக்க வேறொன்றுளதேன கூறுவது வைதிமாமோவெனின் வேதமே தனக்கன்யமாய் பரவித்தையொன்றுளதெனக் கூறியிருக்க இவற்றை மறுப்பவற்கு வைதீக சித்தி யுண்டாகாதே யொழிய அவற்றை யொப்பி பிரமாண பிறஸித்தமாய் வியவகரிக்கும் சைவாகம நிஷ்டசிவஞானிகளுக்கு வைதிகத்வஹானி வருதல் யாங்கனம் சைவாகமம் இரண்டு பிரகாரம் என்பது வேதமெரண்டு பிரிவென்பதி தன் பொருள் சிரௌதாகமமென்பது ருக்காதி வேதத்திற்கு வேறாய் ஒன்றிருப்பதென்பது பொருளன்று ருக்காதி நான்கு வேதங்களுமே சிரௌதாகமம் சுருதியில் எட்டப்படாததாய் பிரிந்துள்ளது சிவாகமங்கள் யிதிலொன்று திரிவர்ணிபரம் மற்றொன்று ஸர்வவிஷயபரமென ஸ்ரீ நீலகண்ட சிவாச்சாரியார் வியவகரித்திருக்கும் வியவகாரத்தை வாயுஸம்ஹிதை சிவாகமநிஷ்டதர்மம் ஸித்தாந்தமென குறித்துக் காட்டியது ஐய்க்கபத்யமான பிறமாணமாயிற்று இவற்றை நோக்கியேயன்றோ சிவஞான சித்தியார் எட்டாஞ்சூத்திரம் ௰௩ம் பாட்

வில் வேதநூல் சைவநூலென்றிரண்டே நூல்கள் என வறயரு
த்துக் கூறப்பட்டிருக்கின்றது இவ்வாறுள்ள உண்மை பலவற்
றையும் ஊகியாது சிவஞான முனிவர் வேதாந்தத்தை விட்டு
முற்றும் விலக்கி சைவமதம் புதுப்பித்தாரென வியஸனிப்பது
வேதத்துட்கருத்துணராததாலன்றோ- வேதாந்தம் வேதமுடிபே
யாதலால் அவை ஸித்தாந்ததிற்கு மேம்பாடாதல் யாங்கன
ம் சித்தாந்தமென்னுஞ் சொல் சிவஞான முனிவராய் சிவாகம
ங்களுக்கு புதுப்பித்ததோ அங்கனமாயின் வேதாந்தமென்னுஞ்
சொல் சங்கராச்சாரியார் புதுப்பித்ததாய் யாம் கூறுகின்றோம்.
இவ்விருவர்களால் புதுப்பிக்க வல்லமை யுளதேல் வேதாகமங்
களெற்றுக்கு இவற்றுல் சிவஞான முனிவர் புதுப்பித்தாரென்
பதும் சங்கராச்சாரியார் புதுப்பித்தாரென்பதும் ஞாயமுகத்தில்
நில்லாதனவாம் ஸ்ரீகண்டர், சங்கரர், ராமாநுஜர், மத்துவர்
முதலிய நால்வர்களும் வியாஸ ஸூத்திரமாகிய அபரவித்தை
க்கு பாஷ்யஞ் செய்ததேயன்றி அவை பரவித்யா ரூபபாஷ்யமு
டையதன்று இவற்றுள் ஸ்ரீகண்டபாஷ்யம் அபாவித்தைக்குச்
செய்யப்பட்டதா யிருப்பினும் பரவித்யாத்யோதக தர்மங்கள்
இடை யிடையே விளங்கா நிற்கின்றது-சங்கரபாஷ்யமோ எல்லா
ம் பொய் நான் மாத்திரஞ் சத்தியமெனக்கூறி கடைசியில் அ
துவும் பொய்யாய் முடிந்து கிடக்கின்றது இராமாநுஜ மதமோ
ஜீவொத்பத்தியிலும் பரத்வனி ரூபணத்திலும் முக்தியிலும் பர
வித்தைக்கு விருத்தமாயிருப்பினும் தைவமொன்றுளதென்னும்
அபிப்பிராயத்தால் சங்கரமதம்போல் நாஸ்திகதை ஏற்படாது
ஆஸ்திகத்வம் மெய்தபெரும் மத்வமதமும் ஆஸ்தீகமதத்திலொ
ன்றும் இன்னூ பாஷ்யத்திற்கும் அன்யமாய் ஸோமசுந
ஆராத்யபாஷ்யம் என ஒன்றிருக்கின்றது. அதில் கூறியதாவது
வியாஸர் பிரும்ம நிச்சயத்திற்கு ஸூத்திரமெடுக்கும் பரிபாஷை
யல்லவெனவும் வியாஸ ஸூத்திரத்தால் பிரும்ம நிச்சயம் ஏற்ப
ட காரணமில்லை எனவும் ஏற்படுமாயின் நால்வர்களும் ஒன்றி
லொன்று முற்றணியவேறுவேறு சித்தாந்தங்களை நாட்ட முயன்ற
தற்கு பிரும்ம நிச்சாயக சூத்திரம் இடந்தராதெனவும் வியா
ஸர் கங்கை கரையில் நாராயணனுக்கு மேல் தைவமில்லை என
மயங்கி கூறிய சந்தர்பத்தில் நந்திகேசருங்கரத்தால் கைஸ்த
ம்பிக்க நாராயணர் பிறத்யக்ஷமாய் வந்து;

தஸ்மாச்சைவ வ்யாஸ꞉ ஶ்ருணு ஷண்முக ஸத்யம் வச꞉ ஸர்வஸ்ய சைவ ஜகத꞉ கர்த்தா கர்த்தா மஹேஶ்வர꞉ । தஸ்யாபி தேவதேவஸ்ய கர்த்தா கோऽபி ந வித்யதே ।

என்னும் வாக்கியத்தால் மோஹமுடனாகிய வியாஸரேகள் நான் உலகத்திற்கெல்லாங் கர்த்தா எனக்குக் கர்த்தா மஹேசுவரன் அவருக்கு மேல் கர்த்தா ஒருவருமில்லை எனக் கூறி வியாஸர் மயக்க மகற்றி சிவஸ்துதி செய்து கிருதார்த்தரானாரென கேழ்க்கப்படுதலால் பிரும்ம ஸூத்திரத்தில் மாத்திரம் அவற்கு தெளிவு வநதுவிட்டதென்பதை ஒருவரும் ஒப்பார் தெளிவுளராயின் வியாஸரெடுத்து கூறிய ஸூத்திரம்- ருாஅ௫- திற்குள் பிரும்ம நிச்சயங்கூறிய ஸூத்திரமெவை எனவும் பிரும்ம நிச்சயத்திற்கேற்ப ஈண்டெடுத்துக் கூறிய சுருதிகளி லனேகங் கூறியிருக்க இதுவா பிரும்மம் அதுவா பிரும்மமென்னும் மயக்கந் தலைமேற் கொண்டுழலும் வியாஸ ஸூத்திரம் பிரும்மஞானத்தை நிச்சயித் துணர்த்தும் மெய்நூலல்ல வெனவும் இச்சூத்திரத்திலில்லாப்பொருள்களை வருவித்து ஸ்ரீகண்டமுதலினோர் பாஷ்யஞ் செய்துள்ளா ரெனவும் சங்கரபாஷ்யத்தால் இச்சூத்திரத்தை நோக்கப்புகுவோமாயின் இவை பிரச்சன்ன பௌத்தமாகிய நாஸ்திகத்தை உண்டாக்கிற தெனவும் ராமாநுஜ பாஷ்யத்தால் லோகோத்பத்தி பரத்வநிர்ணயம் முக்தி முதலியவற்றில் முரண்படுமெனவும் ஸ்ரீகண்டர் சுத்தாத்வைத சிவஸாக்ஷாத் காரபிரும்மஞானியாதலால் நாஸ்திகதையாய் பிரவர்த்தித்துள்ள வியாஸ ஸூத்திரத்தைதடுத்து ஆஸ்திகத்வமுபகரித் தனுக்கிறகித்தாரெனவும் இச்சிரீகண்ட சிவாச்சார்ய சுவாமிகள் பிரும்ம ஸூத்திரத்தில் வர்ஷித்துள்ள ஸித்தாந்த சுருதிகள் வியாஸ ஸூத்திரத்தை விட்டுத் தனிதொரு மெய் நூலாய் விரியுமாயின் வியாஸஸூத்திரத்தின் கதி அதோகதியா மெனவும் பிரும்மஸ்வரூபி பரமேசுவரரென வேதங்களில் பிரதிபாதிக்கின்றமையின் பிரும்மமென்னுஞ் சொல் ஸ்வரூபலக்ஷண மிழந்த தடஸ்த லக்ஷணமாய் விளங்குமெனவும் ஸ்வரூபலக்ஷணம் நித்யமங்கள மூர்த்தியாகிய பரமேசுவர பிரதிபாத்யமாய் யிருத்தலால் ஆதிதொடுத்தந்திய மிருதியாய் சிவமென்னும் மங்களச் சொல்லில்லாதுதால் இச்சூத்திரம் அமங்களமுடையதா மெனவும் இவற்றுள்

வியாசரும் பிரும்ம ஸ்வரூபத்தை அறியவேண்டுமென ஆரம்பசூத்தனமாய், அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா। என்னுஞ் சூத்திரத்தை மாத்திரம் முதலிலெடுத்துக் காட்டி பிரும்மம் இன்னதென கூறாது விடுத்திருப்பதாலும் அபர சுருதியாகிய ரிகாதிவேத வேதாந்தங்களிலும் பிரும்ம ஸ்வரூபம் வெளிப்படாததுபற்றி சூத்திரஞ்செய்தவியாசரும் இங்கனம் மயக்குற்ருர். பிரும்மஸ்வரூபம் பரவித்தையாகிய சிவாகமத்தால் வெளிப்பட்டுநிற்க அபரவித்தையால் ஆராய்ந்து அறியவிரும்பியது நரிவாலைக்கொண்டு கடலை ஆழம் பார்க்க விரும்பியவரை யொத்திருக்கின்றதெனவும் கூறியிருத்தலால் அபரவித்யா சூத்திரபாஷ்யமாகியவேதாந்திகளின் அபிமதம் சித்தாந்தரூபமான பரவித்தையாகிய சிவாகமங்களின்முன் தலைநீட்டி வாழ்வதெங்கனம் இவற்றுல் வேதம் அபரவித்தையெனவும் சிவாகமம் பரவித்தையெனவும் ஞாயமுகத்தால் காட்டித் தீர்மானித்தோமாதலால் வேதத்தின்கருத்து யாவற்றையும் பரவித்தையாகிய சிவாகமம் பூர்வபக்ஷஞ்செய்து சித்தாந்திக்கு மாற்றலுடைமையாதல்பற்றி சிவக்ஞானமுனிவர் முதலிய உண்மை சிவபக்தசிகாமணிகள் வேதம்வேறும் சிவாகமம் வேறுமாய்ப் பிரித்து சிவாகமத்தை சித்தாந்தமெனவும் நிலைநாட்டுதற்கு கேதுவாயிற்று இச்சித்தாந்தம் வேதாந்தக்கருத்தை பூர்வபக்ஷமாக்குவதால் வேதாந்தத்திற்கு வேறு பட்ட கருத்தா யிருந்தன்றே, பூர்வபக்ஷமாக்குதல் வேண்டும், சித்தாந்தம் பூர்வபக்ஷத்திற்கு முற்றும் வித்தியாசப்பட்டிருக்குமென்பதிலென்ன தடை வேதாந்தத்தில் பரிணமவாதம், பிரதி பிம்பவாதம், சுத்திரஜிதபிணுந்திவாதம், வியாவஹாரிகபாரமார்த்திகவாதம், அக்ஞானகலுஷிதவாதம், கடாகாசபடாகாசவாதம் முதலிய அஸத்வாதமே மேனேக்கி நிற்றலின் இவ்வாதத்தை நிராகரித்து உண்மை உபகதிப்பது பரவித்தையாகிய சிவாகமேயன்றே பிரும்ம பரிணமவாதத்தை யாமுன்னரெடுத்துக் கண்டித்துள்ளோமாதலால் ஈண்டெடுத்து கண்டித்தல் அனுவசியகமாகும். ஆத்மா பிரும்மத்தின் பிரிதிபிம்பமென்பது வேதாந்திகளின் அபிமதமாதலின், பிம்பம் சத்தும் பிரதிபிம்பம் அசத்துமாய் முடியப்பெறும் பிம்பம் பிரும்மமும் பிரதிபிம்பம் ஆத்மாவுமாய்க் கூறுதல் பற்றி ஆத்மா அசத்தாயிருப்பதால் அசத்துக்கு சத்ஸசர்ரம் விலக்காதலின் அசத்து

பிரும்ம நிச்சயம் கூறித்தென்பதும் விசார சூன்யமேயாகும் இவற்றால் ஆத்மாவை பிரதிபிம்பமான அசத்தென்னும் வேதாந்தச்சொல்லே பரவித்தையாகிய சிவாகமங்கள் கண்டித்துஅசத்து அறிவற்றதாதலின் பிரும்மத்தை அறியுமென்பது கூடாதென்பதாய் ஆத்மாசத்தென அபரவித்தைக்கி உண்மை உபகரித்து சித்தாந்தித்துநிற்கும் சுக்திரஜித பிராந்திவாதம்போல் பொய்யாயுள்ள ஜகத்தென்பது வேதாந்தவாதம் சுத்தியும் இன்மைப் பொருளன்று ரஜதமும் இன்மை பொருளன்றுஒன்றிலொன்றைஆரோபித்து வருவித்ததுமாத்திரம் பிராந்தியாம். இவற்றால் சுத்தியென்னும் பதார்த்த மொன்றும் ரஜதமென்னும் பதார்த்தமொன்றும் ஒன்றையொன்றாய் கற்பித்து பிரமித்த பார்த்தமொன்றுமாய் இவர் திருஷ்டாந்தத்தில் முப்பொருள் விளங்குதலால்இம்மூன்றையும்ஒன்றென சாதிக்கவருபவரை மூன்றும் மூன்றுபொருளென உண்மையுபகரித்து சிவாகமஞ்சித்தாந்திக்க துணிவுற்று நிற்கும். இல்லாத வெள்ளியை சிப்பியில் உண்டெனநினைத்து பின்னில்லாதுபோவதுபோல் இல்லாத உலகத்தை உண்டென கூறுவதும் பிராந்தியாமெனின் உலகம் இல்பொருளாயின் பதார்த்தமொன்றேயென்பது வேதாந்திகளின் அபிமதம் ஒன்றாயுள்ள பதார்த்தத்திற்கு இல்லாத உலகத்தை உண்டென பிராந்தி வருதல் கூடுமோ பிராந்தி அறிவில்லாதோரியற்கையாதலின் முற்றறிவுடைய பிரும்மத்திற்கிவை யேற்றல் கூடுமோ வியாவஹாரிக பாரமார்த்திக பேதத்தால் இவை பிரும்மத்திற்கு வருமெனின் பாரமார்த்திகத்தில் இருந்த பிரும்மமே யன்றோ வியாவஹாரத்திற்கு வந்திருக்கின்றது பிரும்மத்திற்கு பாரமார்த்திகம் கெட்டு வியாவஹாரிகத்திற்கு வரக்காரண மென்னோ ஒரு பதார்த்தம் பாரமார்த்திக மெனவும் வியாவஹாரிக மெனவும் இருபொருளாய் நிற்குமாயின் அகண்டம் கெட்டு கண்டப்பொருளாயின்றோ முடிந்து விடும் பாரமார்த்திக பிரும்மம் வியாவஹாரிகத்திற்கு வந்தது தானே வந்ததா வேறொருவர் வரும்படி செய்தனரா தானே வந்ததெனின் இவ்வசத்பிரவர்த்திக்கு அவை முந்தி நின்றதால் இவற்றை சத்தெனச்சுட்டுதலடாது மாயையால் வேறுபட்டதெனின் மாயை வேதாந்தத்தில் இன்மைப் பொருளாதலால் அவற்றால் வந்ததென்பதுங் குற்றமாம் மாயை பிரும்மத்தை வியாவஹாரிகபாரமார்த்திக நிலைக்கு கொணர்ந்திரு

க்குமாயின் கர்த்திருத்வம் மாயைக்கு ஏற்பட்டு மாயை சுதந்தர்மும் மாயை வசப்பட்டுள்ள பிரும்மம் அஸ்வ தந்திரமுமாய் முடிதலால் இக்குரும் வேதாந்த ஆசங்கைக்கு பிரும்மம் பாரமார்த்திகத்திலேயேயுள்ளது ஜீவன் மாயா வசப்பட்டு வ்யாவஹாரிகத்தில் உழண்டுகிற்பது வியாவகாரம் நீங்கி பிரும்மத்தோடு ஐக்கியம் பெறுவது முக்தியென சிவாகமம் சித்தாந்திருப்பதால் இக்கருத்து வேதாந்தத்தால் விளங்கப்பட்டதின்றும். அக்ஞானக்கலப்பால் சூரியனை மேகம் மூடுவதுபோல் பிரும்மத்தை மறைத்திருப்பதால் பிரம்மக்ஞானம் தோன்றாது அக்ஞானத்தில் ஆழ்ந்துளோமெனின் சூரியனொன்று மேகமொன்று அக்ஞானத்தில் ஆழ்ந்துளபதார்த்தமொன்று இங்கனமும் முப்பொருள் விளக்க முண்டாகின்றது. அக்ஞானத்தில் ஆழ்ந்துள பதார்த்தம் பிரும்மந்தானெனின் பிரும்மம் மெய் ஞானமுடையதாதலின் அக்ஞானத்தில் மூழ்கக்காரணமில்லை மாயை பிரும்மத்தைமறைக்குமாயின் பிரும்மத்தை விட மேம்பாடுடைய பதார்த்தமாகின்றது மறைத்தலுள் அடங்கியுள்ளபிரும்மம் அம்மறைவைத்தானே நீக்கி வெளிவருதல் யாங்கனம் தான் நீக்குமாற்றலுடையதாயின் தன்னை மறைக்க சம்மதித்தீரா? இம்மறைப்பை வேறொருவன் நீக்கவேண்டியிருத்தலால் அவை பிரும்மத்திற்கு அன்யமான கர்த்திருத்வமுடையதாயிருத்தல் வேண்டும். இவற்றால் மாயையால் மறைந்துள்ளது ஜீவனெனவும் அம்மறைவை நீக்கி முக்தியளிப்பது பிரும்மமெனவும் வேதாந்தத்திற்கு சித்தாந்த ரூபமான சிவாகமங்கள் உண்மைப் பொருளை உபகரித்து நிற்கும். ஒன்றாயுள்ள ஆகாசம் கடத்தில் வியாபித்திருப்பது போல் ஒன்றாயுள்ள பிரும்மமே விருத்தி பேதத்தால் வெவ்வேறாய்த் தோற்றுமெனின் ஆகாசம் நிர்விகாரபதார்த்தமும் அப்பிரத்தியக்ஷமாய் இருத்தலின் விகாரமேற்பட காரணமில்லை. கடம் கடான்னியமாய் ஆகாசவ்யாபகம் இவ்விரு பொருளும் ஒரு பொருளன்று கடம் வேறு ஆகாசம் வேறு ஆகாசமே கடரூபமாய் பரிணமித்து இருக்குமாயின் பிரும்மம் பிரபஞ்சரூபமாய் பரிணமித்திருத்தலுங் கூடும். இவற்றால் கடாகாசவியவஹாரத்தால் ஒரே பதார்த்தமென சாதிக்கவந்ததும் தவருதலேயாகும். இவ்வாறுள்ளவேதாந்தாபாசம் பலவுளவற்றையுங் கண்டித்து பரமான சித்தாந்தத்தை நிலைநாட்டும் சிவாகமங்கள் வேதாந்தத்திற்குமுற்றும் விரோ

திக்கிறதெனத் தக்கிப்பதுபரிபவமில்லாதோரியல்பேயாகும். வேதாந்தஞ்சிவாகமத்தின் ஐக்கபத்தியமன்றி உண்மைப் பொருள் விளக்கா ஆன்மலாபத்திற்கு வேதனாயகியைப் போலும் சிவாகமம் நாயகனைப்போலுன்னிலை நின்றனுக்கிரகிக்கு மாற்றலுடையதுபற்றி நாயகபாவமுடைய சிவாகமங்களுக்கு ஸ்வதந்திரமும் நாயகிபாவமுடைய வேதங்களுக்கு அஸ்வதந்திரமும் ஏற்பட காரணமாயிற்று. உத்தமமான நாயகி தன்னாயகனை விட்டுப் பிரிந்திராள் பிரிந்திருக்கவொருவன் முயற்சிப்பானாயின் தன் பாதிவிருத்ய தர்மத்தாலுண்டான சாபாக்னியால் தகித்து முயர்ச்சித்தவனை சாம்பல்கூட அகப்படாது செய்வதுபோல் வேதம் சிவாகமமாகிய நாயகனைப்பிரிந்து நின்றவிடத்தில் உலகம் ஆன்மா இவ்விரண்டையுஞ் சுட்டெரித்து தன்னாயகனை விட்டு தன்னை நோக்க விரும்பியுள்ளவனையும் இருப்பிடந்தெரியாது அவனிருப்பே பொய்யாக்கி தாம் பாதி விருத்யம் பங்கமடையாவண்ணங்காத்துக்கொள்ளுமாதலின் சிவாகமத்தை நீத்துவேதத்துட் பொருளாராயப்புகுவோர்க்கு வேதம் அணுத்துணையும் பயனளிக்கத்தக்கதன்று. இங்கனமுள்ள ஞாயம் பலவற்றையு மூகித்தறியாது வேதத்துட் பொருளீட்டமுயல்வனாயின் வெளக்கமார்செருப்புக் கட்டையும் பிரும்மமயமென வற்புறுத்தி ஸத்தஸத்தென்னும் பேதம் புலப்படுத்தாது யாவும் பொய்யென முடிபொருளாக்கி யாம்அபரம்எமக்கு மேல்பரமொன்றுளது அவற்றைநோக்கி உய்வீர்களென வேதம் மௌனமுற்று நிற்றலின் சிவாகமத்தை விட்டு வேதத்தைத் தனித்து பிரித்து வியவஹரிக்கும் வாதத்தில் ஸர்வலோகநாயகராகிய நித்யமங்கள மூர்த்தியாம் சிவபெருமானை இழந்திருப்பதால் இவ்வாதம் அமங்களத்வமுடைய முண்டச்சிவாதமாய் முடியப்பெறும். வேதம்அபரமும் சிவாகமம்பரமுமாய் கைக்கொள்ளும் சிவஞானிபரத்துமங்களத்வ மெய்தப் பெறும் இக்காரணம் பற்றியே யன்றோ பிராம்மணரெனவும் சிவப்பிராம்மணரெனவும் வேறு பிரித்து பரவித்தை தெளித்துரைக்கப் படுகின்றது பிராம்மணரென்பது சிவப்பிராம்மணர், வைஷ்ணவப் பிராம்மணர், மத்வப்பிராம்மணர், ஸ்மார்த்தபிராம்மணர், பௌத்த பிராம்மணர், ஜயினப்பிராம்மணர் என பல்படித்தாய் நிற்றலால் யாவற்றும் பிராம்மணரென்பது பொதுப்பெயர் சிறப்புவகையால்

னுக்குமளவில் அவரவர் மதானுஸம் பத்தியை முன்னிட்டு வருமாதலின்பிராம்மணபரத்துமதமினததென்பது சுட்டுதலனறி வனயசிவபிராம்மணபரத்தில்தம்தம்ஸமயமுன்னுகக்கொண்டுவரு மியற்கையுடையதுபற்றி சிவபிராமமண ரென்பது யாவற்றினுஞ் சிறந்த சிறப்பு பேராம். சிவம்மங்கள னுதல்பற்றி இவர்களுக்கு மங்களப்பிராம்மணரென்பதே பொருத்தமுடையதாம். பிராம் மணரை உயர்வெனக்கொண்டு பிராம்மணபோஜனம் முதலியவை விதித்திருக்க சிவப்பிராம்மணரை விசேஷமாகக் கொள்ளுதல் யாங்கனமெனின்-பிராம்மணபோஜனம் ஸாமான்யமுஞ்சிவப்பிரா ம்மண போஜனம் விசேஷமுமாய் மேம்பட்டு நிற்கும் சிவப்பிரா ம்மண போஜனமென்பது மஹேசுவர பூஜை என மேம்பட்டிருத் தலின் இவை பிராம்மண போஜனம் போல் ஸாமான்யமாகாது.

ஸ்தாவரம்ஜங்கமஞ்சேதி லிங்கம் த்விவிதமிஷ்யதே। ஸ்தாவரம் ஸ்தாபிதம் லிங்கம்ஜங்கமந்து ஶிவத்விஜம்। ஜங்கமஸ்யார்சநா யா ஸா ப்ரோக்தா ஶிவார்சநம்।

என்னும், பரசுருதி வாக்கியத்தால் லிங்கம் ஸ்தாவரம் ஜங்க மமென இருவகைப்படுமெனவும் ஸ்தாவரலிங்கசிவலிங்கமும்ஜங் கமலிங்கம் சிவபெருமானால்தீக்ஷிக்கபெற்ற சிவத்விஜர்களெனவும் சிவப்பிராம்மணருக்கு செய்யப்படும் பூஜை சிவபூஜை யாகுமென வுங் கூறியிருத்தலால் சிவப்பிராம்மணபோஜனம் சிவ பூஜையாய் முடிபுற்று நிற்கும் இவற்றால் பிராம்மணரை நோக்க சிவப்பிராம் மணர் விசேஷரென்பது தெற்றெனப் புலப்படும். அங்கனமாயின் இச்சிவப்பிராம்மணர் சிவபெருமானை பரார்த்தத்தில் பூஜிப்பதா லும் சிவநிர்மால்யம் புசித்தலாலும் பரார்த்தத்தில் மூன்று வருஷ ம் பூஜித்து உபஜீவிப்பவரை தேவலகர் எனவும் இத்தேவலகர்க ளை ஸத்காரியங்களில் வர்ஜிக்க வேண்டுமெனவுங் கூறி யிருத்தலா லும் சிவாகமங்களில்,

ஆத்மார்த்தஞ்ச பரார்த்தஞ்ச பூஜா த்விவிதமிஷ்யதே। ஆத்மார்த்தஞ் சலம் லிங்கம் பரார்த்தம் ஸ்திரலிங்ககம்।

என்னும் வாக்கியத்தால் சிவபூஜை ஆத்மார்த்தமெனவும் ப ரார்த்தமெனவும் இரண்டு பேதமுடையதெனவும் ஆத்மார்த்தஞ் சரலிங்கமும் பரார்த்தம் ஸ்திரலிங்கம் அதாவது ஆலயாதிகளில் அஷ்டபந்தனாதிகளால் பிரதிஷ்டிக்கப்பட்ட லிங்கமெனவுங் கா

ணப்படுதலால் தேவலகத்வாதி தோஷஞ் சிவாகமத்தாலுமேரப் பெருமெனின்,

ஆத்மார்த்தே பூஜநம் நித்யம் ஸ்வஸ்யைவ மோக்ஷதம். பரார்த்தே பூஜநம் நித்யம் ஸர்வேஷாம் மோக்ஷதாயகம். ஆசார்ய பரம்பர்யேண ஸம்ப்ராப்தம் ஸர்வகாமதம். தத்பூஜகோ குரு ஸ்ரேஷ்ட: தஸ்ய தர்சந காரிணாம் ஸர்வேஷாம் முக்திஹேதுத்வாத் பரார்த்தம் இதி கீர்த்திதம்.

என்னும் சிவாகமவாக்கியத்தால் ஆத்மார்த்த பூஜை தனக்கு மாத்திரமே பயன்படத் தக்கதெனவும் பரார்த்த பூஜை யாவருக்கு மோக்ஷத்தை கொடுக்கத்தக்கதெனவும் இந்த முக்தி பிரதமான லிங்கம் ஆச்சார்ய பரம்பரையாய் கிடைத்துள்ளதெனவும் அதை பூஜிக்கும் குருசிரேஷ்டர்களுக்கும் அதை தர்சிக்கும் மஹாத்மாக்களாகிய எல்லார்களுக்கும முக்தி ஹேதுவாயிருப்பதால் இதற்கு பரார்த்தமெனச் சொல்லப்படு மெனவுஞ் சிவாகமமாகிய பரவித்தை கூறுவதால் இதில் தேவலகத்வாதி தோஷமேறக்காரணம் இல்லை. பரார்த்தமென்பதற்கு முக்தியை பிரயோஜனமாக வுடையதென பொருள் செய்திருப்பதால் இஃது தோஷயுக்தமான பூஜையாகாது மற்றும் பூஜிப்பவர் தர்சிப்பவர் இவ்விருவர்களுக்கும் ஒருங்கே முக்தி கூறியிருத்தலின் இவற்றை பூஜிக்கும் ஆதிசைவ பிரும்மணருக்கு தேவலகத்வ தோஷமுமுண்டாகா இவை ஆச்சர்ய பரம்பறையில் கிடைத்து வரும் லிங்கமாதலின் பிரர் பூஜை என்பது மிதற்கேற்பட காரணமில்லை இவற்றால் ஆதிசைவர்களுக்கு இப்பூஜை ஸ்வார்த்தமாகவே முடிந்துவிடும் இக்கருத்தை பரவித்தை யுட்கொண்டே யன்றோ,

ஆதிசைவ ஸ்ய பரார்த்தம் ஆத்மார்த்தம் ! என்னும்,

வாக்கியத்தால் ஆதிசைவ பிராம்மணர்களால் ஆத்மார்த்த பரார்த்த பூஜை செய்யத்தக்கதென கூறியிருத்தலின் இவை முக்தி பிரதமான பூஜை என்பதிற்றடையில்லை இவற்றால் ஸ்மிருதியில் கூறிய பரார்த்தம் வேருஞ் சிவாகமத்தில் கூறிய பரார்த்த வேறுமாய் பொருள்பட்டு நிற்கும் சிவாகமத்தில் கூறிய பரார்த்த சப்தத்திற்கு மோக்ஷரூப பரமார்த்த ப்ரயோஜநவத் பரார்த்தம் என்னும் வாக்கியத்தால் முக்தியை பிரயோஜனமாக வுடைத்தான பூஜை எதுவோ அதுபரார்த்த பூஜையாம் என்பது பொருள்.

பரார்த்தம் த்விவிதம் ப்ரோக்தம் ஸர்வாநுக்ரஹ காரணம் | ஆல
யேவ யஜநம் சாந்யத் அந்யேஷாம் க்ருஹேஷு யஜநம் அந்யேஷாம் க்ருஹேஷு யஜநா
த்ப்ரோக்தம் பரார்த்தகம் ததா | நாஸ்திசேத் கர்த்ருயோக்யம் கிம் வித்த ப்ரி
யோஜ்யாசார்யம் ஸமர்ச்சகம் | உக்த்வா பரார்த்தம் ஸங்கல்ப்ய ஸமர்ச்ச
யேத் ஸதா | பராசிதவஸங்கல்ப்ய ஏகவர்ஷத்ரயாத்பரம் |
க்ருதம் சேத்தஸ்ய தோஷஸ்ஸ்யாத் தேவலத்வாதிகம் ததா: | தத்தோ
ஷயுக்தாஸ்தே ஸர்வகர்மஸு வர்ஜ்யகா: |

என்னும் பரசுருதி வாக்கியத்தால் பரார்த்தமிரண்டு பேத முடையதென்றும் ஆலயபூஜை ஸர்வாநுக்கிரஹ காரணமென்றும் இதற்கன்யமாய் அன்யர்களை உத்தேசித்து அவர்கள் கிரஹத்தில் பூஜிப்பவருக்கு பூஜை செய்ய ஸாவகாசமல்லாமல் ஒருவருக்கு சம்பளங்கொடுத்து சம்பளம் பெற்றவர் இன்னார் பூஜையை நான் செய்யப்போகிறேனென ஸங்கல் பிடித்து பூஜிக்கு பூஜை பிறறை உத்தேசித்து பூஜிக்கும் பரார்த்தமெனவும் இவ்வாருள்ள பரார்த்த பூஜை மூன்று வருஷம் ஒருவன் செய்வானாகில் அவன் தேவலகத்வாதி தோஷமடைகிறானெனவும் இத்தேவலக தோஷம் பெற்றோரை எல்லா கர்மங்களிலும் வர்ஜிக்கவேண்டுமெனவுங்கூறியிருத்தலால்முக்திபிரதமான ஆலயபூஜையில் இத் தோஷமேற்றி தூஷிக்கமுயன்றது விச்சாரணைக்குறைவேயாகும். இக்காரணம்பற்றி மோக்ஷார்த்த லிங்கபூஜனாதிஸதாச்சாரமுடையாரை தேவலகரென்பது அவைதிகர்வாதமாம் கிரஹாராதனை விஷயத்திலும் இவர்கள் சிவபூஜை புரிவதால் அவை அஸத்கார்யமாவது யாங்கனமெனின் பூஜிக்கும் யஜமான் குருவறிட்த்தில் பூஜார்த்தம் லிங்கம் பெரும்பொழுது மறணபர்யந்தம் இந்த சிவபூஜையை கைவிடுதலில்லையென பிரதிக்ஞைசெய்து சிவபெருமானை அடைந்து ஸ்வல்பகாரியத்தால் பிரதிஞாஹானியும் நித்யவிஹித தர்மமும் இழந்து பிறரைச் செய்யும்படி முயற்ச்சித்து நிற்பதால் குருவினிடஞ் சிவலிங்கம் பெற்றோர்க்கும் இவற்குச் சாதகமாய் வந்து பூஜிப்போர்க்கும் இவ்விருவருக்கும் இப்பூஜை பரார்த்தமாய்விடும். தான் பூஜிக்கவேண்டுவதை அன்யரிடம் ஒப்பித்து விட்டதால் எஜமானனுக்கும் இது பரார்த்தமாய் தோஷமேற்படக் காரணமாயிற்று இவற்றால் தோஷமேறுதல் கூடுமோவெனின் ஸந்தியாவந்தனாதி அனுஷ்டானங்களை தானே நித்யமாய் செய்யு

வேண்டிய ஒருவன் ஸாவகாசமின்மையில் ஒருவனை ஏற்படுத்தி சம்பளந்திட்டஞ்செய்து பிறதிதினமும் அவனே செய்யும்படி விடுத்து விடின் இவன் ஸந்தியாவந்தனுதிகளை இழந்து பிரஷ்டனுவதோடும்இப்பிரஷ்டனுக்குடன்பட்டு நின்ற கூலிக்காரனும் பிரஷ்டனுவதுபோல் சிவபூஜையை விட்ட பிரஷ்டனுக்கு உடன்பட்ட பூஜகனும் பிரஷ்டனுவன் கூலிக்காரன் கூலி வாங்குவதால் இவனுக்கு தோஷமுண்டாகாதெனின் கூலியுங்கார்யன்னேக்கிப்பெருதல் வேண்டும் ராஜகிரகத்தில் திருடிவந்தால் நூறு வராகந்தருகிறேனெனக் கூலி பேசி இத்திருட்டுக்குடன் பட்ட கூலியாள் பாராக்காரரிடம் பிடிபட்டு தன்பந்துஜனங்களை நீங்கி பந்தேகானுவிலிருப்பதுபோல் சிவபூஜைக் கைவிட்ட பிறஷ்டனுக்கிணங்கி கூலிக்கு பூஜித்தபிறஷ்டர்கள் ஸ்வஜாதிவகுப்பின்ஸத்கார்யத்தில் சேர்க்கப்படமாட்டார். இவற்ருல் பிறரை உத்தேசித்த ஸ்வார்த்தமல்லா பரார்த்தபூஜையிலும் ஜீவிப்பவரிவரென்பது தெற்றென விளங்கும். ஆதிசைவ பிராம்மணர்களும் கோயிலில் சம்பளம் வாங்கி பூஜிக்கின்றதால் இத்தோஷமவர்பறத்தேராதோவெனின் இவ்வாதிசைவர் ஒருவர் பூஜித்தபூஜையை அவற்காக தான்பூஜிக்காது ஸ்வார்த்தமாகவே பூஜிப்பதால் பரார்த்த தோஷப்படுதலெங்கனம். இவற்ருல் ஸர்வாத்மாக்களுக்கும் தமக்கும் முக்த்திப்பிரதமாயுள்ள ஸர்வானுக்கிரஹகரமாம் சிவபூஜை பரார்த்த தோஷமுண்டாதற்குக் காரணமில்லை. இஃதன்றி பரவித்தையாகிய சிவாகமத்தில் கூறியவாறு தீக்ஷிக்கப்பெராது பூஜிக்கும்சிவபூஜையும் பரார்த்த தோஷப்பட்டிழந்துவிடும்.

ஆத்மார்த²ம் ச பரார்த²ம் ச ஶிவலிங்க³ப்ரபூஜனம் । ஸதீ³க்ஷிதேன கார்யம் ஸ்யாத³ன்யதா² ராஷ்ட்ரவினஶ்யதி । யஸ்மாதீ³ஶேன ப்ரோக்த: ஜீவ: பஶுரிதி ஸ்ம்ருத: । பஶுபதிப்ரஸாதா³த்³ தீ³க்ஷாபரோ பஶுர்முக்தோ ப⁴வேத் । பதித்வம் யாதி ஶைவ: தத்த்வஜ்ஞ: ஸ்யாத்பரமேஶ்வர: । ஸர்வஜ்ஞஸித்³தா⁴ ஜ்ஞாதீ³க்ஷாஹீனேன க்ருதாயதி । தஸ்மாத்ஸர்வஸ்ய தீ³க்ஷாணி பஶூனாம் மோக்ஷம் । பஶூனாம் மோக்ஷார்த²ம் தஸ்மாத் த்ரைவர்ணிகானாம் த்ரைவர்ணிகானாம் விஶேஷதா । யஸ்ய ஶூத்³ரஸ்ய ஶ்ரோத்ரியஸ்ய ஶாஸ்த்ரம் । ஸதீ³க்ஷிதானாம் ..

ஶம்ப்ரூக்ஷ்ய ஸ்தூலதேஹஸ்ய: । ஶிவபூஜாகாரணாம்தீக்ஷா
ஸமயாதகஸ்தவா । க்ரியாவதீ ஜ்ஞானவதீ ஸப்தயா ஸ்பர்ஶவா
வகீ । வாக்ஷுஷீ மானஸீ சேதி தீக்ஷா ஸப்தவிதாஸ்ம்ருதா ।

என்னும் பரசுருதி வாக்கியத்தால் சிவதிக்ஷையல்லாது ஆத்மார்த்த பரார்த்த பூஜைகளை பூஜித்தல் கூடாது பூஜிப்பாளுயின் நாசத்தையுண்டாக்குமெனவும், பரமேசுவரர் பதியெனவும், ஆத்மாபசுவெனவும், பதி பசுவென்னும் பேதத்தினுல்பசுரூபமாயிருக்கிற ஆத்மாவானது பதிரூபமான பரமேசுவரரை அறியாதாகையால் இந்த அதீக்ஷிதர் பூஜை நிஷ்பலமாமெனவும் இவற்றால் சிவபூஜைக்கு பசுபாவன்னீங்கத்தக்க சிவதீக்ஷை முக்யமெனவும் பசுபாவஞ்சிவதீக்ஷையால் நீக்கிக்கொள்வாளுயின் பதிபர்வத்தால் பதிஸ்வரூபமாகிய பரமேசுவரருக்கு ஸஜாதியமாகிறார் ஸாஜாத்தியத்தால் ஐக்கமும் அவையில்லாவிடில் ஐக்கவிரோதமு முண்டாகுமெனவும் வனத்தில் ஸிம்மத்தைக்கண்டு யானை எவ்வாறு அஞ்சுமோ அவ்வாறே அதீக்ஷிதரால் பூஜிக்கப்படுஞ் சிவலிங்கத்தில் சிவபெருமாளுவிற்பவிப்பதற்கஞ்சுவரெனவும் சிவபூஜை முதலிய ஸத்காரியங்களுக்கு சிவதீக்ஷை முக்யமெனவும் அந்த சிவதீக்ஷை கிரியாவதீ, ஞானவதீ, வியதா, ஸ்பர்சா, வாசகி, சாக்ஷுஷீ, மானஸீ எனஏழு பேதமாமெனக் கூறியிருத்தலால் பரஸம்ஸ்காரமாகிய சிவதீக்ஷை யல்லாததால் சிவபெருமான் இவர்களுக்கு வேறாய் நிற்றலால் இவர்கள் பூஜையும் பரார்த்தமாகும் இவற்றால் சிவதீக்ஷையல்லாது மூன்று வருஷம் சிவபூஜை பரார்த்தத்தில் பூஜிப்போரையும் ஸத்கர்மாக்களில் வர்ஜிக்கவேண்டுமென்பதாம் சிவதீக்ஷையல்லாதோர் சிவபூஜை பதியாகிய பரமேசுவரரை பசுரூபமான அஸத்பாவஞ் செய்பவருதலால்இவர்கள்பூஜையால் தோஷ யுக்தாளாகிரா ரென்பது கருத்து. இவற்றால் இவர்களையும் ஸத்கார்யத்தில் வர்ஜிக்கத்தக்கது பிராம்மணர் சிவதீக்ஷை பெருவராயின் முக்திபிரதமான பரார்த்தாலய பூஜைக்கும் யோக்யமாவாரோவெனின்,

விப்ரக்ஷத்ரியவிட்சூத்ரா தீக்ஷிதாஸ்ஸர்வஏவஹி । க்ஷத்ரியவைஸ்ய
ஶூத்ராணாம் ஸாமான்யம் ஸர்வகர்மஸு । த்ரிவர்ணாநாம் ஸுதா
நாம் ஸர்வேஷாம் ஸர்வகர்மஸு । ஶைவாநாம் பரார்த்தேது

ஸதீக்ஷிதாஸ்த்ரயஸ்ஸைவாகா:। ஶுத்தஶைவாஸ்து தேஜ்ஞேயா ஸர்வேநுக்ரஹகா: ஸ்ம்ருதா:। ஶிவஸ்யபஞ்ச வக்த்ரேப்யோஜாதாஶ்சைவ ப்ராஹ்மணா: ஸ்ம்ருதா:! ஜாதாஸ்தேஷாம் ஹி ஶைவாஸ்யு: கேவலம் ப்ரஹ்மணோமுகாத்। ஜாதாஸ்ஸர்வேஷ்யா விநாஸம்ஸ்காரப்ராஹ்மணாயே ஹ்யாத்ருஶி:। ஶுத்தஶைவாஸ்து தேவிப்ராதீக்ஷிதா ப்ராஹ்மணாஸ்ததா। ஶிவதீக்ஷாதி ஸம்ஸ்காரை: பரமாகமவித்தமை:। ததாதே ஸர்வதோஜ்ஞேயா மஹாஶைவ இதிஸ்ம்ருதா:।

என்னும் பரசுருதிவாக்கியத்தால் பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர் சூத்திரர் முதலினோரும் சிவதீக்ஷை பெற்றோராயிருப்பராயின் ஆத்மார்த்த பூஜை மாத்திரம் புரிதற்குரியாரெனவும் முக்திபிரதமான பரார்த்த பூஜை ஒருக்காலுமிவர்களால் செய்யக்கூடாதெனவும் ஆதிசைவப் பிராம்மணர்கள் ஆத்மார்த்தம் பரார்த்தமிவ்விரண்டையும் பூஜித்தற்குறியாரெனவும் ஆதியில் சதாசிவமூர்த்தியால் தீக்ஷிக்கப்பட்டவர்கள் ஆதிசைவர்களெனவும் இவர்கள் யாவருக்கும் அநுக்கிரஹிக்கும் யோக்யதையுடையாரெனவும் இவர்கள் பரமேசுவரரது பஞ்சமுகங்களாகிய ஈசான தத்புருஷ அகோர வாமதேவ ஸத்யோஜாதாதி ஐந்து முகங்களின் வழியாய் வெளிவந்தவரெனவும் சிவசிருஷ்டியல்லாது கேவலம் பிரும்மாவின் முகத்தால் வெளிவந்தவர் பிராம்மணரெனவும் இந்த பிராம்மணர்கள் பரவித்யாமயமாம் சிவாகமங்களில் கூறியுள்ள சிவதீக்ஷாதி ஸம்ஸ்காரங்களை ஆதிசைவர்களிடம் பெருவாராயின் மஹாசைவர்களாகிறாரெனவுங் கூறியிருத்தலால் ஆதிசைவ பிராம்மணர்கள் பிரஸவியிலேயே சிவத்வஸித்திபெற்றவரும் பிராம்மணர் பிறந்த பின் ஸம்ஸ்காரத்தால் சிவத்வஸித்தி பெற்றவருமாய்க் காணப்படுதலின் லோகாநுக்கிரஹகரமான பரார்த்தபூஜை ஆதிசைவப்பிராம்மணர்கள் பரத்தே சாதிக்கப்படும் இவற்றால் இவர்களே லோககுருவெனச் சுட்டப்படும். லோககுருவென சங்கராசசாரியர் முதலிய மஹாத்மாக்களைக் குறிக்கப்படுமன்றி கேவலம் கோயில் பூஜை செய்யுங் குருக்களை லோககுருவென்பது தகுமோவெனின் சங்கராச்சாரியார் கேவலம் அபரவித்யா பாஷ்யஞ் செய்து வேதாந்த மதப்பிரவர்த்தகராயிருப்பதால் வேதாந்தத்தி

ல் ஜகதீஸ்வரம் பொய்யாயிருத்தலின் இவற்கு லோககுருத்வ மும் பொய்யாய் முடிந்துவிடும். இக்காரணம் பற்றி சங்கராச் சார்யருக்கு லோககுருத்தங் கூறுவது ஞாயமுகத்தில் நில்லாவா ம். ஜகத் ஜீவன் ஈசன் என்னும் பதி பசு பாச திருபதார் நிர்ணய ங்களை வேதாந்தத்திற்கு பரவித்தையாகிய சிவாகமங்களால் அனு க்கிரஹித்து ஸித்தாந்தித்து நிற்பதால் லோககுருவாகிய ஆதி சைவர்களை கேவலம் கோயில் பூஜையுடையக் குருக்களெண கழி த்து இத்திருபதார்த்த லக்ஷணமற்ற யாவும் பொய்யென்னும் அபிப்பிராயமுடையார் பின் இவர்கள் செல்வதால் யாது பயன் ஆதிசைவ பிராம்மணர்கள் சிவபூஜாதி ஸத்கார்யங்களில் உண் மைப்பொருளும்சங்கராச்சார்யர்சிவ பூஜாதிஸத்கார்யங்களில் இ ன்மைபொருளுமாய் நிற்றலின்எதுபல பிராப்தி என்பதை விவே கிகள் உற்றுணர்வார்களாக இஃன்றி சங்கராச்சார்யார் சிவபூஜை சரமும்ஆதிசைவபிராம்மணர்கள் சிவபூஜைஸ்திரமுமாயிருத்தலி ன் ஸ்திரலிங்க பூஜையை நோக்கச் சரலிங்க பூஜைஸாமான்யமா தலின் சறலிங்கந்தமக்கு மாத்திரமே பலனளிக்கத்தக்கதும் ஸ்தி ரலிங்கம் யாவருக்கும் பலனளிக்கத்தக்கதுமாய் முடிதலின் சங் கரர் பூஜையினும் இவர்கள் பூஜையே யன்றோ விசேஷத்வம் பெ ற்றிருக்கின்றது. இத்தகைய அருமை சிறிது முற்று நோக்காது கேவலங் கோயில் பூஜை செய்யுங் குருக்களெனக் கழிப்பதால் யாது பயன் அவர்களை கழித்தவிடத்திலும் அவர்கள் குருத்வந் தடைப்பட்டதின்று எச்சாதியரும் எச்சமயிகளும் இவர்களை குருக்களென வேசுட்டப்பட்டு எக்காலத்திலுங் குருத்வமுடை ய ஜாதியாகவே நிலை நின்றிருக்கின்றனர். இவற்றால் முக்தி பிரத மாம் ஸ்திரலிங்க பூஜாஸத்கார்யமுடைய ஆதிசைவ பிராம்மணர் களை ஜகத்குருவென்பதுந்தகுதியே இவை சாஸ்திரீகமாகாவெனி ன் இவற்குற்ற லோககுருத்வஞ் சாஸ்திரீகமும் ஆதிசைவரல்லா த ஏனையோர்க்குற்ற லோககுருத்வம் அசாஸ்திரீகமுமாய்க்காண ப்படுதலின் சாஸ்திரோக்தமாகாதெனச் சாதித்தல் கூடாவாம் சங்கராச்சாரியார் முதலினோற்கு சங்கரவிஜயம் முதலிய பிரமா ணங்களில் ஜகத்குருத்வங் கூறியிருப்பதால் அதுபோல் இவ்வா திசைவர்களுக்கு ஜகத்குருத்வங் கூறிய மெய்னூலெது வெனில் எண்டெடுத்து விளக்குவோமாக ஸ்காந்தம் சங்கரஸம்ஹிதை

உபதேச காண்டத்தில்,

த்வம் ஹி லோககுரு: புஷ்பகிரிஸந்தாநஜோ [illegible] | ஶி-
ஷ்யாநிமாந் [illegible] | ஸர்வ-
[illegible] | [illegible]
[illegible] | [illegible]
[illegible] | [illegible]
[illegible] |

என்னும் வாக்கியத்தால் தாங்கள் லோககுருவாய் புஷ்பகிரி ஸந்தானத்தில்தோற்றிமஹாத்மாவாயுள்ளவருதலால் துக்கத்தையடைந்திருக்கின்ற இவர்களை சிஷ்யர்களாகக் கொள்ளல் வேண்டும் எல்லா பாபங்களும் நீங்கத்தக்க தங்களாலாருதிக்கப் படுகின்ற அம்ருதேசுவரரை தர்சிக்கச் செய்து பரிச்சாரகம் புரிதற் பொருட்டு இவர்களை கற்பித்தருளல் வேண்டும் எந்த காலத்திலிவர்கள் துக்கசாகரத்தினின்று நீங்குகிறார்களோ அது பர்யந்தம் இவர்களிடங் கருணை வைத்து அருள் புரிவீருக தாங்கள் லோககுருவாகையால் இது செய்யவேண்டுவதவச்யமாகும் எனக் கூறியிருத்தலால் முக்தி பிரதமான பரார்த்தாலய பூஜா கைங்கர்யம் பெற்ற ஆதிசைவ பிராம்மணர்களுக்கு லோககுருவென்பது பிரமாண பிரஸித்தமாம் சங்கரவிஜயம், நீலகண்டவிஜயம், ராமானுஜவிஜயம், மத்வவிஜயம், ஸோமநாத ஆராத்யவிஜயம் முதலிய கிரந்தங்கள் யாவருமொப்பத் தகுந்த பிரமாண நூலன்றாதலால் அவரவர்களுக்கு சிஷ்யத்வம் பெற்றோர் மாத்திரமே மெச்சதகுந்தது. இவை வேதாகமபுராண இதிஹாஸாதி பிரமாணங்களைப்போல் யாவரும் ஒப்பத்தகுந்த பிரமாண நூலன்றும். இக்காரணம் பற்றி ஆதிசைவ பிராம்மணர்களுக்குற்ற குருத்வம் ஜகத்குருத்வமும் ஏனையோற்குற்ற குருத்வம் அவரவர் சிஷ்யர்களாலேற்றப்பட்டதெனவுங் காணப்படுதலால் ஆதிசைவருக்குற்ற ஜகத்குருத்வம் சாஸ்திரீகமெனத் தீர்மானிக்கப்பட்டு ஏனையோற்குற்ற குருத்வம் அசாஸ்திரீகமென்பதை சாஸ்திரவாயிலாய் திரஸ்கரித்தொதுக்கப்படும். சைவஸமயன் ஸீடுழிகாலந்தழைத்தோங்கியுய்யப் பெருங்கருணை பூண்டு ஸ்திரமாய் லிங்கப்பிரதிஷ்டாபனாதி ஸத்கார்யம் வகித்த ஜகத்குருக்களாகிய ஆதிசைவ

பிராம்மணர்களை கோயில் குருக்களெனக் கழித்து சைவஸ
மயம் மருந்துக்குங்கிட்டா ஏகான்மவாதமாகிய வேதாந்த பாஷ்
யஞ் செய்த சங்கராச்சாரியாரை ஜகத்குருவெனக் கொண்டாட
ல் சைவ ஸமயத்துள்ளோர்க்குத் தகுதியோ அவ்வாரபிப்பிராய
மிருக்குமாயின் பிராமண ஜாதி சிவமதமென கைச்சரத்திடுவதை
நீக்கி பிராமணஜாதி வேதாந்தமதம் அல்லது அத்வைதமதமென
வாவது மாற்றி வைத்துக்கொள்ளுங்கள் வேதாந்தம் வேதத்தின்
முடிபெனப்பொருள் படுமன்றி ஸித்தாந்தமாகாதாதலின் ஸித்
தாந்தரூபமான பரவித்தையாஞ் சிவாகமத்தால் சாதிக்கப்பட்டு
ள்ள சைவசமயத்தைவிட்டு ஏகான்மவாதமுதலிய நாஸ்திகாதி
மதத்துட்பட்டு வருந்துதல் கலிவலிமிகுதியாலன்றோ முதலில்
வேதாந்தவாதத்தா லாலோசிக்கப்புகுவோமாயின் கொலைகளவு
கட்காமம் முதலிய துராச்சாரங்கள் யாவும் ஸதாச்சாரமாய் பரி
ணமிக்கும் வேதாந்தவாதத்தில் தனக்கன்யம் பொய்யாதலின்
மெய்யாத்தோற்று முருவங்களை கொன்று விடுதலால் தோஷமு
ண்டாகா தோஷத்தையடைய பிரும்மத்தைத்தவிற பதார்த்த
மின்றுதலால் கொன்றது பிரும்மம் கொல்லனின்றதும் பிரும்ம
மாய் முடிதலின் ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம எனவேதம் விதித்
துள்ளதும் இவர்களுக்குடன் பாடன்று பிரும்மம் வ்யாவஹாரி
கத்தில் நிற்பது ஜீவனாதலால் ஜீவஹத்திசெய்தல் கூடாதெனின்
கொலைசெய்வதால் வ்யாவஹாரிகங்கெட்டு பார்மார்த்திகவந்து
விடுவதால் ஜீவஹத்தி எழுமென்பது புலப்படுகின்றது இவ்வா
றேகளவும் தனக்கன்யம் பொய்யாய் யாவும் பிரும்மமயமாயிருத்
தலால் முடிச்சவிழ்ப்பதும் பிரும்மந்தான் முடிச்சவிழ்க்க கொடு
த்ததும் பிரும்மமாயிருத்தலில் திருட்டென்னுங்குற்றமிதிற்கில்
லை கிருமினல் கோர்ட்டார் முதலியபிருமங்கள் இத்திருட்டுப்பி
ருமங்களைத் தெண்டிக்கக்காறணமென்னோ அவை வியவஹாரிக
த்திற்கு விரோதமெனின் பாரமார்த்திகத்தில் விரோதமின்மை
யும் வ்யாவஹாரிகம் பொய்யாயிருத்தலின் திருடினதும் பொய்
யாய்முடிந்துவிடும் இத்திருட்டுப் பிரும்ம தண்டனைக்குட்பட்டு
நிற்கக்காறணமென்னோ இவ்வாறே பிரர்மனவியை கலவியால்
கைபிடிக்க விரும்பினும் பிரும்மம் பிரும்மத்தைச் சேஷ்டிப்பதா
ய் முடிதலன்றி இச்சேஷ்டையில் குட்டிகுளவான் பிரும்மம்

உண்டாய்த்திரிவதால் அக்குட்டிபிரும்மமுண்டானதும் பொய்யாம் இதில்மனஞ்சகியாது என் பெண்டாட்டியை எப்படி நீ கைபிடித்தாயென்று கூக்குரலிட்டு தடியால் தீட்டும் பிரும்மமும் தடியடிபட்டுவருந்தும் பிரும்மமும் ஒன்று மாறுயாங்னம் இவ்வாறே கள்ளுண்டு மயங்கும் பிரும்மத்திற்குக் கள்குடி பொய்யாயிருத்தலின் கள்குடித்தோர் கள்ளேகுடிக்கவில்லை என சாதிப்பதற்கு இவ்வேதாந்தவாதம் சாதகமேயாகும் இவ்வாருள்ள வாபாஸம்பலவுள வற்றையும் விறிவஞ்சி விடுத்தோம். இதற்கே ஏகான்மவாதமெனப்பெயராம் ஆனல் வேதாந்தமென்பது பொய்யோவெனின் வேதாகமம் முற்றறிஞனுகிய பசுபதிதிருமுகத்தினின்று வெளிப்பட்ட மெய்நூலாதலின் அவை பொய்யாபாறெங்கனம் வேதாந்தம் சார்வாகனை நோக்கி பரிபவப்படுத்தவெழுந்ததிருவாக்கே யாதலின் சார்வாகன் சரீரத்தைத்தவிர ஜீவனே இல்லை என வாதிக்கும் வாதியாதலால் சரீரத்திற்கு பரமாய் ஜீவனென்றுளதென ஸித்தாந்தித்துள்ளது வேதாந்தமென்பது தெற்றெனவிளங்கும் இக்காரணம்பற்றி வேதாந்தம் அத்யாத்மசாஸ்திரமென்பதாய் சுட்டப்படும் இவ்வத்யாத்மிகத்திற்குமேல் அதிமார்க்கம் மாந்திரிகமென இரண்டுமார்க்கங்களிருத்தலின் இவ்விரண்டையுநோக்கவே தாந்தந்தாழ்ந்ததேயாகும் சார்வாகனைநோக்க வேதாந்திகள் விசேஷரென்பதி லெமக்குத்தடையில்லை அதிமார்க்கம் மாந்திரீகத்தை நோக்க வேதாந்தம் உயர்ந்ததென்பதை வேதமே ஒப்பாது இவற்றால் வேதாந்தமெனவுஞ் சித்தாந்தமெனவு மிரண்டு பிரிவான மெய்நூல் சிவபெருமானல் கூறப்பட்டுள்ளதாதலின் வேதாந்தம் வேதமுடியும் சித்தாந்தம் சிவாகமத்தின் முடியுமாய் நிற்றலின் சித்தாந்தமன்றி வேதாந்தம் பயன்படா வேதாந்தத்தை ஸித்தாந்தித்தனுக்கிறகித்து நிற்பது சிவாகமமேயாதலால் சிவாகமாதி பரவித்தை ஜன்யஞானம் ஸத்பிராம்மணாதிகளுக்கு அத்யாவசியகமாய் வேண்டப்படும் இவ்வாருள்ள வுண்மையை அணுத்துணையுமரியாது யாம் வேதாந்தி எமக்கொன்றுமில்லை என நாஸ்திகருதல் கூடுமோ வேதாந்திஜீவனென்றுளதென சுட்டிநிற்போருதலால் நாஸ்திகராதல் யாங்கனமெனின் ஜீவன் பிரும்மமாகமதித்து நிர்விகார பிரும்மத்திற்கு விகாரஞான பிராந்திவ்யாவஹாரபிரதிபிம்பகுண விசேஷமேற்றி

பிரும்மமே பிறக்கிறது பிரும்மமே இறக்கிறது இப்பிறப்பிறப்பிற்
குட்பட்ட பிரும்மத்தைத் தவிற வேறொன்றில்லை என வேதாந்தி
நிர்மாணித்து விடுதலால் இவற்றை உண்மையில் யோசிக்குமிடத்
தில்ஜீவனாய் நிற்றலின் பிரும்மமென்பதிவர் கட்டியபொருளாக
பிரும்மஞானமற்ற இந்தவாதம் நாஸ்திகமென்பது தெற்றெனவி
ளங்கும் அதிமகிமைதங்கிய பரவித்தையாஞ்சிவாகமத்தை நீற்று
வேதத்துட்பொருளாராயப் புகுவோற்கு வேதமுண்மைப்பொரு
ள் விளக்கா இவ்வாறுள்ள ஞாயம் பலவுளவற்றால் வேதாகமாதி
ஸத்பிரமாணங்களை கைப்பற்றி நிற்கும் ஆதிசைவபிரும்மணர்க
ளே ஜகத்குருவெனவும் அவர்களால் ஸர்வான்மாக்களும் முக்த்
திபெற்றுய்ய பிரதிஷ்டிக்கும் லிங்கமே சைவஸமயத்துள்ளார்க்கு
பெருந்தாரக மெனவும் இத்தகைய சைவமதஸ்தாபனஞ் செய்த
சிவாச்சார்யர்களை இன்றும் ஜகத்குருக்களாய் யாவரும் மதித்
திருக்கின்றாரென்பதிற்றடையில்லை விபூதிசிவபிரஸாதங்கள் சிவ
தர்சனம் முதலிய ஸத்கார்யங்கள் இஜ்ஜகத்குருக்களாலன்றோ
நன்னடை பெற்றுவருகின்றது. இப்பூஜையில் வேதாந்தப்பிர
வர்த்தகம் வகித்தசங்கராச்சாரியார் பரம்பரையார் தானே நேரஸ்
திரலிங்காதிகளை பூஜிக்கவேண்டுமென கோயிலில் நுழையப்பிர
யத்தினிப்பது இன்றும்வழக்கமாயிருக்கின்றது-சங்கராச்சாரியர்
ஸ்வாயம்புவாதி ஸ்திரலிங்கத்தைத்தொட்டு பூஜிக்க வேதாகம
புராணஇதிஹாஸாதிகளில் விதியிருக்கின்றதா சைவஸமயத்தி
லுள்ள ஸத்பிராம்மணாதிகளுமன்றோ இவ்வகார்யத்திற்கு முந்தி
னின்று பிரயத்தினஞ் செய்யப்புகுகிறார் சங்கராச்சாரியார் ஜகத்
ருவா யிருப்பதால் அவர்புக யாம் பிரயத்தினிக்கிறோமெனின்
அவர்க்குற்ற ஜகத்குருத்வஞ் சாஸ்திரீகமன்றென ஞாயமுகத்தா
ல் நிரூபித்துள்ளோமாதலின் பிரமாணப் பிறவிலித்தமாய் ஜகத்
குருத்வம்பெற்ற ஆதிசைவப் பிராம்மணலிங்க நிஷ்டாதி சிவதர்
மங்களில் பொய்க்குருக்கள் புகுதல் நீதியோ அங்ஙனமும் இவர்
கையில்பஸ்மமுதலிய ஐசுவர்யஸம்பத்தியை உலகினர்அங்கீகரி
த்து வருகின்றார்களா ஒய்குருக்களே விபூதிகொடுமெனக் கேட்
கின்றாரேயொழிய சங்கரர்பூஜையில் பஸ்ம வைபவங் கொண்டா
டப்பட்டு வருகின்றதா இச்சங்கராச்சாரியாரையுமன்றோ ஜகத்
குருக்களாகிய ஆதிசைவப்பிரும்மணர்கள் திருக்கரத்தால் பஸ்ம
ம்பேரவேதசிவாகமங்கள் விதித்திருக்கின்றது இதில் சிலரவிகை

றுற்று ஸ்வாமியார் சிவத்விஜர்கள் கறத்தால் பஸ்மம்பெருதல்
கூடாதெனநினைத்து தட்டைநீட்டி அத்தட்டிலிருந்து தானே
எடுத்துக்கொள்வது தகுதிஎன நினைக்கிறார் சிவத்விஜர் திருக்கர
ம் ஸத்பாவமுடையதுந்தட்டு அஸத்பாவமுடையதுமாய் காணப்
படுதலின் அஸத்தைதன்னேக்க ஸத்திற்குயர்வு கூறப்படுதலின்
ஸத்தைநீக்கி அஸத்தை இப்பஸ்மபிரதான விஷயத்திலுட்கொ
ண்டதற்கு காரணமென்னே - ஸ்வாமியள் மஹானாயிருப்பதால்
இவர் கொடுத்தல் கூடாதெனின் மஹான்ஸத்தா யுள்ளவரிடத்
தில் பிரஸாதங் கிறஹிக்காது அஸத்தனிடம் பிரஸாதங் கிரஹி
ப்பதற்கு விரும்பிநிற்பதென்னே தானேஸ்வீகறித்துக் கொள்வ
தால் பாதகமில்லைஎனின் தாமேதம்மிடமிருக்கும் விபூதியைஸ்வீ
கரித்துக்கொள்வ துசிதமாமன்றி தமக்கன்யஞ் சிவபெருமான்
திருச்சன்னிதானத்திலுள்ள பஸ்மாவை இவர் ஸ்வார்த்தமாய்
ஸ்விகறிப்பதெப்படி இச்சங்கராச்சாரியார் யாவும் பிரும்மாகார
மாய்பாவிக்குபிருமஞானியாதலால் இவற்கு ஸாமான்யர் விபூதி
கொடுத்தல் கூடாதெனின் விபூதிகொடுப்பதும் பிரும்மம் விபூதி
வாங்குவதும் பிரும்மமாய்முடிதலின் விபூதிகொடுக்குஞ் சக்தியு
ள்ள பிரும்மத்தை நீக்கி விபூதிகொடுக்கச்சக்தியற்றதாம் பாளம்
பிரும்மத்தை இச்சத்கார்யத்தில் கைக்கொண்டதற்கு காறணம்
யாதோ பரார்த்தத்தில் பூஜித்து உபஜீவிப்பவர்களை கானினீய
ரெனவும் குண்டகரெனவுங் கோளகரெனவும் நிஷித்தங்கூறப்ப
டுதலின் மஹானாயுள்ளோற்கிவர் பிறஸாதங்கொடுத்தல் கூடா
தெனின் இவற்கு யாவும் பிரும்மாகார பாவமா யிருத்தலின்
குண்டர் கோளகரென்னும் பேதமிவர்பறத்தில்லை இங்கனம்விசா
ரிக்கவேண்டுவதத்யாவச்யமாக விருத்தலின் அவற்றையுற்றுநோ
க்கப்புகுவோமாக பரார்த்தத்தில் உபஜீவிப்பவர் ஆதிசைவறல்ல
ரென்பதும் முன்னெடுத்து நிரூபித்துள்ள விஷயமாதலின்
மீண்டுமவற்றை பிரஸ்தாபிப்பது புனருக்திதோஷமாய் முடியும்
இகன்னங்கானினீயர் குண்டர் கோளகர் என்பவர்களைப்பற்றி மா
த்திரமே விசாரிப்பதத்யாவச்யகமாம் கானினீயரென்பது கன்னி
கழியா ஸ்திரீயினித்துண்டானோ றென்பது சாஸ்திர பிரஸித்தி
யாதலால் ஆதிசைவபிராம்மணோத்பத்திகன்னி கழியாஸ்திரீயினி
டம் உண்டானதாய் வேதசிவாகமங்கள் கூறத்துணியா பரவித்

தையாகியசிவாகமங்களில் இப்பரமாச்சார்ய பூதர்கள் சிவமுகோத்பவ சிவஸிருஷ்டியுடையா ரென்பதாய் நாட்டப்பட்டிருத்தலின் இம்மஹாத்மாக்களை கானினீயரென கூறுதல் சிவாபசாரமாய் முடியும் ஶிவேந ஸ்தாபிதம் ஶைவம் ஶைவேந ஸ்தாபிதம் ஶிவ:॥ஶிவஶைவவிஹீநா து ஶிவப்ராஹ்மண உச்யதே। என்னும் பரசுருதிவாக்கியத்தால் சிவனால் சைவஸமயம்ஸ்தாபிக்கப்பட்டதெனவும் சைவத்தால் சிவபெருமானை ஸ்தாபிக்கப்பட்டதெனவும் சிவபெருமானையும் சைவஸமயத்தையும் உட்கொண்டு விசுத்தாத்மாவாயுள்ளவர் சிவப்பிராமணரெனவுங் கூறியிருத்தலால் இவர் பரத்துக்கானினீயதோஷமேற்ற முயல்வது வேதமறியாதோர் செயலேயாகும் இஃதன்றி

ஶிவஸ்யைவ வக்த்ரோத்³ப⁴வா ஶைவப்³ராஹ்மணஸம்ஜ்ஞிதா: ॥ ஜாதாஸ்து மஹர்ஷிஶைவாஶ்ச கேவலம் ப்³ரஹ்மணோ உத்³ப⁴வா: ॥ ஜாதா ஸ்ருஷ்ட்யா விநா ஸர்வம் ஹா ப்³ராஹ்மணாய உஹாத்மபி: ॥ ஆதிஶைவேஷு தே ஶிவப்ராதீக்ஷிதா ப்³ராஹ்மணாஸ்ததா ॥ ஶிவதீக்ஷாதிஸம்ஸ்காரை: ஸர்வேஷாம் உ விஶ்வதே ஹி: ॥ தஸ்மாத் ஸர்வப்ரயத்நேந மஹாஶைவதீக்ஷிதா:

என்னும் பரசுருதிவாக்கியத்தால் பரமேசுவரரது ஈசானாதி பஞ்சமுகங்களிலிருந்து சிவபிராம்மணர்கள் உண்டானாரெனவும் சிவஸிருஷ்டியல்லாது கேவலம் பிரும்மமுகத்தால் வெளிவந்தவர் பிராம்மணரெனவும் ஆதி சைவர்கள் பரசுருதி சிவாகமங்களில் கூறியசிவதீக்ஷையால் பிரும்மமுகோத்பன்னர்களாகிய பிராம்மணர்களை மஹா சைவராகச்செய்தல் வேண்டுமெனவுங் கூறியிருத்தலால் ஆதி சைவப்பிராம்மணர்கள் சிவமுகோத்பவ சுத்தபுவனஸிருஷ்டி பேதமுடையாரென்பதும் இச்சுத்தாத்மாக்கள் பிராம்மணர் முதலானோருக்கும் சைவத்வஞ் சித்திப்பதற்கு ஆச்சார்யரெனவுங் காணப்படுதலின் இவர்களை கானினீயர் என்பது குருவுக்கு நாமம்போட நினைந்த மூடர் கொள்கையேயன்றோ இவற்றால் கானினீயர் இவரன்றென்பது வேதாகமாதி பிரமாணமுகத்தால் புலப்படுகின்றது பின் கானினீயர் யாவரென்பதை விசாரிக்கப்புகுவோமாக பராசரர் ஓடத்திலேறிச்செல்லும்போழுது சுபமுகூர்த்தம்வர ஆங்கு கன்னிகழியா மத்ஸியகந்தியை

யோசனகந்தியாக்கி புணர்ந்து அதினின்றுண்டாகியவர் வியாஸர் முதலினோர் என புராணங்கூறப்பட்டிருத்தலின் அவர்வம்சத்தவர் கானினீயரென்பது புராணமுகத்தால் புலப்பட்டு நிற்கின்றது இனியேனும் கானினீயர் இன்ன வம்சத்தவரென்பதை லக்ஷித்தறிந்தடங்குவாராக இனி குண்டரைப்பற்றி விசாரிப்பாம் ஜீவதி ஜாரஜ: குண்டோ ம்ருதே பர்த்தரி கோளக: । என்னும் வாக்கியத்தால் பர்த்தா இருக்கும்பொழுதே சோரத்தனமாய் அன்யரைக்கலந்து பிறக்கும் பிள்ளைகளுக்கு குண்டனெனவும் பர்த்தா இறந்தபின் முண்டைகள் புருஷரைக்கலந்து பிறக்கும் பிள்ளைகளுக்கு கோளகனெனவும் பெயரெனக் கூறியிருத்தலால் உத்தமோத்தமமான ஆதிசைவப்பிரும்மண ஸிருஷ்டி சிவமுகோத்பன்னமுடைய சிவசிருஷ்டியேயாதலின் குண்ட கோளகத்வ வியவஹாரமிவற்கேரக்காரணமில்லைதாறை அகலிகை முதலிய ரிஷிபத்னிகள் புருஷனிருக்க அன்ய புருஷனைக்கலந்து ரமித்ததாய் புராணமுகமாய் வெளிப்படுதலால் அவ்வாருள்ள ரிஷிகோத்திரத்திலுதித்தவர்களே குண்டருவரென்பது தெற்றெனப்புலப்படுகின்றது இவற்றால் ஸத்பிராம்மணர்களாகிய ஆதிசைவபிராம்மணர்களை குண்டறென தூஷிக்க முயன்றது விச்சாரணைக் குறைவாம் இனி கோளரென்பதைப்பற்றி பறிகறித்தொதுக்குவோமாக ஆதிசைவபிராம்மணர்கள் உத்பத்தி சிவமுகோத்பவமுடையதாதலின் இவர் முண்டைக்குப்பிறந்த மக்கள்கள் ஆகார் ஒருவிஞபகறை ஸுமங்கிலியொருத்தி பிரதிதினமும் குடத்து நீருலபிஷேகித்து புத்திரசந்தானம் உண்டாக வேண்டுமென பிரார்த்திக்கிறது வழக்கமெனவும் அவளோடு கைம்பெண்டாட்டியொருத்தி ஸுமங்கலி செய்வதுபோல் விக்னேசுவரருக்கு அபிஷேகஞ்செய்து அவளதை விரும்புகிறுளோ அதை எனக்குத்தறல்வேண்டுமென பிறார்த்தித்தாளெனவும் ஸுமங்கலி கர்ப்பவதியாயிருந்து புத்திரனை பிரஸவித்தாளெனவும் அமங்கலியும் அவ்வாறே கர்ப்பவதியாயிருந்து புத்திரனை பிரஸவித்தாளெனவும் அப்புத்திரன் கல்விமானுய்வேதாந்தாதி மதபிறவிஷ்டனுய் வியாபகனுயிருந்து அனேக சிஷ்யருடன் இருந்தார் என்பதாய் சிலனூல்கள் கூருவதால் அவ்வாரு அமங்கலிக்குப் பிறந்தவரும் அவற்கு உடன்பட்டு சிஷ்யருயுள்

ளோரும் கோளகர்களேயாவர் இவ்வுண்மையுணர்ந்து சிவமுகோத்பவர்களான ஆதிசைவர்களை கோளகரெனக் கூறமுயன்றது தனக்குற்ற கோளகத்வத்தை பிரகாசிப்பிக்கும் பொருட்டேயன்றி வேறன்று இவற்றால் ஜகத்குருக்களாகிய ஆதிசைவபரமாச்சார்யமூர்த்திகள் பிறவியாலும் ஜாதியாலும் ஸமயத்தாலும் அச்சமய உணர்ச்சிக்குத்தக்க மெய்நூலாலும் அந்நூன்முகத்தாலனுஷ்டிக்கும் பரதர்மங்களாலும் ஸர்வான்மாக்களினும் மேம்பாடுடையவராயிருத்தலின் இவர்கள் திருக்கரம் அசுத்தமாவதெப்படி

ஶிவத்விஜகரேணைவ ஹஸ்தே தேயம் விஶேஷத: ॥ அந்யத்விஜகரேணாய ஹஸ்தே தேயம் ந காரயேத் ॥ ஶிவத்விஜகரம் ஹஸ்தம் ஶிவஹஸ்தமிதி ஸ்ம்ருதம் ॥ அந்யத்விஜகரம் ஹஸ்தம் ஶிவத்ரோஹீதி கீர்திதம் ॥ ஸர்வப்ரயத்நேந ஶிவஹஸ்தேந தாரயேத் ॥ அந்யதா குர்வதோ மோஹாத் ரௌரவம் நரகம் வ்ரஜேத் ॥

என்னும் பரசுருதி வாக்கியத்தால் சிவத்விஜர்கள் கரத்தினாலேயே விபூதிகொடுக்கவேண்டுமெனவும் அன்யத்விஜர்கள் கரத்தினால் கொடுத்தல் கூடாதெனவும் சிவத்விஜர் கரத்தால் கொடுக்கப்பட்ட பஸ்மா சிவஹஸ்தத்தால் கொடுக்கப்பட்டதற்குச் சமானமாகுமெனவும் அன்யத்விஜர் கரத்தின் பஸ்மாவானது அமங்களத்தை உண்டாக்கு மெனவும் சிவஹஸ்தத்தினாலேயே ஸர்வ பிரயத்தினங்களினாலும் பஸ்மாவைப் பெறுதல்வேண்டுமெனவும் இதற்கன்யதாவாக நடப்பாரேயாகில் ரௌரவாதிநரகத்தை அடைவரெனவுங் கூறியிருத்தலால் இம்மஹிமை தங்கிய ஆதிசைவ பிராம்மணர்கள் திருக்கரத்தால் மஹாத்மாக்கள் யாவரும் சிவபிரஸாதம் பெறுதல் உசிதமேயன்றோ—சங்கரர் முதலியவர்கள் வானபிரஸ்தத்திற்கு மேலான துரியமாம் ஸன்யாஸ ஆசிரமத்திலுள்ளவராதலின் கிரஸ்ததர்மமுடைய ஆதிசைவர் விபூதி பிரஸாதங் கொடுத்தல் கூடாதெனின் ஸன்யாஸம் சைவஸன்யாஸம் வைஷ்ணவஸன்யாஸம் மென இருகூறாய் நிற்றலின் சுத்தசிவ ஸாக்ஷாத்கார சிவதர்மணீ தீக்ஷா ஸம்ஸ்கார துரீயத்வமிவற்கில்லையாதலின் வைஷ்ணவம் சைவமென்னும் ஸமயத்தாற் குறிக்கப்பட்ட இருதிறத்துஸன்யாஸமும் இவற்குடன்பாடற்ற

தாரும் ஸமயத்தால் மேம்பாடடையாததும் கேவலம் வேதாந்தத்தால் ஜீவஞானம்பெற்று யாவத்கர்மத்தையும் பரித்யஜித்து வேதோக்தமான பூணல் குடுமி எழந்து கர்மபிரஷ்டராய் நிற்குமிவர்களை துரீயாசிரமீ எனவும் ஸன்யாஸி எனவுங்கூறுதல் தகுமோ ஸன்யாஸமும் பிரும்மசர்ய கிரஹஸ்தவானபிரஸ்தஸன்யாஸமென்னும் நான்காவதான ஆசிரமமுடையதாதலின் இவை ஆசிரமபேதமான தர்மங்களேயன்றோ இவற்றிற்குவேதோக்தமானபூணல் குடுமி காயித்திரி முதலிய ஸத்காரியத்தில் பங்கம் வருதல் கூடுமோ வருணஸம்ஸ்காரத்தில் காயத்திரியைவிட உயர்ந்த மந்திரம்வேதத்திலேயேயில்லையாதலால் அவற்றை கைவிட்ட இவர்கள் பிராம்மண பிருஷ்டருவார்—வேதோக்தஸம்ஸ்காரமாகிய பூணல் குடுமி முதலியவை பரித்யாகமாவதால் வேதவிஹித கர்மாக்களை பரித்யாகஞ்செய்தவர் அவைதிகராவர்கள் இவ்வாறு வைதிகபிரஷ்டராயுள்ளவர்களை ஸன்யாஸி எனவுந்துர்யாசிரமி எனவுங்கூறுதல் கூடுமோ ஆசிரமத்தை அதிக்கிரமித்தவிடத்தில் காயித்திரி நீங்குதல் கூடுமெனின் பிரும்மசர்யத்தை அதிக்கிரமித்த கிரஹஸ்ததர்மத்தில் காயித்திரி நீங்காதிருத்தலாலும் கிரஹஸ்தத்தை அதிகிரமித்த வானபிரஸ்தத்தில் காயித்திரி ஆசிரமாதீதத்தில் நீங்காதிருந்ததுபோல் ஸன்யஸித்தலிலும் காயத்திரி நீங்கக்காரணமில்லை ஸன்யஸித்துள்ளோற்கு பிரணவ ஜபமேவிசேஷமெனக் கூறியிருத்தலால் காயித்திரிநீங்கிவிடுமெனின் பிரணவத்தைமாத்திரம் ஜபம்செய்பவரிலும் பிரணவம்காயித்திரி இவ்விரண்டையுஞ்சேர்த்து ஜபிக்கும் பிரும்மச்சாரியே விசேஷமெனக் காணப்படுதலால் பிரும்மசர்யத்தில் கீழிட்டளாமான் புறை துரியாசிரமி எனக்கூறுதல் கூடாது பிரணவம் ஸன்யாஸிக்கே யுறித்தானது மற்றோற்கு கூடாதெனின் சூத்திரரிற்கு மேலிட்ட வைச்யர்முதல் பிராம்மணபர்யந்தம் பிரணவாதிகாரமுடையாரெனக் கேட்ப்படுதலால் ஸன்யாஸிகளுக்கு பிரணவத்தை ஸர்வமான்யமாய் விடப்பட்டதென்னுஞ்சொல் ஏறுது இவற்றால் இவர்களை ஸன்யாஸிஎனவுந் துரியாசிரமிஎனவுந் கூறுதலடாது பின்னை வேதங்களில் 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌰𑍍𑌥𑌾𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌯𑌤𑌯𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌃 𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌪𑌰𑌾𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇 𑌪𑌰𑌾𑌮𑍃𑌤𑌾𑌃 𑌪𑌰𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇

மாதலால் வேதாந்தம் கீழிட்டுள்ள ஏழு ஸ்தானத்தையே வெளி
ப்படுத்துமென்பது பொருளாகின்றபடியால் அதற்கு மேல் நாத
நாதாந்தமுதல் நிருமயமிருதியாக ஸ்தானம் ஐந்திருத்தலால் இவ்
ஐந்தை வேதாந்தம் விளக்குமியல்புடையதன்று ஸித்தாந்தரூபமா
ன சிவாகமங்களே இவ்வைந்து ஸ்தானங்களையும் நன்கு விளக்க
வல்லது இதன்றி சிவதீக்ஷாதி ஸம்ஸ்காரத்தால் நிர்மலாத்
மாவாய் இருத்தல் வேண்டுமென்பது சுருதிமுகத்தால் வெளியா
யின இதுவும் சிவாகமத்தால் அறியத் தகுந்த மார்க்கங்களாம்
ஸதாசிவபுவனத்திலிருந்து என்பதற்கு சிவாகமமே பயன்பட்டு
ன்றிடுமாதலின் வேதாந்த மிங்கனம் விலக்காகும் ஸமனு உன்ம
னு பேதங்களும் லயபோக அதிகாரக் கிரமங்களும் சிவாகமத்
தால் வெளிப்படுமன்றி வேதாந்தத்தால் விளங்கத் தக்கதன்று
அகாரர்த்தி அதிஷ்டாதாக்களை சிவாகமம் விளக்குமன்றி வேதாந்
தம் விளக்குவதன்று இவற்றால் சிவாகமஞர்களுக்கு ஸன்யாஸ
யோகம் கைகூடியுள்ளதென்பது திண்ணம் பரமசிவஞானத்தில்
ஆத்மாவை சேர்ப்பது ஸித்தாந்தரூப சிவாகம ஞானமேயன்றி
வேதாந்திக்குத் தனக்கன்யம் பொய்யாதலால் சிவபெருமானிருப்
பும் பொய்யாம் அந்த ஞானத்தில் ஆத்மாவை சேர்ப்பதென்ப
து பொய்யாம் இவ்வாறு சுருதிக்கிலக்கான வேதாந்திகளை ஸம்
ஸாரபாசம் எப்பொழுதும் விடாது இக்காரணம்பற்றி இந்த்
சுருதியும் சிவாகமஞர்களுக்குப் பயன்படுமன்றி வேதாந்திகளுக்
கு அணுத்துணையும் பயன்படா இவற்றாலும் ஆதிசைவர்கள் ஜ
கத்குருவென்பது தெற்றென வெளியாகின்றது இம்மஹிமை
பொருந்திய ஆதிசைவர்களை நோக்க ஸன்யாஸி விசேஷமென்பதை
யாவரொப்புவர் ஸன்யாஸி என்பது வைஷ்ணவம் சைவமென
பேதமிரண்டுடையதாதலின் தற்கால வியவஹாரத்திலுள்ள ஸன்
யாஸிகள் வைஷ்ணவஸன்யாஸியா அல்லது சைவஸன்யாஸியா
வைஷ்ணவஸன்யாஸியாயின் பூணல்குடுமிகளெடுத்து நித்யானுஷ்டா
ன மொழுக்கக்காரணமில்லை சைவஸன்யாஸியாயின் சிவதீக்ஷை
மஹாகாரண பஞ்சாக்ஷரஜபஞ் செய்வதோடும் பூணல் குடுமி
யும் இருக்கும் இவர்கள் சிவகாயத்திரி ஜபஞ் செய்தல் வேண்
டும் இவ்விருதிறத்திற்கும் விலக்காம் ஸன்யாஸம் யாதென்பதா
ய் ஆசங்கிக்க இடந்தருகின்றது ஸ்மார்த்த ஸன்யாஸமெனின்

ஸ்மார்த்தமதமென ஸமயமிருந்தாலன்றோ ஸ்மார்த்தஸன்யாஸமெனக் கூறுதலுங் கூடும் ஸ்மார்த்தமென்னும் மதமின்றாதலால் இங்ஙனம் ஸன்யாஸி என்பதும் விருத்தமாம் ஸ்மிருதி அநுஷ்டானமுடையார் ஸ்மார்த்தர் என்பது கூடாதோவெனின் விபூதி சிவபூஜை உருத்திராக்ஷதாரணம் முதலிய பரதர்மங்கள் ஸ்மிருதியை அறுத்தெடுத்தாலும் அகப்படாதாதலால் ஸ்மார்த்த ஸன்யாஸிகளுக்கு பஸ்மருத்திராக்ஷ சிவபூஜாதி பரதர்மங்களிருக்காய் முடியும் வேதாந்த ஸன்யாஸிகளெனின் வேதாந்தம் பரகிருதி முதல் பிருதிவிதத்வபர்யந்தம் ஜகத்தெனச் சுட்டப்படுவதால் நாதபர்யந்தமே இங்ஙனம் வெளியாதல் பற்றி நாதாந்தம் முதற் கிராம்ய சிவபதம் வரையில் விளக்கும் சைவஸித்தாந்திகள் பரத்தே பஸ்மருத்திராக்ஷ சிவபூஜாதி பரதர்மங்கள் நிற்றலால் வேதாந்திகளுக்கிவை குற்றமாம் வேதாந்திகளுக்குத் தமக்கன்யம் பொய்யாயிருத்தலால் பஸ்மருத்திராக்ஷ சிவபூஜாதி ஸத்கர்மாங்களும் மித்தைப்பொருளாம் ஸித்தாந்த ரூப சிவஞானிகளுக்கிவை ஸத்யப்பொருள் இதிற்சிறிது முற்றுணைக்காது இவர்கள் பஸ்மனைப்பவங்கொண்டாடல் குற்றமாம் இச்சன்யாஸிகளிடத்து சிற்சிலர் பஞ்சாக்ஷரம் முதலிய மஹாமந்திரங்களுபதேசம்பெறுகின்றார் ஸன்யாஸிகள் குருத்வமாயமைதற்கு பதினாலீடந்தருமா [illegible] நா। என்னும்வாக்கியத்தால் கிரஹஸ்தன் ஸர்வவர்ணிகளுக்கும் குருவென்றும் ஸன்யாஸியால் இந்த கார்யத்தைச் செய்யக் கூடாதென்றும் செய்தால் அந்த கர்மம் நிஷ்பலமாமென்றுங் கூறியிருத்தலால் ஸன்யாஸிகளிடத்தில் மந்திரோபதேசம் பெற்றோர்க்கும் கார்யஹானியை உண்டாக்கும். [illegible] । அதிசைவகுலத்தில் ஜனித்தவர் பிரதிஷ்டாதி

களுக்குச் சிறந்தவர் பிராமமணர் முதல் சூத்திரர் பர்யந்தமுள்
ளநான்கு வருணத்தாரும் தங்கள் தங்கள் ஆத்மார்த்தக் கிரியைக
ளேயே செய்தற்குரியார் யாவருக்கும் தீக்ஷை செய்தல் பிரதிஷ்
டை உத்ஸவம் ஸ்நபனம் ஸம்ப்ரோக்ஷணை பிராயச்சித்தாபி
ஷேகம் சிவஞானசாஸ்திரமுபதேசித்தல் இவை முதலிய முக்தி
பரதமான பரார்த்த கர்மாக்களில் ஸ்வார்த்தத்திலும் பரார்த்த
த்திலும் ஜகத்குருக்களாகிய ஆதிசைவர்களுக்கு அதிகாரமிருப்
பதோடும் ஸகலதேவார்ச்சனைகளிலும் அதிகாரமுள்ளவரெனக்
காணப்படுவதால் மந்திரோபதேசம் முதலிய ஸகல கர்மாக்களு
க்கும் ஆதிசைவர்களே அதிகாரிகளென்பது தெற்றென வெளி
யாகின்றது இவர்களை நோக்க ஸன்யாஸிகள் விசேஷரென்பது
சாஸ்திரமறியாதோர் செயலேயாகும். அத்வைதபாஷ்யம்செய்தரு
ளிய வேதாந்தாவலம்பிகளாகிய ஸன்யாஸிகளை நோக்க ஆதி
சைவ பிராம்மணர்கள் விசேஷமுறுவது யாங்கனமெனின் சிவஞா
ன சித்தியார் நானே பிரமமென்றுரைத்து ஞாலம் பொய்த்தே
ரென வெண்ணிநூனை புகுந்து நின்றுயிர்கட்குபதேசங்களுரைக்
கு வருமாணுமதிகேடனுமாய் மாயாவாதி பேயாகித் தானேயுரை
க்குமன்றாலி னுண்மை தன்னைச் சாற்றுவாம். என்னும் வாக்
கியத்தால் நானேபிருமமென்றும் இவ்வுலகம் பொய்த்தேர்
போன்றதெனக்கூறிய இவர்சுக்கில சுரோணிதக் கூட்டுறைவால்
ரத்தமாம்ஸாஸ்தி மயசரீரத்தில் புகுந்து இவர்க்கன்யமானவுயிர்
களுக்குபதேசிக்கும் பெரியமதிகேடனுமாய் இவர்கள் மாயையால்
பிடிக்கப்பட்ட பிசாசாய்தானென அகந்தை கூறியுரைக்கு இம்
மாயாவாத ஞாலினுண்மையும் சொல்கிறேனென்றார் இவற்றை
நோக்கியே யன்றோ திருலோசன சிவாச்சாரியார் பரவித்யாபாஷ்
யத்தில் சிவஜ்ஞாநம்விநா கேவலாத்வைத ஜ்ஞாநேந முக்தி
ர்நஸித்யதி-ரு என்னும்வாக்கியத்தால் சிவஞானமல்லாது கே
வலாத்வைதஞானத்தினுல் முக்திகிட்டாதெனவுங் கூறியிருக்கின்
றார் கேவலாத்வைதஞானம் ஜீவஞானமே யாதலால் அதுசிவஞா
னமாகாது இதுவுமன்றி பலகாலுந் தாம்பிரமங்கண்டவர்போற்றம்
மைக்கண்டாங்க துவேநாம்பிருமமென்பவர் பானன்றே
செஞ்சொலாலாதிமறைபோதியதன்பய னென்றும்மறியா வேதி
யர்சொல் மெய்யென்று மேவாதே பதிபசு பாசமுற்றதி நீறுத்

சிவாலயமு முள்ளத்துச் செற்றபுலையர்பாற் செல்லாதே நற்றவஞ்சேர் வேடமுடன் பூசையருள மெய்ஞ்ஞானமில்லாத மூடருடன்கூடி முயங்காதே நீட வழித்து பிறப்பதறியாதரைப் பழித்துத்திரிபவரை பாராதே என்னும் ஆன்றோர் வாக்கியத்தால் எக்காலத்திலும் தாம்பிரம்பத்தைக் கண்டவர்போல் தம்மைக்கண்டு நானேபிரும்மமென்பவர் கிட்டநெருங்காதே தெளிவான ஆதியானவேதங்களை யோதி அதின் பிரயோஜனத்தையறியாத பிராம்ணர்சொல்லை உண்மை என்றுநம்பாதே திருநீறுஞ் சிவாலயமும் தனதுள்ளத்து நினையாப்புலையர் கிட்டநெருங்காதே நல்லதவத்தைச் சேறத்தக்க விபூதி ருத்திராக்ஷ சிவபூஜைமுதலிய உண்மைஞானமில்லாத மூடருடன்கூடி திரியாதே தொன்று தொட்டு ஸிருஷ்டித்து ஸம்ஹரித்துவரும் பரமேசுவரரை தூஷித்து திரிபவரைபாராதேஎனக்கூறியிருத்தலால் நானே பிரும்மம்எனக்கன்யம் பொய்யென்னும் மாயாவாதிகளுடன் சேராதே என்பதும் வேதாத்யயனஞ்செய்து அதின் உண்மையான அர்த்தத்தை தெரியாதவரான பிராம்மணர் வார்த்தையை நம்பாதே என்பதும் ஏகான்மவாதிகளாகிய மாயாவாதத்தைக் குறித்ததாம் திருநீறும் சிவாலயமும் தனதுள்ளத்து நினையாப்புலையருடன் சேராதே என்றதால் நானேப்பிரும்மம் எமக்கன்யம்பொய் என்பார்க்குவிபூதிசிவாலயமும் பொய்யாயிருத்தலால் இவர்களைச்சேராதே என்பது கருத்தாம்நல்லதவத்தைச் சேரத்தக்க விபூதிருத்திராக்ஷ சிவபூஜைமுதலிய ஸதாச்சாரத்தில் உண்மைஞானமில்லாதமூடருடன் சேராதே என்றதால் விபூதிருத்திராக்ஷம் வேஷம் சிவபூஜைமித்தைநான் மாத்திரமே சத்தியம் மற்றயாவும் பொய்யென்னும் மூடருடன் கூடாதே என்றதாம் ஸிருஷ்டித்து ஸம்ஹரித்து வரும் பரமேசுவரரை தூஷித்து திரிபவரைபாராதே என்றதால் ஸிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களும் வியாவஹாரிகம் பாரமார்த்திகத்தில் இவையாவும் பொய்யெனக்கூறுபவரோடு சேராதே என்றதால் இவையாவும் மாயாவாதிகளின் கூட்டுறவு கூடாதென்பதாய் கண்டித்தொதுக்கிய விஷயமாயிற்று இவ்வாறே ஸதாஹம்ப்ரஹ்ம [illegible] । [illegible] என்னும் வாக்கியத்தால் எப்பொழுதும் பிரம்மத்தை பார்க்கிறே

ஜோராஷ்டிரஸஹிதோஷ்ணாஸ்! என்னும் வாக்கியத்தால் ஆச்சார்யன் அர்ச்சகன் ஞானிகன் பாசகன் பரிச்சாரகன் முதலிய பஞ்சாச்சார்யர்களும் கர்ப்பக்கிரஹத்தில் பிரவேசிக்கலாமெனவும் வேதாகம விசேஷஞ்ஞரும் சிவதீக்ஷை பெற்றவருமான அத்யயனபட்டர் அர்த்தமண்டபத்தில் நின்று ஸேவிக்கலாமெனவும் மஹாசைவர்களான பிராம்மணர்கள் மஹா மண்டபத்தினின்று ஸேவித்தல் வேண்டுமெனவும் தபஸி அபரயாகஞ்செய்து தீக்ஷிதரென பெயர்பெற்றோர் ஸன்யாஸி இவர்கள் நிருத்தமண்டபத்தினின்று ஸேவித்தல் வேண்டுமெனவும் க்ஷத்திரியர் வைச்யர் இவர்கள் ஸ்நபனமண்டபத்தினின்று தர்சித்தல் வேண்டுமெனவும் ஸச்சூத்திரர் விருஷபத்தின் பின்புறத்தில் நின்று தர்சித்தல் வேண்டுமெனவும் அஸச்சூத்திரர் இவர்களுக்கும் பின்னின்று தர்சித்தல் வேண்டுமெனவும் அநுலோமன் இரண்டாவது பிரகாரமாகிய அந்தர்ஹாரத்தில் நின்று தர்சித்தல் வேண்டுமெனவும் பிரதிலோமர் மத்தியஹாரமென்னும் பிருகாரம் த்வஜதண்டத்திற்கு வெளியில் நின்று தர்சித்தல் வேண்டுமெனவும் பஞ்சமர்கள் முதலிய தாழ்ந்தவர்கள் யாவரும் மஹாமர்யாதியாகிய ஐந்தாவது பிராகாரத்தில் நின்று தர்சித்தல் வேண்டுமெனவுங் கூறியிருத்தலால் அதிஷ்டானு சிரதராகிய ஆதிசைவ பரமாச்சார்யர்களை நோக்க மண்டபாசிரத ஸன்யாஸிகள் விசேஷமுறவதெப்படி. இவ்வாறுள்ள ஞாயம் பலவுளவற்றால் சிவாகமஜன்ய ஞானம் ஸன்யாஸிகளுக்கு அத்யாவச்யகம் வேண்டப்படுமாதலின் இவைகைவறப் பெறுதோர் ஸாமான்யஞானம் பெற்றஜீவஞானிகளேயாவர் வேதாந்திகளுக்கு ஸமயநெறிக்குறிப்பின்மையின் மதப்பிருஷ்டத்வ மெய்தப் பெருவார் மதப்பிருஷ்டத்வம் மதத்தில் சேர்ந்துள்ள ஒருவர் அவை நீற்றுனின்ற விடத்துக் கூறுதல் தகுமேயன்றி ஸமயநெறியடியோடற்ற வேதாந்திகளை நாஸ்திகரெனக் கூறுதலொழிந்து மதப்பிருஷ்டரென வலிந்திட்டுப் பொருள்கொள்ள விரும்பிய தென்னென் பிராம்மண ஜாதி சிவமதமென முன்னர் ஸமயங்குறிப்பிட்ட ஒருவரேயன்றோ வேதாந்தஜன்ய கேவலாத்மஞானத்துட்பட்டு வருந்துகின்றார் இங்கனம் மதத்தினின்று நீங்கியது காரணமாய் நிற்றலின் மதப்பிருஷ்டரெனக் கூறியதன்றி வேதாந்திகளை ஆஸ்திக

ரெனக் கூறவெளிவந்தது மின்றும் இவற்றால் வேதாந்தாவலம்பி
களாகிய ஸன்யாஸிகளும் நாத்திகரென்பது ஞாபமுகத்தால்
போதரும் அதிதீவிரதரபரிபாகிக்குக் கூறியுள்ள மெய்ச்சமயமாகி
யசைவஸமத்தைக்கைவிட்டு வேதாந்தக்கொள்கை யவலம்பித்து
யாம் பிரும்மம் யாம்பிரும்மமென செருக்குற்று நாத்திகராதற்
குக் காரணம்யாதெனின் வித்தை அபரவித்தை பரவித்தையென
இரண்டாயிருத்தலின் இவ்விரண்டு வித்தைகளையும் அத்யயன
ஞ் செய்தல் உசிதமாயிருக்க அபரவித்யாத்யயனத்திலேயே
காலங்கடத்தி பரவித்தை ஞேக்சஞ்சிறிதும் மனம்மற்று அவை
குருக்களுக்கு நமக்குவேண்டாமென உபரதியடைந்த குற்றத்
தால் இவற்கு நாத்திகத்வமேறப்பெரும் வேதாந்த பாஷ்யம
ஞேக்கிய ஒருவன் சிவாகமத்தை உற்றுநோக்கப்புகுவானுயின்
வேதாந்தத்தை நிர்ணயித்து ஸித்தாந்தித்துள்ளது பரவித்தை
யாஞ் சிவாகமமென்பது தெற்றெனப் புலப்படும். இவ்வுண்மை
நீற்றுவேதமொன்றே எனக்குப் போதும் சிவாகமம் வேண்டா
மென்னும் அவை நிகவாதத்தாலன்றோ ஸத்பிராம்மணர்களும்
மதபிருஷ்டராதற்குக் காரணமாயிற்று பரவித்தையாஞ் சிவாக
மங்களில் நம்மால் நியமித்து உபஜீவிக்கச்செய்த குருக்களை உயர்
வெனவும் பிராம்மணரை ஸாமான்யரெனவுங் கூறியிருத்தலால்
பிராம்மணருக்குயர்வு கூறிய வேதமே எமக்குப் பிரமாணமெ
னின் [illegible]
என்னும் வேதவாக்கியத்தால் குரு முகமாகவே அறியத்தக்கது
குருவன்றியிலறியக்கூடாது எனவேதம் உத்திரவளித்திருப்ப
தால் குருக்களுக்கு பிராம்மணர் தாழ்ந்தோரென்பது வேதக்க
ருத்தன்றோ இவற்றால் வேதமுமிவர்களையுயர்த்தாது குருக்களை
யுயர்த்தி கூறியிருப்பதால் இவர்களுக்கு வேதமுமன்றோ அப்பி
ராமாண்யமாய்க்கொள்ளவேண்டி வரும் வேதத்தில் கூறியகுருத்
வம் வேதாத்யயனங்கற்பித்துவைக்கு கனபாடியருக்குஞ்சாஸ்திரா
ப்யாஸஞ் செய்துவைத்த சாஸ்திரிகளுக்கும் பெருமன்றி கோயி
ல்க்குருக்களை குருத்வமாகக்கொள்ளுதல் யாங்ஙனமெனின் வே
தாத்யயனஞ் சொல்லிக்கொடுப்பவரை கனபாடியெனவும் சாஸ்
திரபாடஞ்சொல்லி வைப்போரை சாஸ்திரிகளெனக்கூப்பிடு
தல் உலகவழக்காயிருக்க அவர்பால் குருத்வமேற்றுவதுந்தவராம்

𑌗𑍁𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌰𑍁𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑍋𑌧𑌕𑌃 ॥ 𑌅𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌨𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌗𑍁𑌰𑍁𑌰𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥ என்னும் பரசுருதிவாக்கியத்தால் குவென்பது இருட்டெனப்பொருள்படுமெனவும் ரு என்பது இருட்டை நீக்குதல் என பொருளாதல்பற்றி அஞ்ஞானத்தை நீக்கி ஞானத்தை பிரகாசிப்பிக்கத்தக்கவர் குருவென்பதற்கு பொருளாமெனவுங் கூறி யிருத்தலால் ஞானமுபதேசிப்பவரையன்றோ குருவெனச்சுட்டப்படும். கேவலம் ஞானோதகநிஷ்டசாதன சதுஷ்டய சர்யை கிரியை யோகஞானனுபவசிவஸாக்ஷாத்காரபரமுக்தியை உலகினருய்ய கிருபை கூர்ந்து புரியும்ஜகத்குருக்களாகிய ஆதிசைவபிராமணர்களையன்றி குருத்வம் வகித்தற் குரியார் ஒருவருமின்றாதலால் அப்பரமாச்சார்ய பூதர்களான ஆதிசைவ பிராம்மணர்கள் பரத்தேஜகத் குருத்வஞ் சாதிக்கப்படும் வேதாந்தப்பிரவர்த்தகம் வகித்த சங்கராச்சாரியார் எங்களுக்கு குருவாவாரெனின் சங்கராச்சாரியாற்கு லோககுருத்வம் பிரமாண பிரவஸித்தமாய் ஏற்படாததாலும் நீங்களெல்லோரும் பிராம்மணஜாதி சிவமதத்துள்ளோருமாய் காணப்படுதலின் வேதாந்தப் பிரவர்த்தகம் வகித்த சங்கராச்சாரியரிடங் குருத்வங்கொண்டாடுதல் வேதாகமாதி ஸத்பிராமணங்களுக்கு விருத்தமாம் வேதத்திலேனும் புராணத்திலேனும் சிவாகமங்களிலேனும் சங்கராச்சாரியரை ஜகத்குருவாய் கூறியுள்ளவசனமுளதேல் எண்டுத்துவிளக்குவாராக இவற்றால் நாம் பூஜார்த்தந் தேர்ணர்ந்து வைத்தகுருக்களை நாம் குருவென்பது கூடாதென்னும் மமதையை நீக்கி நாம் சேஷமார்த்தங்கோயிலில் பிரதிஷ்டித்த லிங்கத்தை தாமேவணங்கி அனுக்கிரமடைதல்போல் நாம் பூஜார்த்தம் ஸ்தாபித்துள்ள குருக்களும் நமக்கு குருவாவர் என்பதேனின்ன மிவர்வளுக்கு புலப்படுகிறதில்லை குருக்கள் வீட்டில் ஜலபானமும் செய்யாதிருக்க அவர்களை ஜகத்குருவாய் கொண்டாடுதலெங்கனமெனின் குருக்கள் வீட்டில் சாப்பட கூடாதென எந்தவேதங்கூறியிருக்கின்றது எந்தசிவாகமங்கூறியிருக்கின்றது எந்தபுராணங் கூறியிருக்கின்றது நீங்கள் குருக்களை காணிணீயரெனவுங் குண்டகோளகரெனவும் இதுபர்யந்தநினைத்து நிந்தித்து வந்தீர்கள் காணிணீயர் குண்டகோளகர் இவ்

ரென்பது பிறமாணபிரஸித்தமாய் விளக்கி இவர்கள் அவறன்றென மருத்துணர்த்தி யுள்ளோமாதலால் ஜலபானங் கூடச் செய்யாதிருக்கத்தக்க அகிருத்யம் இவரிடம் யாதுளது பாகவதத்தில் சிவநிர்மால்யம்புசித்தல் கூடாதெனக் கண்டித்திருக்க சிவாலய நிர்மால்யம் புசித்தலால் குற்றமாவாரெனின். பாகவதம் ஸ்மஹவ்த்ஸ்ரீ: ஸாவயோஷாமவதம் எனப் பொருளாதல்பற்றி உமர்தேவயார் பரமாய்க்கூறியுள்ள தேவிபாகவதம் பதினெட்டு புராணத்திலொன்றும் பாகவதமே யன்றி பொப்பண்ணர் என்னும் தெலுங்கரால் சிவதூஷணார்த்தஞ் செய்யப்பட்ட பாகவதம் பிரமாணமாகா யாமெடுத்துக் காட்டும்பிரமாணங்களை பிரமாண மன்றெனக்கூறுதல் கூடுமோவெனின் பிரமாணத்தை பிரமாணமாகவு மப்பிரமாணத்தை யப்பிரமாணமாகவும் கூறுதல்வழக்காயிருத்தலால் பாதகமின்றும் அங்ஙனங்கூறியிருப்பதற்குச் சமாதானந்தான் யாதெனின் ருக்வேதத்தில் ருத்ரஸூக்தம் [illegible] ருத்ரஸ்யாந்தம் [illegible] வஹேஷ யதி என்னும் வாக்கியத்தால் ருத்திரருக்குநிவேதிதமான அன்னத்தையே சாப்பிடவேண்டுமெனவும் ருத்திரருக்கு அபிஷேகித்த தீர்த்தத்தையே பானம்பண்ணவேண்டுமெனவும்ருத்திரனுக்கு பூஜித்தபுஷ்பத்தையே ஆக்கிராணிக்க வேண்டுமெனவும் பிரசாந்தமனஸையுடைய பிராம்மணர்கள் நிர்மால்யத்தையே புசித்தல் வேண்டுமென கூறியிருக்க சிவநிர்மால்யங்கூடாதென பொப்பண்ணருளறியதைத் யாவரொப்புவர் ருக்வேதம் ஸஹஸ்ரபுத்திம் ஜமேநருத்ரம் வரோநீ ஷயாமூர்ணஹஸ்திஜிஹ்வயா ஸஸம் ஸர்வான்மாக்களுள்ளும்அந்தராத்துமாவாயும் ஸர்வோத்கிருஷ்டராயு மிருக்கிற ருத்திரரான பரமசிவத்தை எந்தமனிதர்கள் புத்தியினல் தியானிக்கிறார்களோ அவர்கள் சுவையுடன் கூடிய அன்னத்தை நாவினல் புசிக்கிறார்கள் தியானியாவிடில் மலத்தையே நாவினல் புசித்தற்கொப்பாகுமெனக் கூறியிருத்தலால் சிவநிர்மால்யமன்றி மற்றயநிர்மால்யங்களை புசித்தால் மலத்தைப் புசித்தற்கொப்பாமென பிரமாணமுகத்தால் வெளிப்

படுதலின் [illegible] என்னும் பொய்ப்பண்ணை தேவர்தாத வசனங்களை யாவரொப்புவர் சிவரஹஸ்யத்தில் [illegible] | என்னும் வாக்கியத்தால் சிவநிர்மால்யமானது மலரகிதமாயும் சுத்தமாயும் இருப்பதால் நிந்திக்கக்கூடாதெனக் கூறியிருத்தலால் சிவப்பிரஸாதமாகிய நிர்மால்யம் பரிசுத்தாத்மாக்களான பிரும்மணர்களுக்கு புசிக்கத்தக்கதென வேதமேகூறியிருத்தலால் வைதிகசிரேஷ்டர்களான ஆதிசைவ பிராம்மணர்கள் சிவநிர்மால்யம் புசித்தல் குற்றமாகா இங்ஙனங்கூறிய நிர்மால்யம் ஆத்மார்த்த பூஜாபரமென்னின் ஆத்மார்த்தத்தைநோக்க ஆலயஸேவைகோடி மடங்கதிகபலனுயிருத்தலின் ஆத்மார்த்த பூஜாநிர்மால்யத்தை நோக்க ஆலயாதி நிர்மால்யம்விசேஷமாமென்பது கருத்து [illegible] என்னும்பரசுருதி வாக்கியத்தால் சிவநிர்மால்யமானது தேவஸ்வம் தேவாதிருவ்யம் நைவேத்யம் நிவேதிதம் சண்டதிருவ்யம் பக்ஷிப்தம் என ஆறுபேதமுடையதெனவும் தேஸ்வம் என்பது கோயிலுக்கு ஏற்பட்டகிருமம் பூமி முதலியவை என்றும் தேவதாதிருவ்யமென்பது தேவாலயத்திற்குள்ள ரொக்கம் வஸ்திராபரணம் தாஸீதாஸர்களுக்கு விட்டமான்யங்கள் முதலியவைகளை

வும் நைவேத்யமென்பது சிவபெருமானுக்கு நிவேதித்த பாகார்ஹ சமைத்துவைத்துள்ள அன்னம்முதலியவைகளெனவும்நிவேதித மென்பது சிவபெருமானுக்கு அர்ப்பணமான அன்னமெனவும் சண்டதிரவ்யமென்பது நிவேதிதான்னத்தை ஆறுபாகஞ்செய்து ஆச்சார்யருக்கு மூன்றுபாகமும் ஸாதகர்களுக்கு ஒருபாகமும் தாஸீதாஸர்களுக்கு ஒருபாகமும் சண்டேசருக்கு ஒருபாகமும் ஆக ஆறுபாகஞ்செய்ததில் ஐந்துபாகம் பிரஸாதமும் சண்டேசுவர நிவேதிதமான ஒருபாகம் நிர்மால்யமும் பிரஸாதக்கிரஹணத்தால் ஆன்மாக்களுக்கு மலபாசனீங்கிஸர்வபாபத்தையும் போக்கி புத்தி முத்திகளை கொடுக்குமெனவும் சிவதீக்ஷாவிஹீனர்களான மலதேகிகளுக்கு இந்த சிவப்பிரஸாதங் கொடுக்கக் கூடாதெனவும் அபிஷேக நிர்மால்யம் பிஹிக்ஷிப்தமெனவும் பிரஸாதமன்றி நிர்மால்யபக்ஷணங்கூடாதெனவும்நிர்மால்யம்புசித்தால் தோஷமாமெனவுங் கூறியிருத்தலால் நிவேதிதான்னம் பிரஸாதமும்-மற்றுள்ளது நிர்மால்யமுமாய்க் காணப்படுதலின் பிரஸாதங்கிரஹ்யமும் நிர்மால்யம் அக்கிராஹ்யமென்பது கருத்து தற்காலத்தில் பிரஸாதத்தை நிர்மால்யமெனக் கழித்து தேவஸ்வாதி நிர்மால்யங்களை பிரஸாதமாய் உட்கொண்டு சிவாபச்சாரமிழைத்துவரும் ஆன்மாக்களுக்கு சிவநிர்மால்ய வியவஸ்தாபனமெவ்வாறு கூறுவது இவற்றால் சிவப்பிரஸாதம் முட்கொண்ட ஆதிசைவபிராம்மணர்களுக்கு தோஷம் வருதல் யாங்கனம் சிவப்பிரஸாதம் ஜகத்குருக்களாகிய சுத்தாத்மாக்களான ஆதிசைவப் பிராம்மணர்களுக்குரித்தென்பதாய் வேதாகமப் பிரமாணங் கூறுதலால் இவற்றை தோஷமெனக் கூறுபவர் வைதீகருதல் யாங்னம் சிவாலயப்பிரஸாதம் புசித்ததால் குருக்களுக்குக்குற்ற நேருததால் ஏன் இவர் குருவாதல் கூடாது தெரியாத்தனத்தால் குருக்களைக் குறைகூறி சிவாபச்சார மிழைக்கின்றீர்கள் குருக்கள் வேதாகமபுராணாதி ஸத்பிரமாணங்களால் குறைவுற்றவராயிருப்பின் [illegible] என்னும் வாக்கியத்தால் கோபுரம் சிகரம் துவாரம் பிராகாரம் பலிபீடம் அர்ச்சகர் மூலலிங்கம் இந்த எழுதர்ச்சனமும் செய்தல்வேண்டு

மென சிவாலய ஸேவாவிதியில் கூறியிருத்தலால் ஸப்தலிங்கத்தி லொன்றும் பரமாச்சார்யலிங்கம் ஹேயமெனக்கொள்பவர் சிவபெருமானை ஹேயமெனக்கொண்ட சிவதூஷகர்களேயன்றோ ஸ்தாவரம் ஜங்கமஞ்சைவ த்விவிதம் லிங்கமிஷ்யதே । ஸ்தாவரம் ஸ்திரலிங்கம் ஸ்யாத் ஜங்கமம் தீக்ஷிதம் விது: । ஜங்கமஸ்யாவமாநேந ஸ்தாவரம் நிஷ்பலம் பவேத் । தஸ்மாத்லிங்கம் த்வயம் பூஜ்யம் நாவமந்தவ்யம் கதாசந । என்னும் பரசுருதி வாக்கியத்தால் ஸ்தாவரஞ் செங்கமென லிங்கம் இரண்டுபேதமுடையதெனவும் ஸ்தாவரலிங்க ஸ்திரலிங்கமான சிவலிங்கமும் ஜங்கமலிங்கம் சிவபெருமானால் தீக்ஷிக்கப்பட்ட ஆச்சார்யலிங்கமும் ஜங்கமலிங்கத்தை அவமதித்தால் ஸ்தாவரலிங்க பூஜை நிஷ்பலமாமெனவும் பிராஞர்கள் இவ்விருவித லிங்கத்தையும் அவமதியாரெனக் கூறியிருத்தலால் சிவத்விஜர்களை சிவலிங்காகாரமாய்க் கொண்டன்றோ உபாஸித்தல் வேண்டுமென வேதாகமங்கள் விதித்திருக்கின்றது.

இக்கருத்தைச் சிறிது முற்றுநோக்காது குருக்கள் தம்மில் தாழ்ந்தோரென்னும் துர்வாதமெங்கனந்தலைநீட்டும் ஆதிசைவபரமாச்சார்யர்களை குருக்கள் ஜாதி என தனித்து பிரித்துக்கூறியிருப்பதால் ஏனய ஸர்வஜாதிகளுமிவர்களுக்கு சிஷ்யர்களென்பது கருத்தன்றோ இவர்களைத்தவிர குருக்கள் ஜாதியார் வேறொருவருளரேல் ஈண்டெடுத்து விளக்குவாராக இவர்கள் வேறொருவருக்கு சிஷ்யருகாத ஸ்வயமாச்சார்ய புருஷராயிருத்தலின் ஆபாலவிருத்தபர்யந்தம் குருக்களெனச்சுட்டப்படுவர்பால்யத்தில் இவர்களுக்கு குருத்வங்கூறுதல்எங்கனம் பொருந்துமெனின் ஆதிசைவஸ்ய தீக்ஷா ஸ்யாத் உபசாராத் ப்ரவர்த்திதா । ஜந்மநைவ ஹி தீக்ஷிதா ஹ்யாதிசைவ த்விஜா: । பாராம்பர்யேண ஸம்ப்ராப்தா தீக்ஷா ஹ்யநாதி தீக்ஷிதா: । ஸர்வே ஜந்மனா ஸம்ஸ்கார ஸம்யுக்தா: ஹிதாகர தாங்கள் வம்ஸஜாதா: ஆதிசைவஸ்ய வம்சஜாயா: ஜாயந்தே ஸ்வயம் தீக்ஷிதா: । என்னும் பரசுருதிவாக்கியத்தால் ஆதிசைவர்களுக்கு சிவதீக்ஷை உபசாரமாகக் கூறப்பட்டதன்றி முக்யமா

காதெனவும் முதலிலேயே பூஜார்த்தம் சிவபெருமானால் தீக்ஷிக்கப்பட்டதால் பின் தீக்ஷை உபச்சாரமெனவும் மோக்ஷார்த்தமான ஸ்திரலிங்கபூஜைக்கு பூஜாகாலலோப முண்டாகுமாயின் அதின்பொருட்டு ஆதிசைவனுடைய பால் குடிக்குங்கொழுந்தையின் திருக்கரங்களில் புஷ்பத்தை கொடுத்து அர்ச்சிப்பது நல்ல பூஜையாமெனவும் இவ்வாறு பூஜித்தால் பூஜைலோபமாகாதென வுங் கூறியிருத்தலால் ஸ்திரலிங்க பூஜா கைங்கர்ய ஸத்பாவம் சுத்தன்மையிலேயே வந்துவிடுவதால் கொழுந்தை முதல் விருத்தபர்ந்தமுமிவர்கள் குருக்களே குருவுக்குள்ள லக்ஷணம் இவர் பரத்திருப்பதை நீங்கள் இன்னுமறியீர்கள் ஸ்வாயம் புவாதிலிங்கனிஷ்ட க்ஷேத்திரங்களிலும் மற்றுள்ளபத்தனம் ராஜதானிகுப்ஜகம் கேடகம் நகரம் கிராமம் முதலிய பேதமுற்ற ஒவ்வொரு இடங்களிலும் ஸர்வான்மாக்களும் உய்யும்பொருட்டு ஸ்திரமாய் லிங்கத்தை பரவித்தையிற் கூறிய விதியால் ஸ்தாபித்து லோகம் க்ஷேமமடையச் செய்வதைத்தவிர ஜகத்குருத்வ லக்ஷணம் வேறு யாது வேண்டும் இஃதன்றி இப்பரமாச்சார்ய மூர்த்திகள் திருக்கரத்தால் விபூதிவாங்கித் தறிக்காதோர் யாவருளர் ஒவ்வொரு க்ஷேத்திரங்களிலும் நடக்கும் உத்ஸவாதிகளை தர்சித்து புக்தி முக்திகளை அடைய விரும்பிநிற்கும் ஆன்மாக்களனந்தம் பேய் பிசாசு பில்லி சூன்னியம் முதலிய க்ஷுத்ரப்ரயோக மஹாரோக நிவாரணங்களும் இப்பரமாச்சார்யரால் பூஜிக்கப்படுந் திருச்சன்னிதானங்களிலேயன்றோ உண்டாகின்றது இவ்வாறுள்ள மேம்பாடுடைய சிவபுண்யத்தைவிளக்கும் பரமாச்சாரிய ஜகத்குருக்களை கைவிட்டுஉலகம்உலகத்திலுள்ள யாவரும் பொய் நான்ந்தான் உண்மை என மித்யாவாத வேதாந்தக் கொள்கையுடையாரை ஜகத்குருவெனக் கூறுதல் நீங்கள் கொண்ட சைவமதத்திற்கழகாமோ அன்றேல் விபூதி ருத்திருக்ஷம் சிவபூஜை முதலிய ஸத்கார்யங்களை கைநழுவவிட்டு சுத்தமுகத்தராய்யாம் பிரும்மம் யாம் பிரும்மமென ஒரு பிருமத்தை ஒரு பிரும்மம் மித்தையாக்கிக்கொள்ளுங்கள் அங்கனம் உங்களுக்கு சங்கையுற்ற லோககுருத்வமும் மித்தையாய் முடிந்துவிடும். பிள்ளை வறங் கேட்கப்போய் பெண்டாட்டியற்ற கதைபோல் சைவஸமதத்

தைவிட்டு வேதாந்தத்தில் புகப்போய் குருவை யுண்மையாக்கி நீங்கள் மித்தையாய் முடிந்து விடுதல் சரியா எங்களுக்கன்னிய குருவுளாரெனின் நீங்கள் உண்மைப்பொருளாயிருக்க வேண்டு மானால் குரு அதோகதியாய் நாசத்தை அடைந்து மித்தையாய் முடிந்துவிடுவர் இக்கருத்தையுட்கொண்டேயன்றோ ஸூதஸம் ஹிதையில் கேவலாத்மைகஸ்ய ஸர்வாஜ்ஞாநவத்வாத்ர ஃ। என்னும் வாக்கியத்தால் கேவலமான ஏகான்ம வாதத்தால் பூனை யைப்போல் மனிதராய் விடுகிறார் என்றதால் பூனை பாலைக்காய்ச் சி வைத்திருக்குமிடத்தில் மனிதர் இருப்பதை நோக்கி குடித்தா லடிப்பாரென்னும் பயத்தை யுட்கொண்டு ஒருதிரங் கண்ணை மூடிய தருணத்தில் மனிதர் காணாதிருப்பதால் கண்ணை மூடிவிட் டால் மனிதரில்லாது போய்விடுவாரெனக்கருதி கண்ணை மூடி பாலையுண்ணுந் தருணத்தில் பாலண்டை யிருப்பவர் பூனையை யடிக்க பூனைக்கு மனிதருள்ளாரென்று ஞானம் வருதல் போல் தன்னைத்தவிர வேறொன்றில்லை என நினைத்திருக்கும் ஏகான்மவா திகளும் பூனை ஞானமுடையாராவர் எனக்கூறியிருத்தலால் அத் யாத்மஜன்யஞான வேதாந்தவாதம் ஜீவஞானமாகுமேயன்றி சிவ ஞானமாகாவாம் இவ்வாருள்ள வேதாந்த ஜன்ய ஞானத்தை ஸித்தாந்த ரூப சிவாகமாதி சிவஞானம் வேதாந்த ஜன்ய ஞான த்தை ஜீவஞானமெனக் கண்டித்து இதற்குமேல் பரமொன்றுள தென தீர்மானித்து நிற்பதால் சைவஸமயமே யாவற்றிலுஞ் சிற ந்து விளங்கும் மெய்ச்சமயமாம் இம்மங்களகரமான சைவஸ மயத்தை நீத்து அன்யஸமயப்படுகுழியில் வீழ்ந்து தைவத்தை இழத்தல் நீதியோ இவ்வாருள்ள ஞாயம் பலவுளவற்றால் நீங்க ள் யாவரும் சைவஸமத்திலிருந்து ஆஸ்திகராயிருத்தல் வேண் டுமென்னும் அபிமானத்தால்இங்கனங்கூறப்போன்றதன்றிவேற ன்று உள்ளூரில் பரமாச்சார்ய பூதரான ஸ்திரலிங்க பூஜா கைங் கர்யம் பெற்ற ஜகத்குருக்களாகிய குருக்களை இழிவென நினைத் து சைவமதமே உடன்பாடற்ற வேதாந்த பிரவிஷ்ட ஸன்யாஸி களை பெரிதாய் மதித்து தாம்பாளத்தோடு பஸ்மாவை நீட்டவே ண்டும் நேரே கையில் குருக்கள் கொடுக்க கூடாதென்பது எந்த ஞாயம் பற்றியோ ஸ்ரீஶைவகாலாக்ஞாஹ்யம் ஸைவம் நாந்ய

காரஸ்தகஃ । த்விஜஹஸ்தேந க்ருஹீதம் பஸ்மம் ப்ரதக்ஷிணா ஸநம் । ஶூத்ரஹஸ்தேந பஸ்மநைவ க்ருஹீதம் தோஷாய கல்பதே என்னும் பரசுருதிவாக்கியத்தால் விபூதிவாங்கி யணிதற்கு ஜகத்குருக்களாகிய ஆதிசைவர்கள் திருக்கரமே உரியதெனவும் அன்யஹஸ்தத்தால் வாங்குவாராயின் போகம் மோக்ஷம் மிவ்விரண்டின்ஞசக்கத அடையுமெனவும் ஆலயத்தில் தன்கறத்தால் பஸ்மாவை கிறகிப்பாராகில் தோஷத்தை யடைவாரெனக் கூறியிருத்தலால்விதிநிஷேதபரத்தில் மஹான்கள் பிறவேசிப்பது அவைதிகமாகாதோ ஆனால் சைவஸமயத்துள்ள பிராம்மணோத்தமர்கள் ஸன்யாஸிகளுக்கு ஜகத்குருக்களாகிய ஆதிசைவ பரமாச்சார்ய மூர்த்திகளை நேரேவிபூதிகொடுக்கக்கூடாதெனவற்புறுத்துங்கருத்து வேறாயிருக்கலாம் நம் கிறமத்தில் பூஜிக்கும் ஜகத்குருக்கள் சைவமதத்தவர் இங்குரும் ஸன்யாஸிகளோ வேதாந்திகள் சிவபெருமானை மித்தைப்பொருளாய்க்கூறுபர் இச்சன்யாஸிகளுக்கு அசேதனமாகியதாம்பாளம் இச்சிவப்பிறஸாதத்தை கொடுக்கட்டும் சேதனத்வமுடைய நம் பரமாச்சார்யர் திருக்கரம் இவ்வகார்யத்திலமைதல் குற்றமாமெனகருதி தாம்பாளத்தை நீட்ட முயற்ச்சித்தனரோ யாதோவறிந்திலம் அங்கனமும் தட்டைபூ பிறதேசத்தில் வைத்தன்றோ இவர்களை பஸ்மாகிறஹிப்பித்தல் உத்தமமாம் குருக்கள் கைசுமை தாங்கியாய் நிற்பற்குக் காரணம் யாதோ ஶிவத்விஜகராக்ரஸ்தம் க்ருஹீதவ்யம் மஹாத்மபிஃ । ஶிவஹஸ்தஸ்திதம் த்ரவ்யம் ஶிவத்விஜகரோ ஹ்யஸௌ । என்னும் பரவித்யா வாக்கியத்தால் சிவத்விஜகரத்திலே நின்று மஹாத்மாக்களினால் பஸ்மங்கிரஹிக்கத்தக்கது சிவத்விஜகரஞ் சிவபெருமானது கரமாகவே சொல்லப்படுகிறது எனக்கூறியிருத்தலால் இச்சிவபிரஸாத ஸ்வீகாரத்திற்கு மஹானாயிருப்பவர் சிவஹஸ்தமாகிய மங்கள ஹஸ்தத்தை நீக்கி அமங்களமாகிய தாம்பாளத்தைத் தேடுவதென்னோ இவ்வுண்மை சிறிது முற்றுணோக்காது ஸ்வாமியள்வாள் தட்டிலிருந்து விபூதிகிறஹித்தல் வேண்டுமென்பதுஸ்வாமியளை அவமானப்படுத்த வுத்தேசித்தா முக்திபிரதமாஞ் சிவாலயங்களில் ஜகத்குருக்களாகிய சிவத்விஜர் திருக்கரத்தால் பஸ்மா முதலிய சிவ பிறஸாதங் கிறஹித்தல் வேண்டுமென்பது

தீர்மானிக்கப்பட்டது இத்தகையமகிமைதங்கிய பரமாச்சார்யர்களை கோயில் குருக்கள் கிராமத்தொழிலாளி எனசிற்சிலமாந்தர் கூறுங்கூற்றை பரிகரித்தொதுக்குவோமாக தொழிலாளி கிராமத்தாற்கு வேலைசெய்பவனேயன்றி கிராமத்தாரை வேலைவாங்குபவனல்லன் ஒவ்வொரு ஊர்களிலும் தேவாலயங்களை பரவித்தை விதித்தவாறு கிராமத்தாரால் அமைக்கும்படிசெய்து உஷக்காலம் காலஸந்தி உச்சிக்காலம் பிரதோஷகாலம் ஸாயங்காலம் அர்த்தயாமமுதலிய காலங்களிலும் இவர்களை தர்சனஞ்செய்யும்படியாகியஸத்காரியம்வஹித்து மஹோத்ஸவம்நித்யோத்ஸவம் விசேஷதினங்களிலும் அவ்வவற்றிற்குறிய திருமஞ்சனுதிஸாமான்களை சேகரிக்கச்செய்து கும்பிடவடிக்குங் குருக்கள் தொழிலாளி யாவதெப்படி நாங்கள் பூஜைசெய்யென்ருல் குருக்கள் செய்யவேண்டும் கூடாதென்ருல் பூஜைசெய்வதெப்படி இதிலுல் தொழிலாளியாகுமெனின் நீங்கள் பூஜைவேண்டாமென கிருத்தி கோயிலைப் பூட்டிப்போட்ட லிங்கமும் அன்றோ தொழிலாளியாகக் கொள்ளவேண்டிவரும் இல்லிங்கத்தை முக்திபிரதமாய்க் கொண்டுவணங்குவது தொழிலாளியைத்தானே இவர்கள் ஆச்சார்யர் முதல் சிவபர்யந்தந்தொழிலாளியாக நினைக்கும் இவர்கள் தொழில் சாலச்சிறப்புடைத்தே இவற்ருல் ஜகத்குருக்களாயுள்ள ஆதிசைவபிருமணர்களை தொழிலாளியென்பதுங்கூடாது ஆதிசைவபிராம்மணர்கள் ஜகத்குருக்களாயிருப்பின் மாடபத்ய மிவர்களுக்குளதோவெனின்

ஶைவாஃ ஶிவ ஶரீரோத்₃ப₄வ ஶைவா ப₄ட்டா ப்₃ராஹ்மணாஃ கௌ-
ஶிகஃ காஶ்யபஶ்சைவ பா₄ரத்₃வாஜோ கௌ₃தமஸ்ததா₂ | அக₃ஸ்த்யஶ்சை-
வ பஞ்சைதே பஞ்சகோ₃த்ரேஷு தீ₃க்ஷிதாஃ | ஸந்ததிஶ்சை-
வ பஞ்ச ஶைவராஜானம் ஸஞ்ஜாதவம்ஶகா | ஆசார்யாஸ்து ததா₂
ஶைவத₃ர்ஶனே ஸ்ம்ருதாஃ | உபநிஷத்₃பூ₄ஷிதாஶ்சைவ ஸர்வதா
ஸஞ்சாலகாஃ ஸ்ம்ருதாஃ | மடா₂திபத்யம் ஸம்ப்ராப்தாஃ ஶைவ குருவம்ஶஜாஃ
ஶிவோக்தா த₃க்ஷிணா ஶைவாஃ ஸர்வோத்தமாஃ | ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரா
ஜ்ஞானகர்மவிதா₃ம் வராஃ | ஸம்ஹிதாஸு ஸமஸ்தாஸு நிக₃மாக₃மபாரகா₃
க₃ந்த₄ர்வா தே₃வதா ஸுராஃ | ஸமஸ்த லோகாசார்யாஸ்தே
லோகாநாம் ஶிவ த்₃விஜாஃ |

என்னும் பரசுருதிவாக்கியத்தால் மனோஞ்யமான கைலாஸ கிரியில் சிவபெருமானை பூஜிக்குன்னிமித்தம் கௌசிக காச்யப பாரத்வாஜ கௌதம ஆத்ரேயர் முதலிய ஐந்து ரிஷிகள் ஐந்து திருமுகத்தினின்றுவெளிவந்தார்களெனவும் அதன்பின் ஐந்துஸந்தானங்களாக பிரிந்துள்ளதெனவும் தூர்வாஸர் ருரு ததீசி சுவேதர் உபமன்யு இவ்வைவர்களும் ஸந்தானகுருக்களெனவும் மந்தான காளீசத்தைச்சுற்றிலும் நான்கு மடங்கள் உண்டாயினதெனவும் அஃது ஆமர்த்தகி கோளகி புஷ்பகிரி ரணபத்திரம் என்னும் திருநாமங்களால் விளங்கப்பெற்றதெனவும் தூர்வாஸர் முதலிய ஐவர்களும் இம்மடங்களுக்கு அதிபராயிருந்தார்களெனவும் இந்தபரம்பரையிலுண்டானவர் சிவத்விஜர்களெனவுங் கூறியிருத்தலால் மாடாமத்யம் இவர்களைத்தவிர வேறொருவர்களுக்கு உண்டெனநிரூபிக்க வேதாகமங்கள் இடந்தரா சிவபக்தர்கிரஹங்கள்யாவும் சிவலோகமெனசிவரஹஸ்யம்முதலிய பிரமாண வாயிலாய் வெளிப்பட்டிருக்க சிவபக்திக்கு முதன்மை ஆச்சார்யவத்வம் வஹித்தஜகத்குருக்களாம் ஆதிசைவபிராம்மணர்களுக்கு மாடாபத்யமுண்டோவென சந்தேகிப்பது அம்மாளுக்கொச்சியுண்டோவென ஸந்தேகிப்பவர் கதைபோலாயிற்று இவ்வதிமஹிமைதங்கிய ஜகத்குருக்கள் ஆங்காங்கு ஸ்திரலிங்கப்பிரதிஷ்டாபனஞ்செய்து பூஜித்து வருவதால் ஒவ்வொரு ஆதிசைவப் பிராம்மணர் கிரஹங்களும் மடங்களேயாகும் தத்காலத்தில் சைவஸமயமே அறிக்குழிவெட்டிப்பழக்கத்தக்க வேதாந்திகள் மடாதிபராய்வெளிப்பட்டு தர்ம்மசிவாச்சாரியார் ஞானசிவாச்சாரியார் ஈசானசிவாச்சாரியார் அகோரசிவாச்சாரியார் முதலியதிருநாமங்களை வைத்துக்கொண்டு குருக்களாகமுயலுகிறார்கள் சைவஸமயமனுத்துணையு மறியாமாந்தருள் சிலரிவர்களை ஆச்சார்யராக மயங்கி வழிபடுகின்றார் இக்குருத்வத்தை யங்கீகரித்து வழிப்படுமிவர்கள் சிஷ்யர்களும் மதபிரஷ்டர் ஆவார்கள் பிள்ளைவரங்கேட்கப்போய் உள்ள வரமும் போய்விட்டதுபோல் குருத்வந்தேடப்போய் மதப்பிருஷ்டத்வம் பெறுதல் உசிதமோ சிவாச்சாரியாரென்பது ஜகத்குருமணிகளான ஆதிசைவர்களுக்கன்றோ வேதாகமங்கள் செப்புகின்றது அவை மருந்துக்குங் கிட்டாஸ்மார்த்தர் சிவாச்சார்யத்வங் கூறி வெளிவருதல்கூடுமோ

ஸ்மிருதிகளில் பரார்த்தோப ஜீவியை தேவலகரெனவும் இவர்களை ஸத்கார்யத்தில் வர்ஜிக்கவேண்டுமெனவுங்கூறியிருத்தலால் இவர்கள் பிரர்பொருளைக் கவரவேண்டி குருவென வேஷம்போட்டு காணிக்கைவாங்கல் பாபமேயன்றோ இவை பரார்த்தோப ஜீவனமாகாதோ இவற்றால் குருத்தலையில் இவர்களுக்குற்ற சிஷ்யர்கள் பாபமாகிய மூட்டையை யேற்றி அவற்றையவர் தாங்க முடியாதகாலத்தில் சிஷ்யனுஞ் சுமந்து இவ்விருவர்களும் யெதிவாய் நிரயத்திற்காளாக வேண்டிவருமாதலால் குருவெனகும்பிடப்போய் பாபத்தை ஸம்பாதிக்க முயற்சிப்பது ஆத்மலாபமாகுமா ஸ்மார்த்தர் சிவதீக்ஷைபெற்றால் மஹாசைவராகிறார் அவர்களுக்கு ஆச்சார்யத்வம் வருமெனின் சிவதீக்ஷைபெற்ற ஸ்மார்த்தர்களாகிய மஹாசைவர்களுக்கு சிவமெனப்பெயர்வருதல் தகுதியேயன்றிசிவாச்சார்யராதல் யங்ஙனம் திருடர் ராஜாவின் கிரீடத்தைத்திருடினால் ஸிம்மாஸனமேறி ராஜ்யாதிபத்யஞ் செய்தல் கூடுமோ இதுபோல் ஆதிசைவபரம்பரையார் ஆதீனத்தை காலவசத்தாலபஹரித்தால் அவற்குற்ற சிவாச்சார்ய நாமகரணத்தோடு வெளிப்படுதல்கூடுமோ இது நிற்க இவர்கள் சிவதீக்ஷைபெற்ற மஹாசைவர்களாயென்பதை உற்றுநோக்கப்புகுவோமாக

உஶெ்ஷவயா நாஹ-ஂ ஶெ்ஶவா நாஊஷி ஶெ்ஶவகூர: | ஸூாமெ-ிெெவவஹாமெ-ி வெயாமூாஹவூா தூயாவியாக | அநெெ்ஶெவாவஊாக்ஷாஂ வநூாவ-யூ-ஹெ ஶிவவிஜாக | ஆஷெெ்ஶெெவஊ-ிஹாெஶவ: தீக்ஷிெகாயஷிவவிஜ: | ஊவிஷிக்கூவமாஜூவ: ஷுஜாதீநாஂ தவெெவவ | ஷுவூாவூவாஜா தீநாஊ வாய-ிகவவாவூ-யாக |

என்னும் பரசுருதி வாக்கியத்தால் ஏழுபேதமானசைவர்களுடைய மத்தியயில் ஆதிசைவர்கள் ஸ்வார்த்தத்திலும் பரார்த்தத்திலும் யோக்யாளாவார் ஆகையால் அவர்களாலேயே அன்யசைவர்களாகிய பிராம்மணாதியோர் தீக்ஷைபெறவேண்டியது சிவத் விஜர்கள் இடத்தினின்றே ஆதி சைவர்களினால் தீக்ஷிக்கப்பட்ட பிராமணர் மஹாசைவராகிறார் அந்த ஆதிசைவர்களாலேயே ஆச்சார்யாபிஷேகம் செய்வித்து அநுமதி செய்யப்பெற்

றிருந்தால் தன்ஜாதிக்கும் தனக்கு கீழிட்ட ஜாதியாருக்கும் ஆச்சார்யராவாரெனக்கூறியிருப்பதால்-மஹாசைவத்வஸித்திக்கும் ஆதிசைவர்களிடத்தன்றோசிவதீக்ஷபெருதல் வேண்டுமெனசிவாகமங்கூறுகிறது. இம்மஹாசைவர் ஆச்சார்யராக வேண்டுமாகுல் ஆதிசைவர்களாலேயே அபிஷேகிக்கபெற்று அனுமதியுங்கொடுத்தபின்னன்றோ-இவர்கள் ஆச்சார்யத்வம் வகிக்க யோக்யராவார் சிவதீக்ஷயே பொய்யெனக்கூறுமிவர்கள் இத்தீக்ஷக்கு ஆதிசைவர்களைத்தேடுதலெங்கனம்- ஆதிசைவரை இவர்கள் குருவாக்கிக்கொண்டால்- ஸ்மார்த்தர்களிவர்களை அவைதிகரெனபிரஷ்டராக்கி விடுவார்கள்- இவற்றால் சிவதீக்ஷயே இவர்கள் செய்துகொளளுகிற ஸம்பிரதாயமில்லை- பணத்தாசையால் பல்லாக்கு எடுபிடிகளோடு சிஷ்யரிடங்காணிக்கை வஸூலிக்கவெளிவறத்துணிகின்றார்- இதைஅறியா அவிவேகி சிலர்கும்பிட்டு பணங்கொடுத்து பாபத்தை விலைக்கு வாங்குகிறார்- இஃது தப்போ ஒப்போவென்பதை விவேகிகளாவார் பலரும் அறிந்து கொள்வாருக- சிலர் குருத்வத்திற்கு ஸன்யாஸியா யிருக்க வேண்டு மெனவுஞ் சிலர் பிருமச்சாரியாயிருக்க வேண்டுமெனவும் சிலர் வானப்பிரஸ்தராயிருக்க வேண்டுமெனவும் ஆசங்கைப்படுகிறார்கள்-

ஸ்ரீ ஹஸ்தஸ்ய வர்ணே ஸர்வ ஏஷாம் பரம் தஸ்ய ஹி ॥
யதிவ ப்ரஹ்மசாரீ வாநப்ரஸ்தஶ்ச த்யஜேத் ॥

என்னும் பரசுருதிவாக்கியத்தால் கிரஹஸ்தன் ஸர்வர்ணிகளுக்குங்குருவாயிருக்கலாமெனவும்- யதிபிரும்மச்சாரி- வானபிரஸ்தனை குருத்வத்தில் நீக்கவேண்டுமெனவும்-கூறியிருத்தலால்- மேற்காட்டிய ஆசங்கை எனம்பெருமாறெங்கனம்-பரமேசுவரர் ஸர்ஞராயிருத்தலால்-ஸ்வஸ்திரீயோடுரமித்து அக்குருகுலோத்பவராயிருந்தால் குருத்வத்திற்கு சிதமென்பதைநோக்கியேயன்றோ கிரஹஸ்தனுக்கு குருத்வங்கூறியிருக்கிறார்- இவற்றால் ஸன்யாஸி முதலியவற்களுக்கு குருத்வங்கூறுவது அறியாதவர் செயலேயாகும்- இக்காரணம்பற்றி தண்டுகமண்டலம். காஷாயம் முதலிய சின்னங்களை தாங்கியுள்ள ஸன்யாஸிகளையும். தலையில்முடிவைத்த பிரும்மசர்யாதி அனுஷ்டானிகளையும் குருக்களன்றென்பதாய் பரவித்தை பிராகறித்துக் கூறுவதால் இவர்கள் குருத்வங்

திரஸ்கரித்தொதுக்கப்படும். ஆனால் நைஷ்டிக பிரும்மசாரிகளி
டத்திலும் ஸந்யாஸிகளிடத்திலும்- ஞானசாஸ்திரம் பாடங்கே
ட்கலாமே யன்றி ஆச்சார்யத்வங்கொண்டாடல் கூடாதாகை
யால்- இவர்களுக்கு குருத்வமேற்படக்காரணமில்லை அதுவும்
ஞானவதி தீக்ஷையடைந்தவராயிருந்தால் ஞானசாஸ்திரங்கேட்
கலாம்- தீக்ஷையல்லாதோராயின் வேதாந்தியேயாதலால்- அவர்
களண்டை ஞானசாஸ்திரங்களை கொண்டுபோவதே குற்றமாம்-
இக்காரணம்பற்றி ஆதிசைவபிராமணர்களுக்குஜகத்குருத்வஞ்சா
திக்கப்பட்டு அவரிடந்தீக்ஷிக்கப் பெறாதோர் கேவலம் ஸமார்த்
தர் அல்லது வேதாந்தி என ஒதுக்கப்படுவர். வேதாந்திகளுக்கு
தன்னைத்தவிரமற்றவைமித்தையாயிருத்தலின் தனக்கன்யமான
ஞானசாஸ்திரங்களும் வியாவஹாரிகமாய் யொதுக்கப்பட்டு பார
மார்த்திகத்தில்யாவும் பொய்யாய் முடிந்துவிடும் இவரிடங்க
ற்கும் ஞானசாஸ்திரத்தாலாய பயனென்னே - இவர்களுக்கு
ஜகத்துப்பொய்யாம் முயற்கோடு போலிருத்தலின் ஜகத்குருக்க
ளென்பதும் சுத்தப் பொய்யாமேயன்றிமெய்யாமாறுயாங்ஙனம்.
இஃதன்றி ஷண்மத பிரதிஷ்டாப காச்சார்ய ரென வலிந்தீட்டி
பொருள்கொள்ளவெளிவருகின்றார், ஷண்மதங்களும் வேதாகம
புராணேதிஹாஸங்களால் முதல்வன் வகுத்த வழியே யன்றி
முற்றறிவற்றதாக் தோன்றித் தம்பிரான்களால் புதிதாய் புக்கிய
நவீனமதங்கள் விவேகிகள் கொள்ளற்பாலதன்று. மேதாவியா
கிய ஆதிசங்கராச்சாரியாரும் 'ந சைவோ ந வைஷ்ணவோ' என்னும்
வாக்கியத்தால் நான் சைவனுமன்று சாக்தனுமன்று எனஷ
ண்மதங்களை புறக்கணித்தொதுக்கியதால் ஷண்மதப்பிரதிஷ்டா
பகாச்சார்யர் என்பதிவர்பரத்துங்குற்றமாம் மதமென்பது தைவ
த்தை முன்னுக்கிவரும் நற்பேறுதலின் தம்மைத்தவிரவேறொரு
தைவம் உண்டெனச்சாதிக்கப்புகுவராயின் பதார்த்தமிரண்டாய்
த்வைதப்பட்டுஅத்வைதஹானிவந்துவிடும். தைவமேபதார்த்தம்
அதையன்றி வேறொன்றில்லை மற்ற யாவும் பொய்யெனின் ஷண்
மதபிரதிஷ்டாபனம்யாருக்குதைவத்திற்காஆன்மாக்களுக்கா-அ
ன்றன்று. மதங்கள் யாவும்-ஸத்வரஜதமோபேதமான குணமூர்
த்திபரமாயிருத்தலின் குணாதீதவஸ்து நிர்த்தேசத்தால் யாவும்
பிரும்மமாய் சிவன் விஷ்ணுவென்னும் பேதமற்று அத்வைதஸ்

தாபனஞ் செய்தவராதலின் ஷண்மதபிரதிஷ்டாபனஞ் சங்கராச்சாரியாருக்கு பொருந்துமெனின் இங்கனம் பிரும்மத்திற்கு நிற்குணந்தான் உண்மைஸகுணம்பொய்யென வாதிக்கவேண்டிவரும் ஸகுணம் நிற்குணமிரண்டு பிரும்மந்தானெனக்கொள்வராயின் குணாதீதவஸ்து நிச்சயாத்வைதம் முரண்பாடடையும் குணத்தையுமொக்க முடித்துக்கூருமிவர்பாத்து முரணுதலிழக்காமெனின் குணம் த்வைதம்நிற்குணம் அத்வைதமெனக்கொண்டு வாதிக்கும்வாதி இவராதலால் இவ்விரண்டையும் ஒன்றெனச்சாதிக்கப்புகுதல்குற்றமாம். பிரும்மமேத்வைதாத்வைதப்பட்டு நிற்றலின் குற்றமாகாதெனின்—த்வைதமேபிரும்மரூபமாயிருக்க வேதாந்தபாஷ்யம் யாதுக்கு-த்வைதமற்றதல்லவோ அத்வைதம். த்வைதத்தையும் ஒருபுடையொத்து வியவஹரிக்கும்வாதம் அத்வைதமாகுமோ த்வைதத்தில் ஜகஜ்ஜீவேசுவரர்முதலிய முப்பொருள்களும் அனாதி நித்யங் கூறப்படுதலின் ஜீவேசுவர ஜகத்துப்பொய்யென்னும். வாதிகளை த்வைதாத்வைத வாதிகளெனச்சுட்டப்படுதலெங்கனங்கூடும். பிரம்மத்தைத்தவிர மற்றவை பொய்யென்பதிவர் மதமாதலின். ஜகஜ்ஜீவர்களிருப்பு மிவர்களுக்கும் பொய்யாம். ஜீவனைப்பொய்யாக்கிய இவர்முக்திவிச்சாரஞ்செய்வதெங்கனம் இவர் சைவம் முதலிய ஷண்மதங்களையும் கண்டித்து அத்வைதமென்னுந் தனிமதம் புதிக்கியுள்ளாராதலின் ஷண்மதமும் இவர்களுக்கு உடன்பாடன்றென்பது திண்ணமாம் யாவும் பிரும்மமென்றதால் எம்மதமும் நமக்குச்சம்மதமாமெனின் யாவுமென்பதில் இவருமதிலடங்கி நிற்றலின் இவரை பிரும்மமென வேதாகமங்கள் சுட்டியுணர்த்தத்துணியா இவற்றால்யாவும் பிரும்மமென்பதிழுக்காம் யஃவுாயிவா திஷுநுவுாயிவா சுஜ ரோயம வுாயிவீ நவெடியவஃ வுாயிவிஸரீரம யஃவுாயிவி 8ஜ ரோயயேதி வஷக ஆத்தாஜய-ராநீ ஏதக- என்னும் சுருதிவாக்கியத்தால் பிருதிவிதத்வமுதல் ஆத்மதத்வபர்யந்தம்ஸமஸ்தவஸ்து அந்தர்யாம்யத்வம். கேட்கப்படுவதால். பிருதிவ்யாதி ஜீவாத்மபர்யந்தமுள்ள வஸ்துகளும் இன்மை பொருளன்று- இன்மை பொருளாயின் இவற்றிற்கு அந்தர்யாம்யத்வங் கூறியவேதவாக்குஇவர்பரத்துவிருத்தமாம். ஜீவாத்மாவேஸகலவஸ்து அந்தர்யாம்யத்வ மெனின் - தன்னால் ஸம்பாதிக்கப்ப

ட்ட வினைப்பயனுக் கீடாந்தனு கரணபுவன போகங்களை அனு பவிக்கும் பொருட்டு பஞ்சபூத கூட்டுறைவாலெய்தியசரீரத்தில் பஞ்சேந்திரிய வழித்தாய்போகம் புசிக்கும் ஜீவாத்மா ஸர்வாந்த ர்யாமித்வ மாவதெப்படி. விசுவஸ்வரூபியான விராட்புருஷனுக் கு ஸர்வாந்தர்யாமித்வங் கூருவோமெனின். விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி:- என்னும் சுருதிவாக்கியத்தால் விசுவத்தை அதி க்கிரமித்துள்ளவர். ருத்திரரெனச்சுட்டப்படுவதால் விசுவரூப மாய் பரிணமித்த விராட்புருஷனுக்கு ஸர்வாந்தர்யாமியத்வமும் குற்றமாம். அங்கனமன்றுபிருமத்திற்கு நிற்குணமேவடிவம் ஸகு ணம பொய்யெனின். நிர்குண வடிவுடைத்தாய பிரும்மம் ஸகு ணமாய் மூர்த்திகறிக்குந்திரமில்லாதலால் இப்பிரும்மத்திற்குஸர் வசக்தித்வங்குன்றிவிடும். இவற்றால் ஸர்வாந்தர்யாமித்வம் பங்க ப்படும். இதினால் ஸர்வஞ்ஞத்வம் மாறிவிடும். இங்கனம் ஸர்வ கர்த்திருத்துவம் நீத்துவிடும். இவற்றால் ஸ்வதந்திரத்வம் போய் விடும். இவ்வாரே அனுப்த சக்தித்வம் மாரிவிடும். இவ்விஷய பர்யாலோசனையால் ஷாட்குண்யபரிபூரணத்வம் அறவேயொழி ந்து. ஜிவாத்மாவினும் இழிந்த பொருளாய் பிரும்மம் நிற்ற லின்- நிர்குணம்மாத்திரமே பிரும்மத்திற்கு லெக்ஷண மென்பது வேதாகம விருத்தமாம்- உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம் । த்யாத்வா முநிர்கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் என்னுங் கைவ ல்யோபநிஷித்வாக்கியத்தால் பார்வதியோடு கூடினவராய் பிரபு வாய் மூன்று கண்களுடையவராய் கருத்த கண்டத்தை யுடைய ராய் சாந்தஸ்வரூபியாய் ஸர்வஸாக்ஷியாயுள்ள பரமேசுவரனை முனிக்கூட்டங்கள் தியானித்து இருளைப்போக்கி ஒளியைஅடை கின்றாரெனக் கேட்கப்படுவதால் பிரும்ம ஸ்வரூபியாகிய பரமே சுவரருக்கு உருவமுண்டென வேதத்தால் வெளிப்படுகிறது. இப பரம்பொருளுக்கு அனுக்கிரஹத்திருமேனியாதலால் சித்சக்திம த்தால் ஆவிர்ப்பவித்தனுக்கிரஹிக்கும் திருமேனி ஆன்மகோடி போல் வினைப்பயன்புசிக்க எடுத்த சரீரமன்றாம்- இவற்றால் பரப் பிர்ம்மஸ்வரூபியாகிய பரமேசுவரருக்கு ஒவ்வொரு ஆன்மாக்கள் பரிபவத்திற்குத்தக்கவாறு அனுக்கிரகிக்குந்திருமேனிஸ்வதந்திர முடையதாயிருத்தலின் ஸகுணத்திருமேனியும்நம்பெருமானுக்கு

அநாதிநித்யமே-இப்பரம்பொருள் ஸத்வரஜஸதமோ குணவயப்பட்டதன்று. குணாதீதவஸ்துநிர்தேசமுடைய பரமபதியேயாதலால் குணத்தால் விகாரப்படுமென்பதுங் குற்றமாம், இவற்றை வேதாந்தபரத்தால் குணமூர்த்தியென்றிடலாகாது: ஸர்வவியாபகமுடையபர பிரும்மத்திற்கு அவயவங்கள் கேட்கப்படுவதால் ஸர்வவியாபகத்வஹானியுண்டாமெனின்- அப்பெருமான் ஸர்வசத்தி யுடையவராதலால் பக்திமான்களுக்குத் தக்கவாறு வியாபகசை தன்னிடமே மூர்த்தி கரித்தனுக்கிரஹித்து நிற்றலால் ஸர்வவியாபகத்வஹானி ஏற்படா- இவற்றால் குணமேபிரும்மத்திற்குத் திருமேனியாய்க்காணப்படுதலின். குணாதீதநிற்குண வடிவங்கூடுமோவெனின்- நிர்க்குணம். ஸகுணம். ஸகுணநிர்க்குணம். இம்மூன்றும்திருமேனியாய்க்கொண்ட யிப்பெருமானுக்கு நிர்க்குணத்திருமேனி விலக்கன்றாம். பிரத்தியக்ஷத்தில் பார்க்கப்படும். சராசரநாதிஅவயவபேதமுடைய சரீராதிகள் அழியக்காணலால். பிரும்மத்திற்கு அவயவவிசிஷ்டத்திருமேனியும் அழிவுபாடெய்துமெனின். நம்சரீரம் வினைப்போகத்திற்கிடாம். கர்மசரீரமாதலால் முத்தி நிசைபர்யந்தம். அவ்வவ்வினைப்பயன் புசிக்க சுகதுக்கரூபமான சரீரங்கள் அனந்தமுளதாதலின் இச்சரீரம் அழிவுபாடெய்தும் பிரும்மசரீரம் சுகதுக்கவேதனையற்றதும் முத்திக்கு வித்தாயுள்ளதுமாய்க் காணப்படுதலின் இவை அனுக்கிரஹார்த்தம். அப்பரமன் சிற்சக்தி தடித்து மூர்த்திகரித்துள்ளதால் பிரும்மத்திற் கழிவு நேர்ந்தாலன்றி இச்சரீரம் அழியாதனவாம் இவற்றால் பிரும்மத்தின் அனுக்கிரகரூபசரீரங்களும் அழிவுடைத்தாய பொருளன்று. இங்கனன்றேக்காது முக்குணமே மூர்த்தி என்றும் அக்குணத்தில் சிவத்தையும் உடன்பாடாக்கி இக்குணம் மித்தை எனக்கழித்து இக்குணாதீதநிற்குணமே ஸத்யமெனத்தேர்ந்து அதுவே பிரும்மமென உய்த்துணர்ந்த வேதாந்தபாஸகர் ஜாலம் வியப்பினும் வியப்பே. நம் சிவபரஞ்சுடரை குணமூர்த்தி என்றிடல் கூடுமோ. ஶிவமத்³வைதம் சதுர்த²ம் மந்யந்தே- என்னுஞ் சுருதி வாக்கியத்தால் சிவபெருமான் அத்வைதராகவும் துரீயராகவும்மன்றோ வேதங்களில் உத்கோஷிக்கப்படுகின்றது இவரை குணமூர்த்தி யென்பதோடும் நிற்குண திருமேனியங் கூறப்படும்.

குணம் - நிர்குணமிவ்விரண்டும் - நம்பசுபதிபரமேசுவரற்கு திருமேனியாய் அமையப்பெற்றிருத்தலின் ஸகுண நிர்க்குணத்திருமேனியொன்றுடையாரென்பதும் வெளிப்படை-இவற்றால்பரமேசுவரரை குணமூர்த்தி என்றிடலடாது பிரும்மா-விஷ்ணு-ருத்திரர்-முதலினோர்-ஸத்வ-ரஜ-தமோகுணமூர்த்தியாதலால் ருத்திரரை குணமூர்த்தி என்றிடல் கூடுமெனின் உருத்திரரில் குணருத்திரர்-துரீயருத்திரர்-என பேதமிரண்டுடையதாதல்பற்றி துரீயத்வபிரதிபாத்யமுடைய நிற்குண உருத்திரரை குணமெனப்பிரமிப்பது கற்றறியாமாந்தர் செயலாம்-ஏகஏவ ருத்ரோ ந த்விதீயாய தஸ்தே-என்னும் சுருதிவாக்கியத்தால் உருத்திரரைத் தவிர இரண்டாவது கிடையாது என ஏவகாரத்தால் இதர விவச்சேதம்செய்துள்ளது-விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி:-என்னும்சுருதிவாக்கியத்தால் விசுவத்தை அதிக்கிரமித்துள்ளவர் ருத்திரரென்னும் மகருஷிஎனச் சுட்டப்பட்டிருக்கின்றது. இஃதன்றி-ஸுவர்லோகோ ஜ்யோதிஷாவ்ருத: தேவாஸ்ஸர்வே ஸமுபாஸதே ருத்ரம்-என்னுஞ் சுருதி வாக்கியத்தால் ஸ்வர்க்கலோகமானது ஜ்யோதிஸ்வரூபமாயுள்ளது எல்லா தேவர்களும் ஸ்வர்க்கலோகத்தை அடைகிறார்கள்-அந்த தேவர்கள் உருத்திரரை பிரசனிக்கிறார் என்பதினால் இந்த ஸ்தானம் துரீயாதீதஸ்தானமாகின்றது. இவ்வாறே உத்தரகீதையில்- தஸ்ய மத்யே ஶிகா ஜ்யோதி: ஶிவஸ்ய நிலயம் பரம் - என்னும் வாக்கியத்தால் உருத்திரஸ்தானத்தை துர்யாதீதமாய் பிரதிபாதிக்கபடுகின்றது. இவ்வாறுள்ள ஞாயம் பலவற்றையும் வேதாந்திகள் ஊகித்தறியாது-ருத்திரஸ்வரூபியாகியசிவத்தை குணமூர்த்தி என ஓதிக்கி இச்சிவம் சகுணம்-சகுணத்திற்கழிவுண்டு இதற்கன்யம் பிரும்மமொன்றுளது-அது அழியாப்பொருளெனக்கண்டு தேறிக்கொண்டலமலர்ந்துநிற்கும்பிரசன்னபௌத்தவாதிகள்வேதவிஹிததர்மமுடையாருவரோ-சிவத்தையன்றி பிரும்மம் வேறொன்றுளதென பூச்சிகாட்டும் பதிதர்வாயில் வேதாகமங்கள்-மண்கொட்டியன்றோ மூடிவிடும். இவற்றைச்சிறிதேனும் உற்றுநோக்காது பிரசன்னபௌத்தர் ஒருவர்ஸன்யாசிவேஷம்பூண்டு தேவகோட்டையில்-சிவாகமம்மந்தபரிபாகிக்குக்கூறியுள்ளது புராணத்தைக் காட்டினும் தாழ்ந்ததென்றும் சைவமதமேவேதத்தில் கூறவி

ல்லை எனவும்-வேதாத்யயனத்திற்கு ஆதிசைவர்கள்-அனர்கரென
வும்-ஆகமம் சுத்ததாந்திரீகமென்றும் ஆதிசைவன் அனேக ஜன்
மாக்களில் நல்ல கர்மாக்களைச்செய்து வைதிகஸ்மார்த்தகுலத்தில்
ஜனித்து அத்வைதமதஸித்தாந்தப்படி ஸ்வானுஷ்டானத்திற்கு
வந்தாலொழிய மோக்ஷங்கிடையாதென்றும் இதற்கு ஸமாதான
ம் எவருவது சொல்லமுடியுமாவென்றும் இறுமாப்பெய்தி திரிகி
ருரென்றும் காளயார்கோவில் ஸ்வர்ணகாளீச்வரக்குருக்களய்யா
விம்மரவி-நகடயில் எழுதியுள்ள ஆப்தலிகிதத்தால் தெறியவந்
தது. தத்காலம் கோவிலூருக்கு வந்த மஹானுபாவர்களானகு
ம்பாபிஷேகத்தில் பட்டுக்கறைச்சோமனுடுத்தித் திரியவிரும்பிய
குருக்கள்கள் எங்கே தூங்குகிருர்-நகரத்தார் சிவாகமத்தில் அபி
ஞ்யர் இன்னரென தேர்ந்தெடுக்காதுசெய்த சிவாபச்சாரமேயன்
ரே நாத்திகஸன்யாஸி உருக்கொண்டு-சிவம்-சிவாகமம்-சிவதர்
மம்-சிவாச்சாரியர் முதலிய சிவநிந்தை செய்யப்புறப்பட்டு நிற்
கின்றது. ஒவ்வொரு கும்பாபிஷேகங்களினும் சிவாகமஞ்யர்ப
லரும் ஒருங்கு கூடி கிரியாபிரவர்த்தகங்கள் வகித்து ஸத்கார்ய
ம் புறிவரேல்-இன்னாத்திகர்தலை நீட்டிவாழ்தலெங்கனம் இவை
நகரத்தார் ஊகித்தறியாக்குற்றமென்பதிற் றடையில்லை இது நிற்
க நமதுபௌத்த ஸன்னியாசியைச்சிறுதுற்றுனோக்கப் புகுவோ
மாக-ஓய் நாத்திகஸன்னியாஸியே-சிவாகமம் புராணத்தைக்காட்
டினுந் தாழ்ந்ததென்பது எதினால் கூற வெளிவந்தீர்-சங்கரஸம்
ஹிதையில் ஶூலமஹேஶ்வரமுகோத்பந்ந ஶைவதந்த்ரஸுதார்ணவாத்-எ
ன்னும் வாக்கியத்தால்-சிவாகமமாகிய கிரியினுடைய மத்யத்தில்
அமிருதம் பிரவாகித்துள்ளதில் கொஞ்சமெடுத்து இந்த ஸ்காந்
தபுராணத்தைச் செய்கிறேனென ஸ்காந்தபுராணங் கண்டோக்
தியாய் கூருவதால் புராணத்திலுந் தாழ்ந்தது சிவாகமம்-என இ
ச்சிவனிந்தகபாஷண்ட ஸன்யாஸி கூறுவதை புராணங்களேஒப்
பாது. ஓய் பாஷண்டஸ்வரூபநாத்திக ஸன்யாஸியே-ஈஶா
நஸ்ஸர்வவித்யாநாம்-என வேதம் உத்கோஷிக்கின்றபடியால் ஈசா
னமுகத்தினின்று வெளிவந்தவித்தையாதென்பதாய் உற்றுநோ
க்கப்புகுவீராக-வ்ருணவாத்யா ஶைவாஸ்த்ராத்யாகாராத்யக்ஷாராணி
வ | ஶிவஜ்ஞாநநிதிர்வ்யாநிகாஶிகாஶீநிஹமகலனா: | ஸ்ரீஶைலஸ்
ய நாயஸ்ய ஸம்ஹவம் த்யஜ்யேவக்த்ர: | என்னும் அகஸ்திய

ஸம்ஹிதா வாக்கியத்தால் பிரணவாதி மஹா மந்திரங்களும் அகாராதி அக்ஷரங்களும் சிவஞான மயமாம் காமிகாதி திவ்ய யாக மங்களும் சிவபெருமான் ஊர்த்வமுகத்தில் தோற்றிய தென்னும் பிரமாணத்திற்கு நீவீர் என்செய்வீர் - வேதமோ- த்³வே வித்³யே வேதி³தவ்யே இதி ஹஸ்ம யத்³ப்³ரஹ்மவிதோ³ வத³ந்தி பரா சைவாபரா ச ! என்னும் வாக்கியத்தால்-இரண்டு வித்தைகளையும் அறியவேண்டுமெனவும் பிரும்ம வித்துக்களா யுள்ளோர் இவ்வாறே அறிகிறார்களென்றும் அது பரம் அபரமென இருகூறாய்நிற்குமென்பதால் வேதமொன்றே பிரமாணம் சிவாகமம் அப்பிராமாண்யமெனக் கூறுபவர்வாயில் வேதம் தெள்ளுமண் கொட்டி நிறைப்பி இருக்கின்றது. இதுமட்டோ—தத்ராபரா ருக்³வேதோ³ யஜுர்வேத³: ஸாமவேதோ³(அ)த²ர்வவேத³: ஶிக்ஷா கல்போ வ்யாகரணம் நிருக்தம் ச²ந்தோ³ ஜ்யோதிஷமிதி- அத² பரா யயா தத³க்ஷரமதி⁴க³ம்யதே-என்னும் வாக்கியத்தால்ருக்யஜுஸ்ஸாம அதர்வணம் முதலிய வேதம் நான்கும்-சிக்ஷைமுதலிய வேதாங்கம் ஆறும்அபரவித்தைஎன தன்னை தாழ்த்தி தனக்கு மேலிட்டபர வித்தையொன்றிருப்பதாய் வேதங்கூறியதற்கு நீறென்செய்வீர்-இங்ஙனம் வேதத்தின் கர்மகாண்டம் அபரமெனவும்-ஞானகாண்டம் பரமெனவுஞ் சில அவிவேகி பொருளுறைக்க முந்துவர் வேதம் நான்கும்வேதாங்கமாறும் ஒருங்கே அபரமென கழித்திருப்பதால்இதில்கர்மஞானப்பிரதியாத்தியங்கூருதல் விவேகிகளுக்கழகன்றும் இவற்றால் ஸ்ரீநீலகண்டர்-வயந்து வேத³ஶிவாக³மயோர்பே⁴த³ம் ந பஶ்யாம: வேதோ³பி ஶிவாக³ம: தத்³த்ரைவர்ணிகவிஷயஸ்ஸர்வ-விஷயஶ்சேதி வேத³: த்ரைவர்ணிகவிஷய: ஸர்வ-விஷயஶ்சாந்ய:-என்னும் வாக்கியத்தால் வேதசிவாகமங்களுக்கு பேதங்காண்கிலோம் வேதமே சிவாகமம்-இவை பிராம்மணர் முதல் மூன்றுவர்ணத்தாற்கு உரியதும்-பிராமணர் முதல் ஸகலவருணிகளுக்குறியதுமாய் வேதமிருகூறாய் நிற்றலின்-வேதந்திரியிவர்ணிக பரமும்-சிவாகமம் ஸர்வவிஷய பரமுமாய் முடிப்புற்றிருத்தலின்-ஸர்வவிஷய பரம்ஞானே கநிஷ்டமுடையதுபற்றி பறவித்தை ஈதென்பதை இனியாயினுந் தெளிந்துய்வீறுக-இவ்வாறுள்ள விஷயம் பலவற்றையும் இவவேதாகமதாரதம்ய முகவுரை தொடங்கி

விரிவாய் வியவ்ஹரித்து தீர்மானித்துள்ளோமாதலால் ஆங்குற்று ணேக்கி ஸந்தேகநிவிர்த்தி செய்து கொள்வீராக— ஓய் நாத்திக ஸன்யாஸியே-யஜ்ஞாத்விஜ்ஞாதிஷ்டா தேவிஷ்டேஷிஸம்ஹவதி என்னும் சுருதிவாக்கியத்தில்பஞ்சாக்னி வித்தைகளில் உபாஸிப் பதற்கு உசிதமாய்க்கூறப்பட்டிருக்கின்றது. என்றதால் நீர்சொல்லும் அபரவித்தையாகியருக்காதி வேதங்களில் தக்ஷிணகார் ஹபத்திய ஆஹவநீயம் முதலிய அக்னி மூன்றேயன்றி வேரன்றே மீந்துள்ள இறண்டக்னிக்கு பெயர் யாதென்பதை எண்ணெடுத்து விளக்குவீராக— இவற்றால் பஞ்சாக்கினிவித்தை சிவாகமமென் பதை வேதமே சுட்டியுணர்த்தியது-ஓய் நாத்திகஸன்யாஸியே சைவமதமே வேதத்தில் கூறவில்லை அத்வைதமதந்தான் கூறியுள் ளதெனவாய் வம்பாடக்கற்றீர்-அதர்வசிரஸில்-த்ருஷ்டாம்ஷிவா ஹேதா ஜாதுஸ்யேதம் வ்ரதம் பாசுபதம் [illegible] ஜுஷ்டம் தவஸாநியஹ்வ தவ்ரதம் [illegible] பாசுபதம் [illegible]- இதற்கேற்பகூற்மபுராணத்தில்-நிர்மிதம் ஹியோபவேதவ்ரதம் பாசுபதம் பரம் । மஹாஸ்ராக மஹாஸ்ருதம் ஸர்வேஷாம் வேதஸாரம் விமுக்தயே। ஸஷபாசுபதா காமாராஃ வைவநீயோ [illegible]ஃ । என்னும் வாக்கியத்தால் வேதசாரமாயுள்ளபா சுபத விருதத்தை தெரிவிக்கும் ஆகமந்திரங்கள் முமுக்ஷுக்க ளால் ஸெவிக்கத்தக்கதென கேட்கப்படுவதால் பசுபதி ஸம்ப ந்தமான சைவஸமயம் வேதத்திலேயே கூறியுள்ளதாதலால் சைவமதமேயில்லை எனக்கூறிய இவர் உன்மத்தஉறை எங்கனங்கனம் பெரும்-இப்பித்தர் அத்வைதமென்றதால் சைவத்திற்கு வேறான பிரும்மவாதமென அகங்கரித்தெழுகின்றார்—ஶிவமேவ த்வைதம் [illegible] - என்னவும் விஶ்வாயிகோர [illegible] ஷிஃ-என்னவும் [illegible] தீயாய [illegible]-எனவும் [illegible] ஷாவ்ருதஃ । [illegible] | [illegible]-எனவும் [illegible] தீ [illegible] ஶிவஸ்தாநமேநாமேயம்-ஶிவ [illegible] ஸஃ [illegible]-எனவும் [illegible] - என

வும்-[illegible] - என
வும் [illegible]
[illegible]-எனவும்-[illegible]-எனவும்-[illegible]
[illegible]-எனவும் [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ! எனவும் கூறியுள்ள சுருதி வாக்கியங்களால்-சிவபெருமான் அத்வைதர் சாந்தர் துரீயர்-என்பது வெளிப்படுகின்றது. விசுவத்திற்கதிகர் ருத்திரர் என்பதும் ருத்திரரைத் தவிர இரண்டாவதான பதார்த்தமில்லை என்பதும் ஜ்யோதி ஸ்வரூபமான ஸ்வர்க்கத்திற்கு ருத்திரரே அதிபரென்பதும் சிவஸ்தானந்துர்யாதீதமாய் பிரதிபாதிக்கப்படுகிற தென்பதும் சிவபெருமானொருவரே தியானிக்கத்தக்கவர் மற்றவை பரித்யஜிக்கவேண்டுமென்பதும்-பகல் இராத்திரியில்லாதவரெவரோ அவர் சிவம் என்றும் விஷ்ணுவுக்கு மேலான பரமபதமான சிவஸ்தானமென்பதும் எல்லாத்திற்கு பரமகாரணமாயுள்ளவர் பரமேசுவரர் எனவும் அவரை தியானிக்கவேண்டுமெனவும் அவரை தியானித்தவர் பாசத்தை தகித்துமுக்தி அடைகிறார் என்றும்-சுத்தமான பிரதேசத்தில் சுகாஸனனாய் சரீரசுத்தி யுடையவனாய் அத்யாசிரமஸ்தனாய் ஸகல இந்திரியங்களையும் நிக்கிரஹித்து பக்தியினால் தனது குருவை நமஸ்கரித்து ஹிருதய கமலத்தை அடைந்திருக்கிறதாயும் சுத்தமாயும் நினைக்கத்தக்கதாயும் துக்கரஹிதமாயும் அளவிறந்ததாயும் நிர்குணமாயும் நினைத்தற்கரிதாகிய உருவமுடையதாயும் நித்யமங்களமாயும் சாந்தஸ்வரூபியாயும் நாசமற்றவனாயும்-பிருமயோனியாயும் ஆதிநடுவந்தமிலாதவராயும் ஒரே பதார்த்தமாயும் வியாபகனாயும் சித்கனானந்தராயும் அரூபியாயும் ஆச்சர்யமுடையவராயும் உமையுடன் கூடினவராயும் மூன்று

கண்களையுடையவருயும்-கருத்த கண்டத்தையுடையவராயும் சாந்தருயுமுள்ள பரமேசுவரரை தியானித்து முனிக்கூட்டங்கள் யிருளைப்போக்கி ஒளியை அடைகின்றுரென உபனிஷித் முதலிய பிரமாணவாயிலாய் வெளிப்பட்டு நிற்றலின்-சைவ ஸமயத்திற்கு வேருய் அத்வைத மத மொன்றிருப்ப தென்பதாய் நம்பிரச்சன்னபௌத்த ஸன்யாஸி கண்டுபிடித்து தேவகோட்டை நகரவெளியில் பிரஸசங்கிக்க எத்தனித்ததுகற்றறியா மந்தமதிக்கும் பயன்படா. இத்தகயபுத்தியைத்தீட்டி விளக்குமாறுயார் கைப்பட்டு தோவறிந்திலம்-நம் பௌத்தர்-வேதங்களில் பிரும்மசப்தமெங்கனும் கேட்கப்படுவதால் சிவத்திற்கு வேருய் பிரும்மமொன்றுள தென பிரமித்து பிதற்றுகின்றுர். பிரும்மமென்பது பெரிதெனப்பொருளாதல் பற்றி பெரிதான பதார்த்தங்களையு முண்டுபண்ணுபவர் பரமேசுவரரே யாதலால் பிரும்மயோனித்வம் பரமேசுவரருக்கே என கைவல்யோபநிஷித் முதலிய வேதவாக்குக்கள் முறையிடுகின்றது. ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ நீசயா சோசதி முஹ்யமாந: । ஜுஷ்டம் யதா பச்யத்யந்யமீசமஸ்ய மஹிமாநமிதி வீதசோக:-என்னும் சுருதிவாக்கியத்தால் ஜீவனனது அனாதியாய் மலத்தால் பந்திக்கப்பட்டு அந்த மலத்திற் கேற்பமாயா மயபெருகளை பர சரீரத்தால் தாபங்களை அனுபவிப்பதால் ஜீவன். ஈசனுகான். இதினுல் உபநிஷித்துக்களில் ஜீவனை அனீசனெனக் குறிக்கப்பட்டிருக்கின்றது. அநீசன் கிஞ்சிஞ் யனுதலால் தானே நீக்குதலறிதாம். இவற்றால் மஹா மோஹத்தால் பிணிப்புண்டு. துக்கஸாகரத்தில் ஆழ்ந்துவிடும். ஸர்வானுக்கிரகமுடைய பரமேசுவர பிரஸாதத்தால் ஜீவன் துக்கனுச மடைகிறதென தெரியவருகிறதால் பரமேசுவரரே பிரும்ம ஸ்வரூபி என்பது தெற்றெென விளங்கும். பரமேசுவரறைத் தவிர பிரும்ம மொன்றுளதெனக்கூறும். அவிவேகியை இவ்வேத வாக்குத்தாட சுத்தி செய்து விட்டது. இதுமட்டோ-ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசாநீசௌ -என்னும் வாக்கியத்தால் ஜீவேசுவர பேதமிரண்டுங் கேட்கப்படுதலின்-நம்பௌத்தஸன்யாஸிவியஹாரம் பல்லிளித்துக் கொண்டது-ஸர்வாநந ஶிரோக்ரீவ: ஸர்வபூத குஹாசய: । ஸர்வவ்யாபீ ஸ பகவா-

வெஸ்ஶா_ந-என்னும் உபநிஷித் வாக்கியத்தால் ஆன் மாக்களது ஹிருதயகமல சிதாகாசத்தி லிருந்து யாவற்றையும் வசீகறித்து யாவற்றிற்கும் ஈசனுயுள்ளவன் என கூறப்படுவதால். இதுவும் நம்பௌத்தர் வாதத்தை பூர்வபக்ஷமாக்கியது. இஃவாருள்ள ஞர்யம் பலவற்றாலும், சைவமதம். அத்வைதமாயிருக்க-சைவ மதமேயில்லை-அத்வைதந் தான் உள்ளது—என்பது—தகப்பனை நீத்து-ஆண் குறியை தந்தை என்பதைஒத்திருக்கின்றது. ஒய் புத்தரே-ஆண் குரியோடு கூடியவர் பிதாவா-அக்குறியை பிதர் வெனக் கூறிக் கொள்ளுதல் உலகவழக்கமா-இதுபோல்அத்வை தப்பட்டு நிற்குவஸ்துவெது. சிவமேயன்றோ-அத்வைதஸ்வரூபி சிவமெனஸகல வேதங்களும். உத்கோஷித்து நிற்கின்றது. இஃ தன்றி-யடா வசீ வஷாகாஶம் வெஷ யிஷ்ஷ்ஹி ந்தி நவ:। கஷாஶி வசீஜாயகூ: வஸ்ர்வெகவிஷ்ஷ்தி - என்னும் வாக்கியத்தால் ஆகாசத்தைப்போர்வையாகவுடைய பரமேசுவரனை எந்த மனி தன் அறியவில்லையோ அவன் இறுதியில் துக்கத்தை அடைகி றான் எனக்கூறப்படுவதால் நமது பௌத்த ஸன்யாஸிக்கு அன வரத நிரய துக்கமே உறிய ஸ்தானமாயிற்று- ஆகாஶ ஶரீரம் ஞஹ-என்னுஞ் சுருதிவாக்கியத்தால் ஆகாசத்தை சறீரமாக உடையது பிரும்மமென வெளிப்படுகின்றது-யடா வசீவஷாகா ஶம் வெஷ ஶிஷ்ஷ்ஹிரோ நவ:। ஆகாசத்தை தோல்போல் போர்த் திக்கொண்டிருப்பவன் பரமேசுவரரென வெளிப்படுவதால் சிவ பெருமானையன்றிபிரும்மம் வேறொன்றுளதென பிரமித்துக் கூறும் நமது புத்தருறைஉல்லங் கனப்பட்டொழிந்ததென்க- ஒய்புத்திரே-பிரும்மம் பரமேசுவரரென வேதஞ்சுட்டி யுணர்த்தி யிருக்க சைவ மதம் பொய் அத்வைதஞ்சறி எனக்கூறியனும் புத்தி கௌசல்யத்தை யாவர்மெச்சுவர் •ஒய் புத்தரே-நீர் ஆதி சைவர்கள் வேதாத்யயனத்திற்கு அனர்ஹர் என்றீர்-பின் ப்ரதி காரி-னும்மவரை சூத்திரரெனஸ் மிருதி தூஷித்துனும் வாயில் மண் போட்டிருக்கின்றது • யாதெனில் ஜந்நாஜாயதெ ஶூ த்ர: ஸம்ஸ்காராஜ்ஜாயதெ த்விஜ: என்னும் வாக்கியத்தால்தும்மவர் குஜன்ம சூத்திரத் வஞ்சாதிக்கப்பட்டு கர்மாவால்த் விஜத்வங் கூறப்பட்டிருக்கின்றது-ஜன் சூத்திரர்களுக்கு வேதத்தில் அதி

காரமும்-ஜன்ம பிராம்மணர்களுக்கு வேதத்தில் அனதிகாரமும் கூறுவதை விவேகிகள் ஒப்பார் சிவபெருமான் திருமுகத்தினின்று ஆதி சைவர்கள் வெளிவந்தவரென பரவித்தை கூறுவதால் சிவபெருமான் பிராம்மணராதல் பற்றி பிராம்மண தேவதைமுகத்தினின்று வந்தவர் ஜன்மாவால்பிராம்மணத்வஸித்தியும்-கர்மாவால் சிவத்வமும் சித்திக்கப்பெற்றுத் த்விஜத்வ ஸித்திபெற்றிருப்பவராதலின்-இவர்கள் ஜன்ம சூத்திரர் போல் வேதத்திற்கனதிகாரிகளாகார்கள்• ஓய் புத்தரே சூத்திரற்கு கர்மத்தால்த்விஜத்வஸித்திவருமென்பதை வேதமொப்பாதே-തസ്മാച്ഛൂദ്രസമീപേ നാധ്യേതവ്യം-என்னும் சுருதி வாக்கியத்தால் ஜன்ம சூத்திரர்கள் அத்யயனஞ் செய்யக்கூடாதெனக் கூறியிருக்கின்றது-അഥ ഹാസ്യ വേദമുപശൃണ്വതസ്ത്രപുജതുഭ്യാം ശ്രോത്രപ്രതിപൂരണമുദാഹരണേ ജിഹ്വാച്ഛേദോ ധാരണേ ശരീരഭേദഃ-என்னுஞ் சுருதிவாக்கியத்தால்-வேதம் ஜன்ம சூத்திரர் காதுகேழ்க்கும்படி சொல்லுகிறவன் நாக்கை அருக்கவேண்டுமெனவும்-சூத்திரற்கு சொல்லி தரிக்கும்படி செய்தவன் சரீரச்சேதஞ்செய்யவேண்டுமெனவும்-கூறியிருத்தலால் இச்சூத்திரசப்தத்தை யாநீர் அன்வயித்துக் கொண்டீர்•நும்மையேயன்றோ அஸல் சூத்திரனாய் வேதங்கழித்திருக்கின்றது-ஸ்மிருதியோ-நும்மவற்கு அத்யயன அத்யாபகயஜனயாஜனதானப்பிரதிக்கிறஹாதி ஆரு கர்மாக்களும்-செய்யக்கூடாதெனக் கண்டித்திருக்கின்றது ஷட் கர்மாக்களும் பிராம்மணபரமாய் முடிதலால் நும்மனோர் பிரவேசிக்கின் தேவலகத்வ தோஷம் வந்துவிடும்-ஏனெனில்-பரார்த்தத்தில் உப ஜீவிப்பவர்தேவலகர் எனவும்-இத்தேவலகர்களை ஸத்கார்யத்தில் வர்ஜிக்கவேண்டுமெனஸ்மிருதி நிஷேதித்திருத் தலின்•தானப்பிரதிக்கிற ஹாதிகள் பரார்த்தமாதல் பற்றி இஷ்ஷட் கர்மத்தில் ஜன்ம சூத்திரர்களை ஓதுக்கப்பட்டிருக்கின்றது-பிராம்மணர்களாயிருந்தால் தானப்பிரதிக்கிரஹாதிகளுக்கு தோஷமுண்டாகா. இதுமட்டோஸ்மிருதி நம்பௌத்தரைப்போன்ற ஜன்ம சூத்திரர்களுக்கு கோமாம்ஸம் பிதிர்கிருத்தியங்களில் புசிக்கும்படி சிரார்த்த நியமம் கூறப்பட்டிருக்கின்றது-ஏபுத்தரே-ஸ்மிருதி நும்மனோர் யாவரையும் கேவலங் கர்ம வாதிகளாய் சிவத் வேஷியாய் நாத்திகருய்

ஒதிக்கி ஸத்கர்மாக்களில் வர்ஜித்திருக்கின்றது- யே வீரபத்ரஸம்ஸப்தாஃ ஶிவபக்திபராங்முகாஃ । ஶம்போர் அந்யத்ர தேவேஷு யே பக்தாயே நதீக்ஷிதாஃ । தேஷாம் நாஸ்தி ப்ரஸாதஶ்ச ஸர்வதா ஶிவ கர்ஷயம்-என்னும் வாக்கியத்தால் வீரபத்திர மூர்த்தியால் சபிக்கப்பட்டவர்களும் சிவபக்தியில் பராங்முகராயிருப்பவர்களும் சிவபெருமானை நீத்து அன்யரை உபாஸிப்பவர்களையும் சிவதீக்ஷை பெறாதோரும் இன்னோர்வர்களுக்கும் சிவனுடைய பிரஸாதங் கூடாதெனக்கூறியிருத்தலால் கேவலம் கர்மவாதிகளை வீரபத்திரர் சிவஞானமல்லாது போகசபித்திருப்பதால் ஜன்மசூத்திரர்களாகிய னும்மவர் சாபகிரஸ்தராகவு மன்றோ கொள்ள வேண்டிவரும். இக்கருத்தை உட்கொண்டே யன்றோ ஸ்மிருதி கேவலம் அக்னியுபாஸனையை மாத்திரமே னும்மனோர்க்கு ஸத்கர்மாவாய் விதிக்கப்பட்டுள்ளது-சிவோபாஸனையான சுருதி நிஷ்ட தர்மங்களை ஸ்மிருதியறந்துங் கூறினதில்லை பஸ்மோத்தூளனதிருபுண்டிதாரண உருத்திராக்கதாரணைபதி பசுபாசவஸ்து நிர்ணயசிவலிங்கார்ச்சன பிராஸாதாதி மந்திரம் முதலிய பரதர்மங்கள் வேதாகமவாயிலாய் விளங்கப்படுதலின் ஜன்மசூத்திரர்களுக்கு இப்பரதர்மத்தை ஸ்மிருதி பரித்தூட்டமுயன்றதின்று-ஸ்மிருதிபோ அக்னிஹோத்திரத்தை கைவிட்டால் பிரஷ்டனவானெனவற்புருத்திக் கூறியதால் ஸ்மிருதியில் கூறிய-வைசுவாநராக்னி கேவலஞ் சாடராக்கினிபரமான ஜடதர்மமுடையதேயன்றி சேதனத்வமுடையதன்று-யஸ்த்வேதமேவம் ப்ராதேஶமாத்ரமபிவிமாநமாத்மாநம் வைஶ்வாநரமுபாஸ்தே ஸர்வேஷு லோகேஷு ஸர்வேஷு பூதேஷு ஸர்வேஷ்வாத்மஸ்வந்நமத்தி-என்னும் சாந்தோக்யோபநிஷத் வாக்கியத்தால் வைசுவாநராக்னியே உபாஸிக்கத் தகுந்தது சிவனார்க்கு விசேஷத்வங் கூறவில்லை இவற்றால் ஸ்மிருதியும் வைசுவாநராக்கினிக்கு விசேஷத்வங்கூறிற்றென்பாருயின்-ஸயஶ்ரீவைஶ்வாநரோயோநஃ ப்ரத்யேதமுக்தே தேஹேஷ்வயோஷாஹவதிபசேசதுர்விதமந்நம் வைஶ்வாநரோஹவதிஸபசேசதுர்விதமந்நம் ஹோஷம்ஸ்யைதி-என்னும் வாக்கியத்தால் வைசுவாநராக்னி ஜாடராக்னி பரமாய் காணப்படுதலின் இவைச் சேதநோபாஸ்தை

யாகா-ஜஹா ஹ௦ கரு தீ யொஹ்ரீவ-ிாஸ்யாசஸ வணஷ வணவாஹ்ரீ வெலேஸ்வா நர என்னும் வாக்கியங்களால் வைசுவாநரமென்னும் சப்தத்திற்கு இந்தஇடத்தில் பிரஸித்தமிருக்கின்றபடியால் கஹ்ரீ ஜெிவதாவாஸ்யாசவெஸ்வாநர௦ ஆாஜ௰ாகவாஜு திவ-ிவெசு வ௱ெ கருஜா க-என்னும் வாக்கியத்தால் இஷ்டி தேவதையால் பலங்கொடுப்பதாய் கூறுவதால்இதைத்தவிரச் சேதனத்வமுடையது வேறொன்றில்லை எனின்-கொ ந ரூ ஹா கி௦ ஷுரஜரூ ஹா ந ஜெவெஜ௦வெஸ்வாநர௦ஸ௦ ஷுரு கருஜெஷுஷி க ஜெவ ெநாஷுரஹி-என்னும் வாக்கியத்தால் பரமேசுரருக்கு அஸாதாரணபிரும்மசப்தாதிகளினால் விசேஷித்திருக்கின்றபடியால் இது ஜட ரூபமான ஜாடராக்னி பரமாகாது இவற்றாலும் பரமேசுவரரே உபாஸ்யரென்பது திண்ணம்-கஹ்ரீஜ-ிஷஜ-ிாவக்ஷ௱ஷீவஜுஸ௦ய-ிள என்னும் வாக்கியத்தால் பரமேசுவரருக்கு ஸுவர்க்கம்முதல்பிரதிவிபர்யந்தமான ரூபமென்பது கூறப்படுகிறது. கஸ்யஹவாவண தவாஹ்ராஸ்ஜெநாவெஸ்வாநரஸ்ஜெ௦யெ-ிஷஸ௱ெ கஜாஸூக்ஷ௱ விஷ்வர௦வ: ஷுராண:ஷுரயஹ்ரீ க-ிாஹாஸஜெ ஹொவஹ௱ ஜொகவஷ்டிவரவாயி: ஷுயிவஷுவவாஜள-என்னும் வாக்கியத்தால் பரமேசுவரரையே சுட்டப்படுகின்றது - உரவணவவெஷி ஜெ-ிாஜாநி வஹி-ிஹ-ிரு௦ய௦மாஹ-ி வெ கருாஜெ நாநாஹாய ிவவநஜாஸ்யஜாஹவநீய என்னும் வாக்கியத்தால் மூன்றக்னி நிரூபிக்கப்பட்டு அங்ககல்பனை கேட்கப்படுதலின்ஜாடராச்னிபரமான பிராணாஹுதியின் பொருட்டாமன்றி இவை தேவத்வமுடைய முக்தியின் பொருட்டன்றும். ஷிவொஜாவிஸாவருஜாஹாய வருஹ௱:வீரணாதி விஷ்வ௱௯-என்னும் வாக்கியத்தால் அக்னிஸ்வரூபியாகிய பரமேஸ்வரர் ஸந்தோஷிக்கின்றார் எனக் கேட்கப்படுதலால் சிவாக்னி உபாஸனையன்றி கேவலம் ஜாடராக்னி பரமானவைசுவாநராக்னி பிராம்மஞோபாஸ்னை யாகாது. இவை ஜன்மரூத்திறற்கே உறியது. அகனிஹோத்திரம் ஸாமான்யம் விசேஷமென இரு கூறாய் நிற்றலின் ஸாமான்யம் வைசுவாநராக்னி பரமும் விசேஷம் சிவாக்னி பரமாய் நிற்றலின் ஸர்வபூதாந்தராத்மா பரமேசுவரரேயாதலால் வைசுவாநராக்னி அந்தர்யாமி பரமேசுவ ரென்பது புலப்படும், இவற்றால் சிவாகாரயான

சிவாக்னியே விசேஷமென்பது திண்ணம். இக்காரணம்பற்றிஜ ன்மசூத்திரர்கள் ஜாடராக்னி உபாஸகரும்-ஜன்மபிராம்மணர்கள் சிவாக்னி உபாஸகருமாய்க் காணப்படுதலின் அத்தியயனயோக் யர்யாவரென்பதை உற்றுணர்ந்தடங்குவீராக-ஓய்புத்தரே நீவீர் ஸ்மிருதியைமாத்திரமே பிரமாணமாகக் கொண்ட ஸாமான்யர் சி வத்விஜர் வேதசிவாகமங்களைப் பிரமாணமாகக் கொண்ட விசே ஷர் வேதாகமம் ஆதிசைவ பிராம்மணர்களுக்கு சொந்தப்பொரு ளென்பதையும் னும்போன்ற ஜன்மசூத்திரர்க்கெங்ஙனம் விளங் கும் சுராமாம்ஸத்தை ஸத்காரியமாய்க்கொண்டுழலும் ஓய் அசை வரே மெய்ச்சமயமாகிய சைவஸமயத்தையும் சிவாச்சார்யர்களை யும் நிந்தித்தால் னும்மை விசேஷரென மதித்து மறியாதிசெய்வா ரென அகந்தை மேலிட்டு வெளிப்பட்டிருக்கின்றீர் ருக்வேதத்தி ல்சிவத்தைநீத்து அன்யதைவத்தை உட்கொண்டவன் மலத்தை யுட்கொண்டவனுவான் எனக்கூறியிருத்தலால் இப்பதிதற்குற்ற வியாதிக்கு மலமன்றோ அவுஷதமாய் வேதங்களால் பரிந்தூட்ட ப்பட்டிருக்கின்றது இதுமட்டோ - ஶிவெஶிவாமவெஉெஶவப வெஉஶிவபரிமூவஹ। வுவரீதாஹவெவஃ வ-ஃஶீயஸுஸு ஸுவஹி நஶ॥ என்னும் வாக்கியத்தால் சிவபெருமானிடத் திலும் சிவாகமங்களிடத்திலும் சிவதர்மங்களிடத்திலும் சிவாச் சார்யர்களிடத் திலும் த்வேஷபுத்தியுள்ள நரனைபரித்யஜிக்கவே ண்டுமெனக் கூறியிருத்தலால் நப்பவுத்தர் ஸாதுக்கள் கூடிய ஸ பையில் யிருக்கத்தக்கவரா-ஓய் புத்தரே ம-ரொஉஶ-வெந ஜூாதவு உநாய-தூ-வ ஶுக்ஷுெத-என்னும் வாக்கியத்தால்கு ருவினலேயே அறியத்தக்கது குருவன்றிஅறிதல் கூடாதெனவே தம் வியவஸ்தாபனஞ் செய்திருத்தலால் னுங்குலத்தாற்கு குரு க்களென உலகப்பிரசித்தியாயுள்ளவர் யாவருளர் பரமவைதிக சிகாமணிகளாகிய ஆதிசைவ பிராம்பண ஜாதியாருக்கே குருக் கள் ஜாதி என வேதாகமவாயிலாய் உலகபிரஸித்தியாய் நிலை நி ன்று கொண்டிருக்க குருவுக்கு நாமம் போடநினைந்து வெளிப்ப ட்ட னுப்புத்தியை தீட்டிவிளக்குமாறு யார் கைப்பட்டுதோவறி ந்திலம் ஓய் புத்தரே குரு குலோத்பவ வாஸமுடைய குருக்கள் ஜாதியாருக்கு ஜன்மசூத்திரர்களாகிய னும்போலியோர் வேதாத்தி யன வியவஸ்தாபனம் செய்ய வெளிப்பட்டது னும்மவரணத்தி

ற்குத்தக்க காரியமன்று னும்மைவேதமென்னும் சப்தத்தையே உச்சரிக்காவண்ணம் ஜன்மசூத்திரராய் ஸ்மிருதிகழித்திருக்கபந்தியில் நுழையாதே யென்றால் எலிபீத்த லென்பவன்போல் வேதாத்யயன வியவஸ்தை செய்யவந்தது னுமக்குற்ற அறியாமையேயன்றோ ஓய் புத்தரே [illegible] என்னும் வாக்கியத்தால் பரஞ்சோதிரூபமாய் ஹிருதயபுண்டரகசிதாகாச மத்தியையில் யிருப்பவரும் ஸ்வபாவிகமாய் பாபத்தை தகித்து முக்தியைகொடுக்கத்தக்க பரமசக்தியோடுகூடிய பார்வதீ நாதரான பரமேசுவரரை குருமுகத்தாலறியத்தக்கதெனக்கூறி யிருத்தலால் இங்ஙன்முற்ற குருத்வசப்தத்திற்கு யாது கெதிதேடுவீர் ஸன்யாசியே ஜகத்குருவாவாரெனின் ஸன்யாஸியை-[illegible]-என்னும் வாக்கியத்தால் கிரஹஸ்தனுக்கே குருத்வங் கூறப்பட்டு ஸன்யாசியை பரித்யஜித்திருக்கின்றபடியால் நம்புத்தருறை வெற்றுறையாகும் சங்கராச்சாரியார் முதலினோர் ஜகத்குருக்களாய் கொண்டாடப்பட்டிருத்தலால் குருத்வமவருக்குக் கூடுமெனின் சங்கராச்சாரியார் குருகுலோத்பவவம்சமல்லாதுதனக்குப்பின்வேறொருவரை ஸ்வீகரித்துக் கொள்வதால் குருகுலோத்பவ மிவற்கில்லை என்பதுதெற்றெண வெளியாகின்றது இதுவுமன்றி-[illegible]-என்னும் வாக்கியத்தால் யிருட்டை நீக்கி ஒளியை கொடுப்பவர் குருவெனக் காணப்படுதலால் இருட்டேபொய்யென வாதிக்கும் மித்தியாவாதிகளுக்கு குருத்வஞ்சாறுத லெங்கனம் ஜகத்ஜீவன் பொய்பிரும்மந்தான் உள்ளதெனக்கூறு மிவர்களுக்கு ஜகத்குருத்வமென்பதும் பொய்யேயன்றோ ஜகஜ்ஜீவே சுவரபேதம் முப்பொருளை யொப்ப முடித்து கூறுந்திருப்தார்த்த ஜன்யஞானமுடையசிவஞானிக்கன்றோஜகத்குருத்வம் உண்மை பொருளாம் இவற்றாலன்றோ ஆதிசைவபிராம்மணர்கள் யாவரும் ஜகத்திலுள்ள யாவராலும் குருக்களெனக் கொண்டாடப்பட்டு வருகின்றார் வேதாகமங்களோ குருமுகத்தா

லறியத்தக்கதென வியவஸ்தாபனஞ்செய்துவிட்டது பரவித்தைகளிலோ சிவத்விஜர்களுக்கே ஜகத்குருத்வஞ் சாதிக்கப்பட்டிருக்கின்றது ஸ்காந்தபுராணத்தில் [illegible] என்னும் வாக்கியத்தால் தாங்கள் லோக குருவாய் புஷ்பகிரி ஸந்தானத்தில் தோற்றிய மஹாத்மாவா யுள்ளவராதலால் துக்கத்தை யடைந்திருக்கின்ற இவர்களை சிஷ்யர்களாகக் கொள்ளவேண்டும் எல்லா பாபங்களும் நீங்கத்தக்க தங்களாலாராதிக்கப்படுகிறஅமிருதேசுவரரை தெரிசிக்கச்செய்து அல்லிங்கத்திற்கு பரிச்சர்யாதி சிவகைங்கரியத்தை இவர்களை செய்யும் பொருட்டமைத்து எந்தகாலத்திலிவர்கள் துக்கசாகரத்தினின்று நீங்குகிறார்களோ அதுபரியந்தம் இவர்கள் மேல் கருணை வைத்து அருள்புரிவீர்களாக. தாங்கள் லோககுருவாதலால் இது செய்யவேண்டுவது தங்கள் கடமையாகும் எனக்கூறியிருத்தலால் சிவப்பிராம்மணர்களே ஜகத்குருக்களென்பது ஸர்வசாஸ்திர ஸம்மதமாயிற்று மந்தானகாளீசம் ஆமார்த்தகி புஷ்கிரி கோளகி ரணபத்திரம் முதலிய மடங்கள் சைவஸந்தான பரம்பரை யாதலின் சிவாச்சார்யர்களுக்கன்றோ ஜகத்குருத்வஞ் சாதிக்கப்படும் சிவாச்சாரியர்களையன்றி ஏனையோர்க்கு ஜகத்குருத்வங் கூறியிருக்குமாயின் அவற்றை வேதத்தாலேனும் சிவாகமத்தாலேனும் புராணம் பதினெட்டாலேனும் புத்தரே எண்டெடுத்து விளக்க வெளிவருவீராக இவையன்றி புதிதாய் புதிக்கிய புதுநூல்யாம் பிரமாணத்திலங்கீகரிக்க மாட்டோம் அதுவும் வேதாகமபுராணேதிஹாஸாதி பிரமாணங்களாயிருத்தல் வேண்டும் ஓய்புத்தரே ஆதிசைவர்கள் வேதஸ்மிருதிவழித்தாய் முத்தியடைதல் வேண்டுமென வற்புறுத்தினீர் வேதமென்றது நத்தாங்கூடரிஹி எழுதியதைப்போலொருவாறு ஒத்துவிட்டது ஸ்மிருதிஎனப்பின் சீர்தூக்கமுயன்றது விவேகக் குறைவாம் ஸ்மிருத்யாச்சாரம் கேவலம் கர்மடர்களுக்கேயன்றி உ

யர்ந்த சிவஞானமுடையபரிபாகிக்குஸ்மிருதி அநுஷ்டானமும்பயன்படத்தக்கதோவேதார்த்தம்ஸ்மிருதிஎனக்கூறுவீராயின்வேதம் யார்முகமாய் வெளிப்பட்டது. ஸ்மிருதியார் முகமாய் வெளிப்பட்டது வேதம் சிவபெருமானது திருமுகத்துதித்தது ஸ்மிருதி மன்வாதிகளின் வாக்கு மன்வாதிகளும் க்ஷத்திரியாதி தர்மங்களான கோர்ட்டுவியவஹாரநிபந்தனைகளும் வேட்டையாடல் மாம்ஸம் புசித்தல் முதலிய தர்மங்களும் ஆகாராதி சுகாதார விளக்கங்களையும் அவ்வவற்றிற்கனுகுண்யமான கர்மாக்களையும் அக்னி உபாஸ்தையையுங்கூறப்பட்டிருக்கின்றது ஒப்புத்தரே-னும் வாயில் முக்தியல்லாதிருக்க ஸ்மிருதி மண் போட்டிருப்பதை அறியாது ஆதிசைவருக்கும் ஸ்மிருத்யுக்த அநுஷ்டானத்தால்முக்திவறவேண்டுமென ஊத்தை வாயைத்திறந்து கூக்குறலிடுகின்றீர் ஸர்வஞ்யனான பரமேசுவரர் கூறிய பதிவாக்காகிய வேதங்களுக்கு கிஞ்சிஞ்யராகிய ருஷிகள் அர்த்தஞ் செய்யத்தக்கவர்களோ செய்யதக்கவராயின் வேதத்தில் பசும்வதா வெனகூறியிருப்பதற்கு மாஸ்மபக்ஷணம் விதியெனக்கொள்ள வெளிப்படுவாரா வெளிப்படுவாராயின்- [illegible] -என்னும் வேதவாக்கியக்கருத்தைபூர்வபக்ஷமாக்கிவிடுகின்றது தக்ஷிண கார்ஹபத்ய ஆஹவனீயம்முதலியமூன்றக்னிக்கு ஸ்மிருதிவிசேஷங்கூறுகின்றது பஞ்சாக்னி வித்தைக்கு வேதம் விசேஷங் கூறுகின்றது வைச்வாநராக்னிவிசேஷமென ஸ்மிருதிகூறுகின்றது [illegible] என வேதங்களில் பசுபதிசம்பந்தமான சிவாக்கினியே விசேஷம்பசுக்களாகிய ஜிவான்மாக்களுக்கு பாச நிவிருத்தியைச்செய்து முக்தியடையச் செய்யுமென்பதால் சிவாகாரமற்றவைச்வாநராக்னிஜடராக்னிபரமான அசேதனத்வ முடையதாம் [illegible] என செதுக்கிஎடுத்த சிலையைப்பூஜி எனக்கூறிய வேத வாக்கிற்கு ஸ்மிருதி என்னபொருள் கூறியிருக்கின்றது உமாஸஹாயரான பரமேசுவரரை தியான பூஜாதி ஸத்கர்மாக்களை விதித்துள்ளவே

தவாக்கிற்கு ஸ்மிருதி என்னபொருள் கூறியிருக்கின்றது பஸ்ம ஜாபாலாதி ப்ரதிபாத்யமுடைய விபூதிஉருத்திராக்கதாரணாதிஸத்கர்மாக்களில் ஸ்மிருதி என்னபொருள் கூறியிருக்கின்றது பிராம்மிமுஹூர்த்தத்தில் எழுந்திருத்தல் வேண்டுமெனக் கூறிய ஸ்மிருதி இராப்பகல் அருபதுநாழிகையை என்னென்னமுஹூர்த்தங்களை நிர்ணயித்து எந்தெந்த ஸத்கார்யங்களை எந்தெந்த முஹூர்த்தத்தில் செய்யும்படி விதித்திருக்கின்றது ஸ்மிருதியில் விராட் புருஷனையன்றி உலகத்திற்குநிமித்த காரணன்வேறொருவனில்லைனக்கூறப்பட்டிருக்கின்றது வேதசிவாகமங்களில்சிவபெருமானை நிமித்தகாரணமாய்கூறுவதால் ஹிரண்யகர்ப்பவாதவிராட் புருஷ விருஷ்டியைக் கூறியதால் ஸ்மிருதி கேவல தந்திரமாயொதுக்கப்படும்ஸ்மிருதியும்ஸர்வஞ்யனாகியபரமேசுவரர் திருவாக்கன்றாதலால் வேத சிவாகமம்போல் பிரபல பிரமாணமாகாது ரிஷிகள்கிஞ்சிஞ்யராதலால் முற்றறிஞர்கூறியவேதத்திற்கு இக்கிஞ்சிஞ்யர்பொருள்கூறிமுடித்தாரென்பதும் விவேகிகள் கொள்ளற்பாலதன்று இவற்றால் ஸர்வஞ்யராகிய சிவபெருமான் திருமுகமைந்திலும் வெளிப்பட்டவேதாகமங்களே ஸத்பிரமாணமாகியமுதனூல் இதற்கு வழினூல்புராணம் சார்புநூல் இதிஹாசம் இதிஹாசத்திலும்தாழ்ந்தது ஸ்மிருதி இந்தஸ்மிருதியில் ஸுராமாம்ஸாதிகிருதுக்களை ஸத்கார்யமாய் முக்திபதத்திற்குச்சாதனமென்பதாய்பரிந்தூட்டப்பட்டிருத்தலின் இவை அஸுராதிவியாமோஹார்த்தமாயொதுக்கப்பட்ட காபாலாதி கேவலதந்திரநிஷ்டைமுடையதாம் காபாலர்பைரவோபாஸனையுடையவர் இவர்கள் அக்னி உபாஸனையுடையவர் இவ்விருதிரத்தார்க்குஞ் சீவஹிம்ஸைஸத்கார்யமாய்யிறுதியில்முடிபுற்றிருத்தலின் இவ்விருதிறத்தாறையுமொன்றாகூட்டி யுவமிக்கமுயன்றதன்றி காபாலிகறைனோக்க இவர்களுக்கு தைவமேயில்லாது அக்னி ஹோத்திராதிஜடதர்மமுடைய ஜாடராக்னி உபாஸகரேயாதலால் கேவலம் கர்மவாதிகளான நாஸ்திகரேயாவார்கள் ஒப் புத்தரே சிவாகமத்தை நிந்தித்து வேதத்தைபுகழ்ந்து ஸ்மிருதியை உயர்த்திப்பேசியதால் நும்மை வைதிகரென உலகினர் கொண்டாடுவாரென்னும் மமதைமேலிட்டு சிவாகமத்தை முதலில் நிந்திக்க யத்தனித்ததால்வேதமிவற்குச்சார்பாமாறெங்கனம் ஸ்மிருதியைப் பின்னுயர்த்

திபதில் எமக்கு மிக்கபேரானந்தம் ஸ்மிருதியை இவர் புகழ்ந்து கூறியதன்றி ஸ்மிருதி இவரை ஜன்ம சூத்திரராக்கி பஸ்ம ருத்திராக்ஷசிவபூஜாபஞ்சாக்ஷர சிவாக்னி முதலிய ஸத்கார்யம் நீத்து ஹிம்ஸாபரமானயாகமே பாகதிஎனக்கற்பித்து அக்கினியைத்தவிர உபாஸனுவஸ்து வேறொன்றிலதா யொதிக்கியிருப்பதை யிவரின்றும் மறிந்திலர் ஒப் புத்திரேசர்வஞ்யனுன பரமேசுவரர் கூறிய வேதத்திற்கு அவரே அன்றோ பொருள் கூறவேண்டும் வேதத்தினது உட்பொருள் ஸித்தாந்தமே யன்றோ இவற்றால் வேத சிவாகமம் அபரம் பரமெனவித்தை இரண்டாய் பிரும்மஞானிகளுக்கு சிவபெருமான் வகுத்துக்கூறினர்-[illegible] - எனவும் [illegible] - எனவும் சுருதி இரண்டு பிரகாரமாய் வேதோத்பத்தி கூறியிருப்பதை இப்புத்த ரரிவரோ-[illegible]:-என்னும் வாக்கியத்தால் மஹானுயும் பிரபுவாயும் ஸத்பத்தில் பிரவர்த்திப்பிக்கரவராயும் நிர்மலமானபதப்பிராப்திக்குக்காரணராயும் ஈசராயும் நாசரகிதராயுமுள்ளவர் எனக்கூறியிருத்தலால் நாசரகிதமாகிய ஊருத்வமுகமாம் ஈசான முகத்திட்டோற்றிய சிவாகமங்கள் பரவித்தைஎன்பதை நப்புத்தரரிவரோ - [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible]-என்னும் சிவபுராணவாக்கியத்தால் மனுஷ்யவாக்கியத்திலும் ருஷிகள் வாக்கியங்கள் விசேஷம் ருஷிகள்வாக்கியத்திலும்தேவதைகள் வாக்கியம் விசேஷம் தேவதைகள் வாக்கியத்திலும் பிரும்மாவின் வாக்கியம் விசேஷம் பிரும்மாவின் வாக்கியத்திலும்

வ்யக்தஸம்பவ: | அண்டஸ்யாந்தஸ்த்விமே லோகா ஸப்தத்வீபா ச மேதினீ | என்னும் வாக்கியத்தால் நாராயணருக்கு அண்டாந்தர் வர்த்தித்வங் கேட்கப்படுவதால் ஈசுவரத்வஞ்சாதிக்கப்படுமென வசன மொன்று காட்டியும் வ்யவஹரிக்கத் துணிந்தார்-அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத் | ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம் | தஸ்மிஞ்ஜஜ்ஞே ஸ்வயம் ப்ரஹ்மா ஸர்வலோகபிதாமஹ:| ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூனவ:| அயனம் தஸ்ய தா: பூர்வம் தேன நாராயண: ஸ்ம்ருத:| நாராயண: பரோவ்யக்தா தவ்யக்தா தண்டஸம்பவ:| அண்டஸ்யாந்தஸ்த்விமே லோகா ஸப்தத்வீபா ச மேதினீ| என்னும் மனுஸ்மிருதி வாக்கியத்தால் ஜலத்தில் வீர்யத்தை கலந்ததால் ஆயிரம் சூர்யபிரகாசம் போலும் ஸ்வர்ண வர்ணமாயு முள்ள முட்டை யொன்று தோற்றியது. இதில் நின்று ஸர்வலோக சிருஷ்டி கர்த்தா வான பிரும்மா உண்டானர். ஆப என்பது நாராஎனவும் இதிலுண் டானவர் நரனுக்கு புத்திரரெனவும் இந்த ஜலத்தைத் தனக்கு ஸ்தா னமாக் கொண்டிருப்பதால் நாராயணனெனப் பெயர்வந்ததெனவும் பரத்தினின்று அவியக்த முண்டாயின. அவ்வியக்தத்தி னின்று அண்டமுண்டாயின அண்டத்தினின்று நாராயணரும் ஸப்தத்வீபு க்களோடுங் கூடிய மேதினி உண்டாச்சுது ஸ்ருஷ்டிகாலே விஹந்தி ப்ரஹ்மாதிரூபேண பராதீநத்வே இதி அவ்யக்தஜந்மா அவ்யக்தாதிவப்ரஹ்மா இது பின்வரும் பிரமாணத்தால தெறியவரும் இவ ற்றால் பிரம்மாவுக்கு ஆதிக்கம் ஏற்படுவதால் இங்ஙனமெதுபர மென் பதில் சந்தேக முண்டாயின. ருத்ரஸம்ஜ்ஞஸ்ய தேவஸ்ய ருத்ர வேஶத்திர்: ப்ரஜாயதே | தேந ஸ்ருஷ்டம் ருஷேர்வீர்யம் வரஶத்ருநிஹந்தா | தத³ண்டமபவத்தைமம் ஸஹஸ்ர கிரண ப்ரபம் | விஷ்ணுஸ்த்ர ப்ராவிஶச் ஸாக்ஷாச் சம்புக்தேஸ்து தேஜஸாத் | வாஸுதேவோ நாராயணாக்யோ தேவோ யோகாத்மவாநவஸத் | ஆப ஸ்ருஷ்டேர்ஷா ருஷோத்ஜ்யோ ருஷோநார: ப்ரகீர்த்தித:| நரஜாதத்வதோ ப்ரஹ்ம நரஸாக்ஷிவோதத:| நாரஸ்யாயனம் ப்ரோக்தம் ததோ நாராயண ஸ்ம்ருத: || என்னும் புராண வாக்கியத்தால் உருத்திரரென்கிற ஸம் ஞையோடு கூடியதே வருடைய ஸ்வரூபத்தில் மூர்த்தி உண்டாயின

அந்த மூர்த்தி அன்யமூர்த்தி அபிமானத்தினால் ஜலத்தில் தனது வீர்யத்தை வைத்து ஆயிரம் சூர்யகிரண பிரபையோடுங் கூடிய அந்தவீர்யம் முட்டையிற்று. அதில்நின்று விஷ்ணு எனது சக்தி வைபவத்தால் உண்டானார். திரும்ப என்னுடைய ஆக்ஞையால் விஷ்ணு நாராயணர் என்கிற பேரை யடைந்திருக்கிறார். ஜலத்தில் ஜூக்கும் இரஸம் இந்த ரஸத்திற்கு நாரமெனப்பெயர் இது நரனிடத்துண்டானதால் நரனென்பது சாக்ஷாத்சிவம். இந்த ஜலத்தை தமக்கு ஸ்தானமாகக் கொண்டதால் நாராயணனெனப் பெயர் வந்ததென வுங் கூறியிருப்பதால் பாத்வம். பிரும்மா விஷ்ணு ருத்திரர் முதலிய குணமூர்த்திகளுக் கில்லாது யாவும் சிவபெருமானிடத்தே சுட்டப் பட்டது. இவற்றை நோக்கியே யன்றோ ஬ ஹ விஷ்ணு ரூ ெஜ ூ ஜாெஷ ஸாஹ ஸ யஜெ ஸவ ூ ாணி ெசா ஷ ்ாணி ஸ ஹஹ ெதெ ந ூ காரணம் காரணா நாம யாதாஜாதாகார ணஜெஜூயஃ ஸஸெவ ூ ஸ ூ ஸாவெ நூ ஸவெ ூ ஸாரஸ்ாஹ ாகாஶஉெஜூ என்னும் சுருதி வாக்கியத்தால் பிரும்ம விஷ்ணுருத்ரேந்திராதிகள் உண்டாக்கப் பட்டார்கள் பூதங்களோடு எல்லா யிந்திரியங்களும் உண்டாயின. இவைகள் காரணமன்று காரணர் ஸர்வேசுவர்ய ஸம்பன்னராய் ஸர்வேசுவராராய் ஆகாசமத்தியத்திலுள்ள வராய் தியானிக்கத் தகுந்த சம்புவே என்பதால் நாராயண பரத்வ மிங்கனம் தலைநீட்டா தொழிந்துவிடும். இவற்றால் நாராயணர் சப்தத்தாலும் அர்த்தத்தாலும் வேறுபட்டவரே. இவ்வாருள்ள ஞாயம்ப வைற்றையு மூஹித்தறியாது ஒளியப்போயுந்தலை யாறிவிட்டிலொளிந்ததுபோல் சூதசங்கிதா வாக்கியத்தையு மன்றோ ஈண்டெடுத்து வறையத்துணிந்தார் இதுவு மிவர்க்குச்சாதக மாவவையன்று ஶவதூாகஷூதூாவி உஹாெஜெவா உஹெஹ ஸாஃ। தஉெநூெகவ யூஂெஜவ உஹாெஜெவா நெதெநவ । உஹாெஜவா ஸஉாஶூதூ வாஜிதநூவூயாஉூதி । உஹாெஜெவா உஹாெஜவஂ கயஉநூஂ ஸஉாஶூயெக ॥ என்னும் வாக்கியத்தால் சப்தத்தாலும் அர்த்தத்தாலும் மஹாதேவரென்பது மஹேசுவரரே யன்றிவேறன்று. இதர் கனியமான தேவர்கள் மஹாதேவராகார் இம்மஹாதேவரை ஆசிரயித்து அபீஷ்டத்தை அடையாதவர் அன்யதேவரை மஹாதேவரென எப்படி ஆசிரயிக்கலாம் எனக் கூறி யிருப்பதால் நாராயணசப்தத்திற்கு மஹாதேவர் வேராயுள்ள வரென்பதே இவற்றாலுந் தெரியவ

ருகின்றது. ஸ்ரஹ்மாதிதெவதா நாஞு விஷ்வாயிகூ॰வக்ஷதியெ। ஸ

யொ உ॰வெ௱ஜூ வாஉாவெஷ யாவகூதி நரகாணுவ ॥ என்னும் ஸூதசங்கிதா வாக்கியத்தால் விசுவாதிகரான பரமேசுவரருக்குச் சமானமாய் பிரும்மா விஷ்ணு முதலியபேர்களை ஸமமாக நினைத்தால் நரகத்தில் உதைந்து தள்ளக்காலைதூக்கி நிற்கின்றாரெனக் கூறியிருத்தலால் இவரிங்ஙனம் தலைநீட்டி வாழுதலெங்கனம். இது மட்டோ உயாதெவஸ்ய விஷ்ணுஸ்ய ஸ்ரஹ்மாவஉநயஷயா। நிதூ

கூவா॰ஸவாஸிவஉாதுநஃ ஹூவக்ஷதிஹி । தஷஉாவெத்ூவ

விவெஜ॰உாநிதூ॰ வஷநவாவர॰। ஜிஹ்வாயா॰வரஸ॰த

ஷ॰ யாரயாஉிநவஸ॰ஸயஃ ॥ என்னுஞ் சூதஸம்ஹிதா வாக்கியத்தால் நித்ய வஸ்துவான பரமேசுவரருக்கு ஸமானமாய் விஷ்ணு பிரும்மாமுனிக்கூட்டங்களை கூறுகிறவர் நாக்கில் பரசுவைக்காச்சி சுடும்படி கூறியிருக்கின்றது. இவ்வாருள்ள பிரபலப் பிரமாணங்களை உற்றுநோக்காது நாராயணரும் மஹாதேவரும் ஓரே பொருளென மயங்கிக்கூற வெளிவந்தார். ஶிவஎகொஜெய ஶிவஂகரஸ ஷவ

நூஜவரிதூஜூவஉாவுா யவஶிவா ॥ என்னும் அதர்வசிகா உபநிஷத்வாக்கியத்தால் சிவபெருமானொருவரே தியானிக்கத்தக்கவர் மற்றவர் பரித்யஜிக்கத்தக்கதென வெளியாயின, ஸஞாஶிவுதி த॰

ஜநெ ஈஉ வரொஉநீஷயாஹ்ணுதி ஜிஹ்வயாஸவ ॥ என்னுஞ் சுருதிவாக்கியத்தால் ஸர்வான்மாக்களுள்ளும் அந்தராத்மாவாயும் ஸர்வோத்கிருஷ்டராயு மிருக்கிருத்திரரான பரமேசுவரரை எந்த மனிதர்கள் புத்தியினல் தியானிக்கிறார்களோ அவர்கள் சுவையுடன்கூடிய அன்னத்தைப் புசித்தவராகின்றார் தியானியாவிடில் மலத்தை புசித்தவற்கொப்பாவாரெனக் கூறியிருத்தலால் நாராயண மஹாதேவாதி ஸாம்ய வியவஹாரிகளுக்கு ஸௌகர்த்வ முண்டாகுமென்பது வேதத்தின் றுணிபாம்.

இக்காரணம்பற்றி இந்த வியவஹாரத்தை கண்டித்து வெளிப்படுத்தும் புஸ்தகத்திற்கு "சிவநிந்தகபிரச்சனபௌத்தக்ரோடபங்கவஜ்ஜ்ராயுதம்" என பெயரிடுதல் அவச்யமாயின. ஏ சிவநிந்தக பிரச்சன்ன பௌத்தக்ரோட வாதிமேயேகேள்! ஸாமான்யமான உம்மை உத்தேசித்து எமது பூஜ்யசரணுளான சிவாச்சார்ய ஸ்வாமிகளிறகேந்துதனு சிதமன்று கல்வியறிவிலா மாந்தரின்பொருட்டு வித்வான்கள்

வரையத்துணிபார். இவற்றால் ஸ்வாமிகள் சிஷ்யனை நானும்மைக் கண்டிக்க எத்தனித்தேன். ஸ்வாமிகள் வெளிப்படுத்திய வேதாகம தாரதம்யம் எரு-வது பக்கத்தில் பரமேசுவாருக்கு குணம் நிற்குணம், ஸகுணநிற்குணம் இம்மூன்றும் சரீரமெனக்கூறியவிடத்தில் தோஷங் கல்பிக்க முயன்றாய் அவற்றை வருவித்துக்காட்டுவோமாக, முதலில் நெருப்பு நெருப்பின்மை இவ்விரண்டும் பர்வதத்திற்கு தர்மமெனவும் இவற்றால் நெருப்பு நெருப்பின்மை யென்கிற இரண்டுதர்மத்தை யுடைத்தான தென்பதுபோல் குணம், நிற்குணம் இவ்விரண்டும் பர மேசுவரருக்குச் சரீரம் இவற்றால் ஓரேசரீரமுடைத்தானவர் என ஞாயாறுய்ச்சி செய்துகொண்டு விபரீத திருஷ்டாந்தத்தால் தூஷிக் கயத்தனித்தீர். நீவீர் தர்க்கத்தில் ஒன்றுந் தெறியாதவரென்பது நீரெடுத்தாண்டவாசங்கையால் தெறியவருகின்றது. இவற்றால் தர்க்க சுண்டரென்பது னும்மேலேறியது. இதுநிற்க நீராசங்கித்தவிடத்தில் பக்ஷஸாத்தியஹேதுக்கள் உமக்கே புலப்படாது. தாறுக்குமாறாய் வியவஹரிக்க யத்தனித்தீர் இங்கனம்பரமேசுவர சரீரத்தில் குணம், நிர்குணம் மிவ்விரண்டையுஞ் சாதிக்கின்றீரா, அல்லது குண, நிற் குண மிவ்விரண்டு சறீரத்தோடு கூடியிருக்குகையை சாதிக்கின்றீரா, இம்மூன்றினுள் நீர்வெளியிட்ட வழுத்திரட்டில் ஹேதுவைவிளக்கிக் காட்டவில்லை, இவற்றிற்குஹேது கிரந்தாந்தரங்களிலேனும் உற்று நோக்கி; தெளிவோமெனினும் அங்ஙனமும் முயற்கோடாய் நிற்கின் றது. இங்ஙனம் பக்ஷஸாத்திய ஹேதுக்கள்கூடத் தெரியாது வியவ ஹரிக்க வெளிவந்த ஏதார்க்கிகசுண்டரே அதஃ என்பது ஹேது வாய்க் கூறுவீராயின் அதஃ என்னுஞ் சப்தம் முன்னுள்ளதைக் குறி த்துணர்த்துமன்றி பின்னுள்ளதைக்குறிக்கா முன்னுள்ளதிலும் ஸமீ பத்திலுள்ளதுமாத்திரமே குறிக்கத்தக்கது இந்த அதசப்தத்திற்குப் பூர்வம் ஸமீபத்திலுள்ளது ஹேதுவாகலாம், அங்ஙனமாயின் ஸகு ணம், நிற்குண மிவ்விரண்டும் பக்ஷம் பசுபதிபரமேசுவர சரீரம் ஹேது ஸகுண நிற்குணஙகளாகிய ஓரேசரீரத்தோடு கூடியிருக்குகை சாத்யமென்பதாய் காணப்படுகின்றது. இவ்வாறு நீரே தோஷங்கல் பித்துக்கொண்டு இவற்றை பிரர்சொன்னதாய் அவாந்தரகல்பனை யான ஞாயப்பிரயோகஞ்செய்து பிராந்திவாதத்தால் பிரமித்து நின் றது தமக்குற்ற விவேகக்குறைவாம். நமது ஸ்வாமிகள் இங்ஙனங் கூறுதிருப்பினும் தாங்கூறி ஸந்தோஷித்த இக்குதர்க்க தோஷாரோ பணத்தைக் கண்டித்து. தமது தூஷணத்தை சததாவாக அடித்துத்

தள்ளுகின்றேன். குணம் நிர்குணம் மிவ்விரண்டும் பக்ஷம். ஸகுண-நிர்குணமாகிய ஒரே சரீரத்தை உடைத்தானது ஸாத்தியம். பசுபதி பரமேசுவர சரீரமாகயால் - ஹேது - நீர் ஆசங்கித்தபடி இது பக்ஷஸாத்திய ஹேதுக்கள். பக்ஷத்தில் ஸாத்ய ஹேதுஸம்பந்தம் - ததாத்ம்ய மாதலால் இவற்றாலும் பாதக மேற்படக் காரணமில்லை. இத்தர்க்கம் சித்ஸ்வரூப விசாரணையில் பயன்படாதென ஸ்ருதசங்கித்தாவசனத்தால் யாமேலேகாட்டி நிரூபித்துள்ளோமாதலால், நமது ஸ்வாமிகள் வேதாகம ஸத்சாஸ்திர பிரமாணவாயிலாய் பரமேசுவர சரீரத்தைச் சாதிக்கப் புகுந்தனர். வேதாகமாதி ஸத் சாஸ்திரத்திற்கு அப்பிராமாண்ய வாதமுடைய குதர்க்கானுமான வாதிகளை அவைதிகரென்பதிற் றடையில்லை. பிரபஞ்சம் யாவும் பரமேசுவரருக்குச் சரீரமாதல்பற்றி குணம் - நிற்குணம் ஸகுண நிர்க்குணம். இம்மூன்றும் பரமேசுவரருக்கு ஒன்றாய்ச் சேர்ந்தும் அல்லது வெவ்வேறாகவும், என் சரீரமாய் யிருத்தல் கூடாது. ஆகாஶ ஶரீரம் ப்ரஹ்ம என்னும் சுருதி வாக்கியத்தால் ஆகாசமே பரமேசுவரருக்குச் சரீரமெனக் கூறுவதால் ஆகாசம் சப்தகுண முடையதுபற்றி சப்தமோரிடத்திருந்தும் ஓரிடத்தில்லா திருப்பதால் இது ஸகுண நிர்க்குணப்பொருளாகின்றது. இதைச் சரீரமாகவுடையவர் ஸகுண நிர்க்குண சரீரமுடையாரென்பது தீர்மானம். விஜ்ஞாநம் ப்ரஹ்ம என்னும் சுருதிவாக்கியத்தால் ஞானத்தைச் சரீரமாக வுடையவர் என வெளிப்படுகின்றமையின் ஞானத்திற்கு குணமின்மைபற்றி குணே குணா நங்கீகாராச் என்னுந் தர்க்கசாஸ்திர ஞாயத்தால் ஈசுவரருக்கு நிர்குண சரீரத்வஞ் சாதிக்கப்பட்டது, மநோ ப்ரஹ்ம என்னுஞ் சுருதி வாக்கியத்தால் மனதையே பரமேசுவரருக்குச் சரீரமாகக் கூறுவதால் மனந்திரிவிய பதார்த்தமாதல் பற்றி திருவ்வியம் ஸகுணமாதலால் ஈசுவரருக்கு இதினால் ஸகுண சரீரத்வஞ் சாதிக்கப்பட்டது.

இவ்வாறுள்ள சுருத்தியாகம சிரோ பூதமாகிய பரமேசுவர சரீரமான ஸகுணம் நிற்குணம் ஸகுண நிற்குணம் மிம்மூன்றேயும் இல்லையெனக் குதர்க்கானுமானத்தால் சாதிக்கத் துணிந்தீர் நீர் கொண்ட குதர்க்கானுமானத்தாலும், சுருதி யுக்தி அனுபோகத்தாலும், யிம்மூன்று சரீரமும் உண்டென சாதித்து உமது வாதத்தை

நிருகரித்தொதிக்கிநோமாதலால் மேலும் நீர் கூறியிருக்கும் அசப்ய வாதங்களைக் கண்டிக்கப் புகுவோமாக, குணம் நிற்குணம் இவ்விரண்டும் ஓரிடத்திலே இருக்காதென ஆசங்கிக்கப் புகுந்தீர் இது தாதாத்மய ஸம்மந்தத்தினு லிருக்கலாம். இதற்கு க்கௌட பிரும்மானந்தர் அத்யந்தா பேதத்தில் ஸம்ஸற்கம் கூடாதெனக் கூறியிருப்பதால் தாதாத்மய ஸம்மந்தமுங் கூடாதெனக் கண்டிக்கப் புகுந்தீர், இது அப்படிக்கன்று இங்கனம் பக்ஷசாத்ய ஹேதுக்கள் கொஞ்சம் விலக்ஷணமாயிருக்கின்றது; அஃதெங்கனமெனின் இரண்டோடு கூடியிருக்கிற தன்மையை உடைத்தானது பக்ஷம், ஒரேசரீரத் தன்மையை உடைத்தானது ஸாத்யம் என இங்கனம் பேதங்கூடுமென ஞாயமுகத்தால் வெளிப்பட்டிருக்க ஞாய சாஸ்திர ஆராய்ச்சியற்ற அந்தகராகிய நீர் வித்வான்போல் மமதையுற்று உம்மவமூவாசகத்தில் ஆபாசக் குப்பை குவித்து விளையாடுகிறாய். இவை உமக்குற்ற பிராந்தியின் குணமென்பதாய்த் திரஸ்கரித் தொதுக்கப்பட்டது, பின்னும் சரீரம் குணம் குணமின்மை இவ்விரண்டுஞ் சரீரம் சரீரி குணம் குணமின்மை இவ்விரண்டையு முடைத்தானது எதுவோ அத்துடன் கூடினவன் என்றீர் இவ்வாறே நமது சுவாமிகள் கூறியதில்லை உமதுப்ராந்தியின் ப்ரதி பலன அஸத்வாத மென்பதாம் இங்கனமும் நமது சுவாமிகள் வாதத்திற்கு ஹானியுண்டாதற்குக் காரணமில்லை. அவற்றை வருவித்துக்காட்டுவோமாக,ஈசுவரர்க்கு வித்தையே சரீரமாயிருப்பதால் இந்த வித்தை ஸர்வசக்திமத்தாதலின் சக்திகுணமாதல்ப்பற்றி ஈசுவரரென்னுமிடத்தில் நிற்குணமும், சக்தியும்சக்திமானும் மொன்றாயிருப்பதால் இவ்விரண்டும்நித்தியமாதல்ப்பற்றிக் குணபாவம் அதிஷ்டானத்தைக்காட்டினும், வேறில்லாததால் சக்திவியாபக பர்யந்தம் குணமாயும், அதற்குமேல் நிற்குணமாயும் வியாப்யவியாபகபேதத்தால் பாவாபாவமிரண்டும் மோரிடத்திலிருத்தல் விரோதமின்றாம். தர்க்கசாஸ்திரத்துண்மை யறியாதோற்க்கித்துணி பெங்கனே விளங்கப்போகின்றது. இக்காரணம்பற்றி உமது தூஷணம் அளவிறந்தனவற்றையும் பஸ்மீ பூதமாக்கிவிட்டோம். காக்காயின் கருப்பால் உப்பிரிகை வெளுத்திருக்குமென்னும் விகற்பஞானம் ஞானந்தனகிய உமக்குற்றோற்றுவது முசிதந்தான் நமது சுவாமிகள் வாக்கியதிற்கு ஒருக்காலுஞ் சோதரத்வமுண்டாகாது. பின்னும் வியாப்யவிருத்திகளான அதாவது! தான் இருக்குமிடத்தில் தனதபாவமிருக்காமை குணமும் குணமின்மையும் இவ்

விரண்டு மோரிடத்தி லிருக்கும் தன்மையை சொல்லாநின்ற அபச தன் எனநமது ஸ்வாமிகளைக் கழித்தொதுக்கியதுடன் இவ்விரோ தத்திற்கு நமது சுவாமிகளுக்கு பயந்து தர்ப்பணஞ்செய்வதாயுங் கூறினர். இவர்கூறிய அபசதத்வம் இவரையேப்பற்றி மூர்த்தீகரித்து நிற்கின்றது. தமதுபிதா இன்னாரென நிர்ணயிக்கக்கூடாதவரெவரோ அவர்யாவருக்கும் பயந்து தர்ப்பணஞ்செய்யவேண்டிய தவச்யந்தான். ஸம்யோகமும், சம்யோகாபாவமும் விருக்ஷத்தின்மேலும் கீழுமிருக்கின்றதாய் ஞாயசாஸ்திர ஆராய்ச்சியுடையார் கூறவில்லையா, இஃதன்றி விஷயத்தை கிரகிக்குந்தன்மையாகிய ஸம்மந்தத்தால் ஸம ஸ்தபதார்த்தபாவமும், ஸமஸ்தபதார்த்தாபாவமும் அறிவினிடத்திலே யிருத்தல்கூடாது. ஏசுஷ்க்கதர்க்காவலம்பியே ஸம்யோகம் சம்யோகாபாவம் இவ்விரண்டும் மோரிடத்திராதென எம்மதம் புக்கி ஆசங்கிக்கத்துணிந்தாய் நம்பபிப்பிராயம் ஏகான்மவாதமாயிருப்பினும் அங்கனம் சத்துசித்து ஆனந்தத்துவாதி லக்ஷணங்களுக்கு நீர் என்னகதி தேடுவீர் இங்கனம் நீர் பிரும்மலக்ஷணங்கூற வெளிப்படுவீராயின்உம்மை நாஸ்திகராக்கநமது திருக்கரம்பின்னிடாது. இதில் நின்றுத்தப்பிப்பிழைக்க வழிதேடிக்கொள் வீணே பிரும்மத்தி னிலக்கணமறியாது ப்ரதிபிம்ப,ப்ராந்தி, பரிணாம விபாவகாரிகம் விவர்த்த, முதலிய அஸப்பவாதம்புக்கி சூன்யவாதமே நமக்குற்றஸ்தானமாய் கைப்பற்றி நிற்பாய். இச்சத்கார்யத்தில் னும்மை விசாரிக்க ஆஸ்திகர்கள் விரும்பார். ஸம்யோகம் ஸம்யோகாபாவம் இவ்விரண்டிற்கும் விரோதமுண்டென எந்தக்காரணத்தால் சொல்லத்துணிகின்றுயோ, அந்த விவாதம் நமக்குபிண்டா பாவமாக்கிய தோடுங்கூட மொட்டையுமன்றே அடித்திருக்கின்றது. எந்தவிடத்தில் ஸம்யோகமிருக்கின்றதோ அதேவிடத்தில் ஸம்யோகா பாவமிராதென நினைத்து நீராசங்கிக்கப்புகுவீராயின் இவ்வாறுள்ளபதார்த்தம் ஜகத்திலோரிடத்திலுமிராது இவற்றல் சாஸ்திரஞ்ஞர் அவ்வியாப்ய விருத்திபதார்த்த விலக்கணங்கூறிய விடத்திலும் நமதபிப்பிராயம் முன்னோடு பின்முறண்படும், இதன்றி பரமேசுவரருடைய சுகம் முதலியவைகள் நித்தியமாயிருப்பதால் இதற்கு அவச்சேதகமுண்டாகாதெனக்கூறினீர். அபாவன்னித்தியமானதால் ஸம்யோகா பாவத்திற்கு விருக்ஷத்தினடி அவச்சேதகமானதெப்படி. பின்னும் நித்திய வஸ்துவுக்கு அவச்சேதகத்தால் தோஷ மெவ்வாறுண்டாகும். ஜீவாத்மா நித்தியமாயும், வியாபகமாயுமிருப்பதால் சரீரத்திலுள்ள ஆத்மா

வுக்குச் சுகாதிகளுண்டாகிறதென்றுங் காதின்துளையான ஆகாயம் காதென்றும் இதுமுதலிய ஞாயசாஸ்திரத்திற்கு நீர்கூறுவது விருத்தங்களாகும். இவற்றால் நித்தியவஸ்துவுக்கு அவச்சேதகத்துவங் கிடையாதென்னும் சாஸ்தறைகதேசிகளான வாதிகளுக்கு இந்த அவச்சேதகம் வேறென்று சிந்தாமணி விஷயதாவாதத்தில் மதுராநாதரால் சொல்லப்பட்டிருக்கின்றது இதுநிற்க.

ஸ்ரீமத் ஜகத்குருமணியான ஸ்ரீகண்ட சிவாச்சாரிய ஸ்வாமிகள் பாஷ்யத்தில் வேதசிவாகமங்களுக்கு பேதங்காண்கிலோம் என்னுமிடத்தில் இப்பன்னுடைப் புத்தியுடையார் தூஷிக்கமுபன்றனர் இவற்றைப் பரிகரித்தொதுக்கப் புகுவோமாக,ஓய் அசாஸ்தீரிகரேவஸித்தாந்த பாஷ்யத்தின் அருமை நம்போன்ற மந்தமதிக்கு விளங்கத்தக்கதோ நமது சிவாச்சாரிய சுவாமிகள் ஸித்தாந்த பாஷ்யத்தின் உண்மைஸாதுக்களுணர்ந்துய்யு மாறுவேதாகமதாரதம்பத்தில் வருவித்துக்காட்டியதேயன்றி இப்பிரச்சன்ன பௌத்தறறிவை சீர்தூக்கப் புகுந்ததன்றும. ஓய் புத்தரே தர்க்கசாஸ்திரந் தெரிந்தவர்போல் தலைதுழைத்து தலைதடுமாறி வாடிவருந்திய உமதுன்மத்தத்தை முற்றுந் நீக்கிக்குணப்படுய்ய இதுகாறுப்ரமாண பிண்டம் போட்டுரக்ஷித்தோம். இனி சப்தசாஸ்திரத்திலும்ந் தெரிந்தவர் போல்தலைவிரித்தாடப்புறப்பட்டீர்.உமதாட்டம்எபது திருக்கரவிபூதிலேசத்தால்நிறுத்துந்தரமுடைய எம்மிடமா செல்லபோகின்றது காடு, மலை, வனந்திரம் முதலியவிடங்களில் தப்பிப்பிழைத்தோடிவிடு. அபேதமாயிருந்தால்த்வந்தம் வராதெனத் தூஷித்தீர். இங்கனம் ஓரேபதங்களுக்கு த்வந்த ஸமாஸம் வராதே யொழிய இரண்டு பதங்களுக்குத்து வந்த ஸமாஸம்வருதல் அத்யாவச்யகமாம், வேதம் சிவாகமம் என்னும் இரண்டு சப்தங்களும் ஒன்றுதலெங்கனம், இவ்விரண்டிற்குந் தொந்த ஸமாஸங் யென்வருதல் கூடாது. இவ்விரண்டிற்கும் பேதங்காண்கிலோம் வேதமே சிவாகமமென்பதாய் ஒன்றுப்படுத்திக் கூறியதால் தொந்தங்கூடாதெனின் அங்கனமும் வேதஞ் சிவாகமமென பேதப்பட்டு நிற்பதால் இவர்க்கூற்று குற்றமாய் முடிந்துவிடும். இங்கனம் வேதசிவாகமங்களை திருவாய் மலர்ந்தருளியவர் பரமேசுவரரொருவரே யாதலால் ஒரு கர்த்தாவால் சொல்லப்பட்ட இவ்விரண்டிற்கும் ஏககருதிருக விஷயந்நோக்கி வேதமென்பதாய் பொதுவில் கூறியதேயன்றி இவ்விரண்டும் ஸமானப்ரதி பத்தியுடைய தென்பதவர் கருத்

சிவநிந்தகப்ரச்சன்ன பௌத்தக்ரோட பங்கவஜ்ராயுதம். கஉள

தன்று, ஸமானப்ரதி பத்தியாய்க் கொண்டிருப்பாராயின் திரயிவர்ண்ணிக ஸர்வவிஷய பேதஞானங்கூறியது வித்யாஸ நோக்கியேயன்றே இவற்றால் அர்த்தத்தால் வேறுப்பட்டதும் முடிவில் கற்திரைக்கியத்தால் சமானப்ரதி பத்திகூறியதுமாய்க் காணப்படுதலால் ஸ்ரீகண்ட சிவாச்சாரிய ஸ்வாமிகள் இங்கனம் துவந்த ஸமாஸம் ப்ரயோகித்தது சிதமென்பதாயிற்று. பாணினீ சூத்திரமும் வாசெஃ௨௨௨௩ என்னும் சூத்திரத்தால் ஒரு பதத்திர்க்கு மேல்ப்பட்ட இரண்டு முதல் அனேக பதங்களுக்கும் தொந்தம் வரலாமென ஞாயவாயிலாய்ப் புலப்பட்டு நிற்றலால். இங்கனங்கூடாதெனக் கூறியவிவரை சப்த சாஸ்திர ப்ரக்ஞையற்றோ ரென்பதாய்த் திரஸ்கரிக்கப்பட்டது கல்வியறிவிலாமந்தர் ஸித்தாந்த பாஷ்யந்நோக்கும் பரிபவமற்றோருதலால் மேதாவிகளான ஸ்ரீமத் சங்கரபாதர் அப்பய்ய தீக்ஷித சரணுள் இவர்களால் அங்கீகரித்து ஆனந்தமடைந்து சிரக்கம்பனஞ் செய்யப்பட்டு மிருக்கிற ஸித்தாந்தார்த்தங்களை உடைத்தானதென்பது பரிபவமற்றவற்கு விளங்கத் தக்கதோ, இப்பாஷியத்திர்க்கன்றோ ஸ்ரீமத் அப்பய தீக்ஷித சரணுள் சிவார்கமணி தீபிகை யென்னும் வியாக்கியானஞ் செய்தருளினற். ஏக்கற்றறியாகயவர் குலசிகாமணியே, னும்போன்ற ஆபாஸ புஞ்சகற்கு ஸத்சாஸ்திரம் நன்குவிளங்கப்பெறுதாதலின் னும்மை இழிந்தோர் பரத்தொதுக்கித் தாழ்ந்திடத்தில் வைக்கப்பட்டது. இதற்கு மேலும் ஸமஸ்கிருதத்தில் வியவகாரம் பின்வர விருக்கும் இனி உன் வழுவாசகத்தில் இடையிடையே சிவநிந்தை புரிந்திருப்பதை அறவோமாற்றிச் சாதுக்கள் குணப்பட்டுய்ய விருப்புற்றேமாதலால்அவற்றைவருவித்துக்காட்டிக் கண்டிக்கப் புகுவோமாக. இவரது வழுத்திரட்டு கக-வது பக்கத்தில் நமது சிவாச்சாரிய ஸ்வாமிகள் வேதாகமதாரதம்யம் எஅ - வது பக்கத்தில் பரமேசுவரர்க்கு ஸகுணம் நிர்க்குணம் ஸகுண நிர்க்குணமென்னும் மூன்று திருமேனியுடையா ரென்பதாய்க் கூறியவற்றைக் குற்றமெனக் கண்டிக்கப் புகுந்து வரைந்துள்ள விஷயங்களாவன குணம் நிர்குண மிவ்விரண்டும் நம்ப சுபதி பரமேசுவரற்கு திருமேனியாயமையைப் பெற்றிருத்தலின் ஸகுண நிற்குணத்திருமேனியொன்றுடையாரென்பது வெளிப்படை- இவற்றால் பரமேசுவரரை குணமூர்த்தி என்றிடல் அடாது பிரும்மா விண்ணு உருத்திரர் ஸத்வரஜதமோ குணமூர்த்தியாதலால் உருத்திரரை குணமூர்த்தி என்றி

டல் கூடுமெனின் உருத்திரரில் குண உருத்திரர் துரீயருத்திரரென
பேதமிரண்டுடைய தாதல்பற்றித் துரீயத்வ பிரதியாத்யமுடைய
நிற்குண உருத்திரரைக் குணமெனப் பிரமிப்பது கற்றறியாமாந்தர்
செயலாம் என்று ஆதிசைவாபசதன் எழுதியிருக்கிறார் என-இவ்வ
பசதம் வறைந்திருக்கின்றது-மேலும் குணம் நிற்குண மிவ்விரண்டும்
நம்ப சுபதிபரமே சுவரருக்குத் திருமேனியாயமயப் பெற்றிருத்த
லின் என்கிற முதல்வாக்கியத்தில் குணம் குணமின்மை இவ்விரண்டு
ம் நம்ப சுபதிபரமேசுவரர்க்குத் திருமேனி என்று சொன்னான் ஸகுண
நிற்குணத்திருமேனி யொன்றுடையா ரென்றடுத்த வாக்கியத்தில்
ஸகுண மென்றால் குணமுள்ளது. நிற்குணமென்றால் குணமில்லாதது
என்றர்த்தம் திருமேனி யென்றால் சரீர மென்றர்த்தம் ஆகச்சே
குணமுள்ளதாயும் குணமில்லாததாயுமொரு திருமேனி யென்றான்.
ஓரே திருமேனியில குணமும் குணமின்மையும் ஒருக்காலும் ஸம்ப
விக்காது. முன்வாக்கியத்தில் குணமும் குணமின்மையும் திரு
மேனியென்று சொல்லி அடுத்த வாக்கியத்தில் குணமுடையதும்,
குணமின்மையுடையதும் திருமேனியென்று சொன்னவனுக்கு குண
த்துக்கும் குணமுடையதுக்கும், குணமின்மைக்கும் குணமின்மையு
டையதற்கும் வேற்றுமை கொஞ்சங்கூடத் தெறியவில்லை. பின்னும்
திருமேனிஎன்றால் சரீரம் எத்துடன் கூடிக்கொண்டிருக்கிற ஆத்மா
வுக்குச் சுகதுக்காதிக ளுண்டாகிறதோ அதற்குச் சரீரமென்று
பெயர் ஈசுவரனுக்குச் சுகதுக்கம் முதலானது கிடையாது சுக
மங்கீகரிக்கப் பட்டபோதிலும் அது நித்யம் உத்பத்தியில்லாதது
அல்லாமலும் குணத்தின் பரிணாமமாகிய தேகம் சுகதுக்காதி
களைக் குறித்து அவச்சேதகமாகுமே தவிர சுயங்குணமானது.
அவச்சேதகமாகமாட்டாது குணமின்மைக்குச் சுகதுக்காவச்சேதகத்
துவமானது ஆமைப்பால்போல் ஒருக்காலும் ஸம்பவிக்காது அவச்
சேதகமென்றால் சரீரத்தில் சேர்ந்திருந்தால்தான் ஆத்மாவுக்குச் சுக
துக்காதி யுண்டாகிறபடியால், சரீரமானது ஆத்மாவுக்குச் சுகதுக்கா
வச் சேதகமென்று சொல்லப்படுகிறது. ஆகையால் ஒருக்காலும்
ஸம்பவிக்காத ஈசுவர சரீரத்வமானது. குணம் அதினின்மைக்குச்
சொல்லப்பட்டதாய்க் கொண்டு இந்தக் காணீனனது உன்மத்தத்
துவத்தை மூடர்களுக்குந் தெரியும்படியாக வெளியாக்கிறது. என
ஏழாங்கிரஹத்தின் விக்கிரஹம் ஓலமிட்டழுகின்றது. இங்கனம்
தாருக்குமாராய் கடிதத்தை நிரப்பும் ஆபாஸ புஞ்சத்தோடு கற்றோர்

வாதிக்க-விரும்பார் இவர் நமதுஸ்வாமிகள் வெளியிட்ட வேதாகம தாரதம்யத்தில் வாஸ்தவார்த்தந் தெரியாது மயங்கிநிற்பதையறியாது ஜீவாத்மசரீரம்போலென அபார்த்தஞ்செய்ய என் புகுகின்றார். நமது ஸ்வாமிகள் வேதாகமதாரதம்யம் எஉ-வது பக்கத்தில் இதற்குக்காரணகார்யம் விளக்கியிருக்க அவற்றின் உண்மைதெரிந்துகொள்ளாது மனிதசரீரம்போலாமென இவரேனு சங்கிக்கப் புகுகின்றார்.

ஷை வேதாகம தாரதம்யம் எஉ-வது பக்கம் மச-வது வரியில் பிரும்மசரீரம் சுகதுக்கவேதனையற்றதும் முக்திக்கு வித்தாயுள்ளதுமாய்க் காணப்படுதலால் இவை அனுக்கிரஹார்த்தம் அப்பரமன் சிற்சத்திதடித்து மூர்த்தீகரித்துள்ளதாதலால் பிரும்மத்திற் கழிவு நேர்ந்தாலன்றி இச்சரீரமழியாதனவாம், எனக்கூறியிருக்கும் அருமைக்கருத்துணராது ஆகச்சே போகச்சே என வீண்வாசங்கைகளை அமைத்து இவர் அர்த்தஞ்செய்யப்புகுவதற்கு நமது ஸ்வாமிகள் இடமவைக்கவில்லை. இவர் ஈசுவரருக்கு ஸகுணசரீரம் இல்லை என்பாராயின் ஸர்வசக்தித்வம் எங்ஙனமிருக்கின்றது, ஸகுண சரீரத்வமெடுக்குந் தரமற்றதாயன்றோ முடிந்து விடும். இச்சத்திகுறைவால் பிரும்மத்திற்கு ஸர்வ சக்தித்வங்குன்றிவிடும். ஸகுண மிவற்குச்சரீரமல்லாதிருப்பின் ஸர்வ வியாபகத்வம் போய்விடும். இவற்றால் இவர்கூறிய பிரும்மஸ்வரூபத்திற்கு ஷாட்குண்ய பரிபூர்ணத்வஹானி வந்துவிடும். அணோரணீயாம் மஹதோ மஹீயாம் என்னும் சுருதி வாக்கியத்தால் அணுவுக்கு அணுவாயும் மஹத்துக்கு மஹத்தாயும், ஆத்மாக்களிடத்தில் வியாபித்திருக்கிராரென கேட்கபடுதலால் வியாப்பம் சரீரமும் வியாபகஞ் சரீரியுமன்றோ இவற்றை நோக்கியே யன்றோ கூதசங்கிதையில், ஜ்ஞாநிநா உபகாராய திரயாரூவா வூஹரூவூஹநு| ஸகுணம் நிகுணமெவ தஸூா தூகுணநிகுணம்| என்னும் வாக்கியத்தால் ஞானிகளின் உபகாரங்கருதி ஸகுணம் நிர்குணம் ஸகுண நிர்கண சரீரத்தை பிர்புவாகிய பரமேசுவரர் வகிக்கிறார் எனக் கூறியிருக்கின்றது இவ்வாறுள்ள பிரபல பிரமாணங்களைக்கடந்து மூடர்களுக்குந் தெரியும்படி வெளியிடுகிறேனென்றனர். இவர் சாஸ்திராருச்சியற்றவராதலின் மூடர்கட்கு உபதேசிக்கப்புகுந்தனற் இவர் வார்த்தையை மூடர்களும் அங்கீகரியார் இவற்றால் இங்ஙனம் அபசதன் யாரென உய்த்துணர்ந்தடங்குவாராக ஏ ஏழாங்கிரஹத்தின் அவதார விக்கி

ரஹமே. நமது ஸ்வாமிகள் வேதாகம தாரதம்யம் ௬௧-வது பக்கம் ௰-வது வரியில் தொடங்கியிருக்கும் வியவஹாரத்தை ஊகித்தறிந்தனையா தன்னைத் தவிர மற்ற யாவும் பொயென்னும் மித்தியாவாதிகளையன்றோ கண்டித்தொதுக்கி இருக்கின்றார். இதில் இவருக்கு உஷ்ணம்யாதுக்கு இவர் உஷ்ணங்கொண்டதால் இவரும் மித்தியாவாதியாகிய பிரச்சன்ன பௌத்தரே யன்றோ நமது ஸ்வாமிகள் அத்வைதமென மதப்பெயரில்லை அத்வைத பதார்த்தஞ் சிவமே யாதலால் சைவமதமே அத்வைத மென்பதாய்ச் சாதித்திருக்க இவர் வாய்தவறி நமது ஸ்வாமிகளுக்கு அத்வைதமென்றசொல் வந்துவிட்டதென சந்தோஷிக்கின்றார். அத்வைதம் இத்தனை பிறிவென்பது இவருக்குத் தெரியாது தம்மை அத்வைதி என நினைத்து இறுமாப்பெய்திக்கூறிய உரை உல்லங்கனப் பட்டொழிந்ததென்க. சிவபெருமானும் சைவஸமயிகளும் அத்வைத ரென்பதில் தடையில்லை. இவற்றால் அத்வைதமென மதங்கிடையாது சைவஸமயந்தானென சாதித்திருக்கும் அருமைநோக்காது இப்பித்தர் தலைவிரித்தாடுகிறார். ஏ பித்தரே உங்கப்பன் தஸ்தாவேஜுகளில் பிராம்மணஜாதி சிவமதம் எனக்கைச்சாத்திட்டிருக்க நீ சைவமதமேயில்லை அத்வைத மதந்தானுள்ளதென சாதிக்க வெளிவருவாயாயின் உன் தகப்பனுக்கு நீ புத்திரனல்லவா உன் பிறவியை உய்த்துணர்ந்தடங்காது சிரமுகோத்பவர்களாகிய ஆதிசைவர்களை கானீனரென தூஷிக்க முயன்றாய்.

இவ்வாதிசைவ பிராம்மணோத்பத்தி வேதாகம தாரதம்யம் ௬௫-வது பக்கத்தில் கூறியிருப்பதை இவர் உற்றுநோக்கவில்லை. அகஸ்திய ஸம்ஹிதையில் மஹாலிங்கம் ஸமப்யர்ச்ய ஶிவ ஸ்ருஷ்டாந் த்விஜோத்தமாந் । கங்காதீர ஸ்திதாந் தீராந் ஸமாஹூய மஹீபதி: । ஸித்தாந்தை: காமிகாத்யைஸ்து மஹாலிங்கம் ஸநாதநம் । ஸம்பூஜயேதி ஸம்ப்ரார்த்ய வ்ருத்திம் தேப்ய: ப்ரதாய ச । தேப்யோ க்ராமம் காரயாமாஸ மஹாவிபவ விஸ்தரை: ॥ என்னும் வாக்கியத்தால் மஹாலிங்கத்தை பூஜித்தர்பொருட்டு சிவஸிருஷ்டாளாயும் கங்கா தீரத்திலிருப்பவர்களாயுந்தீரளாயுமுள்ள ஆதிசைவத்விஜ சிரேஷ்டர்களை மஹாராஜா அழைத்து ஸித்தாந்த ரூபமான காமிகாதி சிவாகமங்களினாலே மஹாலிங்கத்திற்கு எப்பொழுதும் பூஜித்தல் வேண்டுமெனப் பிரார்த்தித்து

இந்த மஹாலிங்க பூஜையாகிய கார்யத்தை அவர்களுக்குகொடுத்து மஹாவிபவத்தால் விஸ்தாரமாயிருக்கிற இந்தக் காமிகாத்யாக மங்களினால் பூஜையைச்செய்து வந்தார்களெனக் கூறியிருத்தலால் சிவஸிருஷ்டாளான சுத்தாத்மாக்கள் காணினீயராவரோ, நீ சாஸ்திர மிருந்த ஊரிலேயே குடியிருந்தறியாய் நமது ஸ்வாமிகள் வேதாகம தாரதம்யத்தில் சருவது பக்கந் துடங்கி சளஙவது பக்கம் வரையில் காணினீயர், குண்டர், கோளகர் சேவலசர் முதலியவர் இன்னாரென பிரமாணப் பிரஸித்தமாய் விளக்கி யிருக்கின்றாராதலின் அங்ஙன நோக்கி நினதகம்பாவமடங்கிக் கிடப்பாயாக நீ வீர்வேதாகம மாகிய உண்மைநூற்றுணிபு உற்றுணர்ந்துய்யும் பெரும் பாக்கியமற்றவர் நும்மாலா சங்கிக்கப்பட்டவையாவும் நமது ஸ்வாமிகளே ஆசங்கித்து தக்கவாறு விடையளித்திருக்கின்றார்.

அதில் ஈசுவரசரீரம் ஜீவாத்ம சரீரம்போலன்று சித்ஸ்வரூப முடையதென தீர்மனித்திருக்க மனுஷ்யசரீரம்போலென நீரே புலம்பி மமதாபிமான அகந்தாபிமானமென இவ்விருதிரத்துட்பட்டு வருந்தினீர். இவையன்றி பரிணமம் அவச்சேதக வாதம்புக்கி தலை மயக்கெய்திதிரிந்தீர். திருமேனியென்றால் சரீரமென்று அர்த்தம் ஆகச்சே என்றீரே திருமேனி என்பது சரீரமென ஸர்வஸம்பிரதிபன்னமாய் தெறிந்திருக்க நீர் அர்த்தசெய்தது உமக்குத்தெறிந்து கொள்ளும் பொருட்டா, பிறர்பொருட்டா யாவருக்குந்தெரிந்திருக்கும் இச்சாமான்விஷயம் நீர் பிறற்பொருட்டுக் கூறலனுவச்யகமாம். இவை உன்பொருட்டேயாயின் திருமேனி என்றால் சரீரமென்பதை நீர் இப்பொழுதுதான் தெரிந்துகொண்டவர்போல் காணப்படுகின்றது. இதற்கு ஆகச்சே என்பதை விருதாவாய்க் கூட்டிமுடித்ததற்குக் காரணந்தெறியவில்லை, நீர் ஒரே திருமேனியில் குணமும் குணமின்மையும் ஸம்பவிக்காதென்றாய், ஏனய்யாஸம்பவிக்காது. ஆகாசமாதிய ஒரேபதார்த்தத்தில் குணமும், குணமின்மையும் பிரத்யக்ஷப் பிரமாணமாயிருக்க ஸம்பவாஸம்பவஞானம் நுமக்கில்லையென்பதிவற்றால் நன்கு புலப்படும். இக்காரணம்பற்றி நமது ஸ்வாமிகளை குணத்திற்கும் குணமுடையதற்கும், குணமின்மைக்கும், குணமின்மையுடையதற்கும் வேற்றுமை கொஞ்சங்கூடத் தெறியவில்லை என்றது இவரறியாமைகாரணமாய் நின்று வெளிவந்த உன்மத்த உறையாம். இவர் திருமேனி என்றதற்குச் சரீரமென அர்த்தங்கண்டு பிடித்த

தற்கு யாமிகுந்த ஸந்தோஷங் கொள்கிறேன். இங்ஙனமன்றி குப்பை மேனியெனக் கூறிவிட்டால் நாம்யாதுசெய்வது. இதற்கு மன்றோ நாம் வேலையற்று ஒருவறி எழுதித்துலக்கவேண்டுவதாயிருக்கும். அவ்வாறன்றி நத்தாங்கூடறிகி எழுதியதுபோல் இங்ஙனமொருவாறு ஒத்துவிட்டது. மேலுமிவர் எத்துடன் கூடிக்கொண்டிருக்கிற ஆத்மாவுக்குச சுகதுக்காதிகளுண்டாகிதோ அதற்குச்சரீரமென்றுபெயரெனக்கூறினர். இவற்கு ஆத்மா ஒன்றோ. பலவா ஒன்றெனக்கூறுவாராயின் இவரும் பிரம்மத்திற்குக் கூட்டுறவால் சரீரத்தைச் சாதித்தவராகிறார். ஆத்மா அனந்தமெனக் கூறுவாராயின், இவற்கத்வைதஹானிவந்துவிடும். இவரிங்கே தப்பிப்பிழைக்க வகையில்லை. ஏமுத்தரமே நீரிங்கனமென் செய்வீர், மேலுமிவர் ஈசுவரனுக்கு சுகதுக்க முதலானதுங் கிடையாது. சுகமங்கீகறிக்கப்பட்டபோதிலும் அது நித்யம் உத்பத்தி இல்லாதது அல்லாமலும் குணத்தின்பரிணமமாகியதேகம் சுகதுக்காதிகளைக் குறித்து அவச்சேதகமாகுமே தவிர, சுயங்கணமானது அவச்சேதகமாகமாட்டாது. குணமின்மைக்கு சுகதுக்காவச்சேதகத்வம் ஆமைப்பால்போல் ஒருக்காலும் ஸம்பவிக்காதென்றார். இவர் முதலில் ஈசுவரரெனவொரு தனிமுதலுண்டெனக்கூறினரே அவர் யார், இவர் யார் இரண்டும் வெவ்வேறெனக் கூறுவாராயின் இவற்கத்வைத ஹானிவந்துவிடும் ஒன்றெனக் கூறுவாராயின் சுகதுக்கவேதனத்மக சரீரம் பிரும்மத்திற்குண்டென்பதை இவரொப்பியவர் ஆகிரார். இவையாவும் பொய் பிரும்மந்தான் ஸத்யமெனக் கூறுவாராயின். இவற்கு முக்தி முயற்கோடாய் முடிந்துவிடும். இவரிங்கனமும் எங்கேதப்பிபிழைக்கப்போகின்றார், விளையிட்டாய் சைவஸமயிகளிடத்தா சங்கிக்கப்புகுந்து இவர் தலைக்கே ஹானிதேடிக்கொள்கின்றார். சுகதுக்கமிரண்டினுள் சுகம்மாத்திரம் நித்யமெனக்கொண்டு இதை ஈசுவரனுக்கு அங்கீகரிக்கலாமென்றார். துக்கத்தை இவ்வாரங்கிகரிக்கக்கூடாதெனவுங் கூறினர், போகட்டும் சுகத்திற்குஞ்சரீரமிருந்தாலன்றோ சுகானுபவமுண்டாகும், சரீரமோ ஆமைப்பால் போலாயின இவ்வாரிருக்க சுகத்தைமாத்திரம் நீரெவ்வாரங்கீகரித்தனை நீர் சுகத்தை யங்கீகறித்து அனுபவத்திற்கு வராதொதிங்கி நிற்பதுபோல் யாம்துக்கத்தையும் பிரும்மவிஷயத்தில் நித்யமாய் அங்கீகரித்து அனுபவத்திற்கு வாராததாய் ஒதிக்கிவைப்பதில் உமக்கென்ன ஆசேஷபம், உமக்குற்றஞாயம் எமக்கில்லாதுபோய்விடுமா, இவற்

ருல் பரமேசுவாருக்கு சுகமும் அங்கீகாரமில்லை. துக்கமும் அங்கீகாரமில்லை. சுகதுக்கவேதனாத்மகமான ஜீவாத்மாவில் அந்தர்யாமியாய் ஸர்வஸாக்ஷிகமாயிருத்தலின் தாதான்மியஸம்பந்தத்தால் சுகதுக்கானுபவவஸ் துதிருஷ்டிகோ சரமாமன்றி பிரும்மத்திற்கு சுகதுக்கானுபவமேரக்காரணமில்லை. இவற்ருல் தாதான்மிய ஸம்பந்தத்தால் அவச்சேதகத்வ முண்டாகுமென்பதில் என்னதடையிருக்கின்றது.

இங்கனம்நோக்காது கானீனனது உன்மத்தமென்றது இவர் பரத்தேரிநின்று மற்ருேரைபற்றவகை யற்றதாயின இவர் பின்னும் குணபிமானி குணசரீரமுடையாரெனத்தாமே ஆசங்கித்து இவற்றை உணருந்தரமற்று அகந்தாபிமானம் மமதாபிமானப்படு குழிவீழ்ந்து காலங்கடத்தினர். பரமேசுவர குணஞ்சித்ச்சக்தியே யாதலால் இச்சித்ஸ்வ ரூபமுடையாற்கு அகந்தை மமதை என்பதெங்ஙனம் பொருந்தும் ஆனல் இவர்வழுத்திரட்டு கச-வது பக்கத்தில் ஜீவதர்மமென முடிபொருளாக்கிக் கூறினர் இவற்றுஜீவன் மித்தையாதலால் இவ்வபிமான மிரண்டும் பிரும்மத்திற்றுற்றது வியாவஹாரிகதசையேயன்ருே, இவற்ருல் யாங்கூறும் ஜீவாத்மலக்ஷணம் வேறும் இவர் கூறும்ஜீவாத்ம லக்ஷணம் வேறுமாயிருத்தலால் எமது பிரும்மம், ஜீவதர்மப்பட்டு இழிந்தபொருளாதற்குக் காரணமில்லை. இவர் பிரும்மம் வியாவஹாரிகத்தால் ஜீவனுய் நிற்றலால் யிவராசங்கித்த விஷயதோஷங்கள் யாவும் இவர் பிரும்மத்தின் தலையிலேயே விழுந்தன, இவற்ருல் ஜீவதர்ம்மம் யாருடைய பிரும்மததிற்கு வந்ததென்பதை இவரறிந்தடங்குவாராக பின்னு மிவர் குணமூர்த்தியென்பதற்கு குணத்தையுபாதியாக வுடைத்தானவர், எனப்பொருள்விரித்தார். பரமேசுவரர் உபாதியற்ருேராதலால் குணமிவரை உபாதிசெய்யுமென்பதெங்ஙனம் பொருந்தும், இவற்ருல் ஆகச்சேயென்றது வெற்றுரையாயின மேலுமிவர், ஸத்யஞான அனந்த ஆனந்தஸ்வ ரூபபரசிவம் ஸத்வோபாதியால் ரஜோகுண பரிணாமமும்ஸத்வோ பாதியால்தமோ குணபரிணாமமும் தமோபாதியால் தமோகுண பரிணாமமும் கொண்டு பிரும்மா, விஷ்ணு உருத்திரரென பேதப்பட்டு நிற்கின்ருரெனவும், ஸாம்மியா வஸ்தாபன்ன ஸத்வரஜதமோ குணஸமுதாயாவச் சின்னராய்க்கொண்டு இம்மூவர்களுக்குங் காரணமாகிய ஈசுவர ரென்று சொல்லப் படுகிரா

ரென்றும் ஸாம்யாவஸ்தாபன்ன ஸத்வரஜதமோ குணஸமுதாயோ பகிதராய்க்கொண்டு ஸதாசிவனென்று சொல்லப்படுகிரா ரென்றும் இவர் தான் தன்னுபாதியையும், அதின் காரியமான பிரும்மா விஷ்ணு உருத்திராதி சரீரங்களையும் மற்றுமுள்ள ஸர்வதிருச்யங்களையும், பிரகாசிப்பித்துக்கொண்டு தானுமிதர நிரபேக்ஷகராக ஸதா பிரகாசித்துக்கொண்டே யிருப்பதினால் ஸாக்ஷி என்றும் சொல்லபடுகிரார். இவ்வைந்து பேர்களுந்தான் ஸத்யோஜாதாதி பஞ்ச பிரும்மங்களென்று சொல்லப்படுகிரார். இவ்வைவர்களையும் ஈசுவரனுக்கு முகங்களென்று பாசிப்பதற்காக முகங்களென்று சொல்லப்படுகிரார்களென்றும் இம்முகங்கள் மேற்கு, வடக்கு, தெற்கு. கிழக்கு திக்குனோக்கியும் ஊர்த்வத்திலு முள்ளதுமாய் சொல்லப்படுகிரதெனவும், இவ்வைந்துபேர்களும் பிரதிவ்யாதி பஞ்சபூதங்களிலுபாஸிப்பதற்காக பிரதிவ்யாதி பஞ்ச பூதோபாதர்களாய்க்கொண்டு பஞ்சகலைகளாகச் சொல்லப்படுகிரார்களென்றனர். இவர் முதலில் ஸத்வரஜதமோபரிணமங் கூறினரே, இப்பரிணமம் பிரும்மத்திற்கா இவர்க்கா. மற்றெவற்றிற்கு பிரும்மத்திற்கெனின் பரிணமவயப்பட்ட பதார்த்தம் தாமே நீக்கிக்கொள்ளத் தரமற்றதாதலின், இவை ஸர்வ ஸாக்ஷிகமான ஸதாசிவமாயிற்றென்பது குற்றமாம். பரிணம்மஸத்தாதலின் இவை பிருப்மத்திற்கு வருதலெங்கனங்கூடும். பிரும்ம விஷ்ணுருத்திர மஹேசஸதாசிவாதி லக்ஷணங்களிவற்கு அனேக ஜன்மாந்திரபரிபாக விசேஷத்தால் வறத்தக்கதேயன்றி இந்த ஒரு ஜன்மமே போதுமென்பதிவர் பரத்துக்குற்றமாம் இவர்போன்ற மந்தமதியாளரை உததேசித்தேயன்றோ நமது ஸ்வாமிகள் ஈசுவரற்கு ஸகுணம், நிர்க்குணம், ஸகுண நிற்குணமென்னும் மூன்று சரீரமும் உண்டெனச் சாதித்திருக்கின்றார். அவர்ஸாதித்துள்ள விடத்தில் பரிணமமாவது அஸத்தாவது பிரும்மத்தைப்பற்றி ஆட்டியலக்கழிக்கவகயுளதோ, பின்னுமிவர் ஸாம்மியாவஸ்தாபன்ன ஸத்வரஜதமோ குணஸமுதா யாவச்சின்னராய்க்கொண்டு யிம்மூவர்களுக்குங் காரணமாகிய ஈசுவரரென்று சொல்லப்படுகிராரென்றனர். ஸமுதாயாவச்சின்னர் இம்மூவருக்குங் காரணமாவதெப்படி காரணமென்றது,கார்யோத்பத்திக்கு குலாலன்போல் காரணமா, மண்குடமானதுபோல் காரியத்திற்குக் காரணமா, இவ்விரண்டினுள் பிரும்மங்கார்யோத்பத்திக்கு நிமித்தகாரணமும் பிரும்மஸ்வசக்தி பரிக்கிரஹசக்தியை காரியமாக்குதற்க்குக் காரணமுமாயிருத்தலால் ஸமுதாயாவச்சின்ன

காரணத்வமெங்கனம் பொருந்தும். பின்னுமிவர் ஸாம்யாவஸ்தாபன்னஸத்வரஜதமோகுண ஸமுதாயோபஹிதராய்க் கொண்டு ஸதாசிவனென்று சொல்லப்படுகிறார். இவர்தான் தன்னுபாதியையும், அதின் காரியமான பிரும்மா,விஷ்ணு ருத்திராதிசரீரங்களையும் மற்றுமுள்ள திரிச்யங்களையும் பிரகாசிப்பித்துக்கொண்டு தானுமிதர நிரபேக்ஷராகஸதா பிரகாசித்துக் கொண்டேயிருப்பதினால் ஸாக்ஷியென்று சொல்லப்படுகிறார்.

இவ்வைந்து பேர்களுந்தான் ஸத்யோஜாதாதி பஞ்சபிரும்மங்களென்று சொல்லப்படுகிறார்கள் என்றனர். இவர் இவ்வாருகூறியதற்கு பிரமாணமொன்றுங் காட்டாது வெற்றுரையால் வாய்ப்படம்பங்காட்டி மகிழ்ந்தனர். இங்ஙனங்கற்றோருக்கும் மற்றோருக்கும் மிக்க வெறுப்பைத்தரும் ஸதாசிவரானவர் தன்னுபாதியை பிரகாசப்படுத்துகிராரென்றால் இவற்குற்ற உபாதியாது. அவற்றை எவ்வாறு பிரகாசப்படுத்துகின்றனர். உபாதியுற்றோர் ஸ்வாதந்திரியராவரா, இவருபாதி பிரும்மா, விஷ்ணுருத்திராதிகார்ய சரீரங்களென்றால் இதற்குச்சரீரியார் உபாதியுற்றோன் சரீரியா, இவனுக்கன்யன் சரீரியாவனோ இவற்றால் ஸதாசிவத்தையேயன்றோ சரீரியாயிங்ஙனங்கொள்ள வேண்டிவருகின்றது உபாதிவயப்பட்டு சரீரமெடுக்கும்தொழிலுடைய ஸதாசிவத்தை ஸர்வஸாக்ஷியாகவும் ஸர்வபிரகாசகராகவுங் கொள்வதெப்படி சுருதிகளில் ஸதாசிவத்தை சின்மாத்திர விநூது ரெனபிரஸ்தாபித்திருக்கின்றபடியா லிவர் ஸதாசிவத்திற்குபாதி கூறும் உன்மத்தஉரை உல்லங்கனப்பட்டொழிந்தது. பின்னும் இப்பஞ்சமூர்த்திகளே ஈசுவரருக்கு ஸத்யோஜாதாதி ஐந்து முகங்களாய்ச் சொல்லப்படுகிரதென்றார். இவ்வாரு சொல்லியிருப்பதற்கு எந்த வேத ஆதரவுயிருக்கின்றது. சொல்லியிருக்கிரதென்றால் இவர் வெற்றுரையை யாவரொப்புவர் நம் ஸ்வாமிகள் உபநிஷத்பிரமாணங்கொண்டு பராபரவித்யா நிர்ணயஞ்செய்துள்ளதை எறிஞ்சுபோட்டவேதவாக்கியமென ஆக்ஷித்தார் இவர் உபனிஷத்தூஷகாராதுடன் பிரமாணமன்றி கூறுபவராயிருத்தலால் எருஞ்சுபோட்ட வியவஹாரமுடையார் யாவரென்பதை இவரே அறிந்தடங்குவாராக மாயாந்து ப்ரக்ருதிம்வித்யாத் மாயிநந்து மஹேஶ்வரம் என்னும் வாக்கியத்தால் மஹேசுவரரென்பவர் மாயாமயக்கமற்றவரெனக்காணப்படுதலால் இவருபாதி வசப்பட்டொழுகுத லெங்ஙனம் மஹே

சுவரரே உபாதியற்றிருக்க ஸதாசிவத்தையுபாதி வயப்படுத்தியது மிவரறியாமை காரணமாய்வந்த உன்மத்த உறையாம். இவ்வைந்து பேர்களும் ஈசுவரருக்குப் பஞ்சமுகங்களாவதெப்படி. பிரும்மா விஷ்ணு முதலியவர்களுக்கு பிரளயங் கெட்கப்படுவதால் ஸத்யோ ஜாதவாம தேவமுகங்களுக்கும் பிரளயம் வந்துவிடும். குணபரமான ருத்திரருக்கு வேதாகம புராணேதிஹாஸங்களில் ப்ரளயங் கேட்கப் படாதிருக்க இவர் வியவஹாரம் ஈசுவரருக்கே பிரளயமுண்டாகச் செய்வர்போல் காணப்படுகின்றது. பிரும்மா விஷ்ணு ருத்திரர் மஹேசுவரர் ஸதாசிவம் முதலிய ஐய்வர்களும் ஈசுவரருக்கைந்து முகங்களாயமையப் பெற்றவரென்றார். பிரும்மமுகமன்னான்கு விஷ்ணு முகம் ஒன்று ருத்திர முகம் மூன்று மகேச முகம் நான்கு ஸதாசிவ முகம் ஐந்து ஆக முகங்கள் பதினேழாகின்றதே, ஈசுவரருக்கு பதினேழு முகங்களா இவற்றை ஸத்யோஜாதாதி பிரும்ம பஞ்சகமென குறித்தற்கூடுமோ, அன்றன்று ஈசுவர முகத்திற் கதிஷ்டான தேவதைகளிவரெனின். ஆஸ்தானத்தைநோக்க அதிஷ்டான விசேஷமுடையதுபற்றி ஈசுவரரைநோக்கபிரும்மாதி தேவர்களேயன்றோ விசேஷராகிரார், இவற்றை வேதாகம புராணேதிஹாஸாதிஸத் பிரமாணமங்கீகரிக்குமோ, அங்கனமன்று ஸத்யோஜாதாதி ஐந்துமுகங்களினின்றும் இப்பஞ்சமூர்த்திகளு முண்டாயினரெனின ஈசானாதி பிரும்ம பஞ்சகத்தினின்று இவர்கள் தோற்றினரென்பதற்கு எந்த வேதவாக்கிய மிடங்கொடுக்கின்றது பிரமாண விருத்தமான வியவஹாரங்களை மேதாவியரங்கீகரியார். ஸர்வபூதங்களு மீசுவரரிடந்தோற்ற மொடுக்கங் கேட்கபடுதலால் ஈசுவரனுக்கு பஞசமுகங்களென்பதுமாறி அனந்தமுகமாயன்றோ முடிவுபெற்றிருக்கும். இங்ஙன மீசானாதி பிரும்ம பஞ்சகவியவஸ்தை மாறி விடும்.

இவற்றுளொவ்வொன்று மொவ்வொரு முகமென்பது கூடாது. இறைவன்றித் தோற்றவுமொடுக்கவும் ஸாமர்த்யமுடைய மெய்ப்பொருள்தோன்றுதல் பொருளாகாது தோன்றுதல் பொருளுக்குத் தோற்றிவைக்கும் பொருள் வேறென்பதே தீர்மானம். இவற்றால் பிரும்மாதிதேவர்கள் சிவபெருமான் ஸத்யோஜாதாதி பஞ்ச முகங்களெனக் கூறிய துணிபு துணிக்கப்பட்டது. மேலுமிவர் பிரும்மாதி ஐய்வர்களை பஞ்சபூதங்களினு பாலிப்பதற்காக பிரதிவ்வியாதி பஞ்ச பூதோபஹிதர்களாய்க்கொண்டு பஞ்சகலைகளாகச் சொல்லப்படுகிரா

ரென்றனர். இவ்வைவர்களையும் பஞ்சபூதங்களிலு பாஸிப்பதற் காக வென்றனரோ அங்ஙனம் பிரதிவியில் பிரும்மாவை மாத்திரம் உபாஸிக்கத்தக்கதா, பிரும்மாதி ஸர்வதேவ தேவதைகளையு முபாஸிக் கத்தக்கதா பிரதிவிக்கு பிரம்மா அதிதேவதையா அல்லது அந்தஸ்தா னத்திலிருப்பவரா அந்தஸ்தானத்திலிருப்பவராயின் உபாஸ்யராகார் அதிதேவதையாயின் உபாஸ்யராவர் ஸத்யோஜாதாதி பஞ்சபிரும்மங் களும் பிருதிவ்யாதிதத்வரூபியா அல்லது தத்வாதிபதியா அல்லது மூர்த்தியா அல்லது மூர்த்தீசுவாரா அல்லது தத்வேசுவரியா அல்லது மூர்த்தீசுவரியா, தத்வந்தத்வேசுவரன் தத்வேசுவரீ மூர்த்தி மூர்த்தீசு வரன் மூர்த்தீசுவரி முதலிய பேதமெப்படி ஸூத்ராதவஸ்ராஷ்ட ஸீக்ஷ திஃ ஶிவஸ்யவாஶாதூநஃ| வ்ராவிகெதுர ஜக்ஷத்ீநாம விஷ்ணு ஸாஷாத்ஸ் வாதகம் | என்னும் புராண வாக்கியத்தால் சிவபெரு மான் அஷ்டமூர்த்யாத் மகரெனக் கூறப்படுதலால் பஞ்சபூதஜடத்வ வியவஹாரத்தில் சிவபெருமான் சிரஸைநுழைத்து அச்சிரமும் அவ ர்குச் சம்மந்தமல்லாது பிரும்மா விஷ்ணு உருத்திரமஹேசுவர ஸதா சிவாதிகளாய்க் கற்பித்து பின்போய் அதுவுமற்று பஞ்சகலையாய்க் காணப்படுகிராரென்றார். பேஷ் பேஷ் நன்றாயிருக்கின்றது இது பஞ்சபாண்டவரைத் தெறியுமென நான்கு மூன்று இரண்டொன்றை குறிப்பால்க்காட்டி கீழே ஸைபரெழுதி அரித்த கதைபோலிருக் கின்றது கலாதீதம் ஶிவம் ஸாக்ஷாஜ் எனவே தாகமங்கள் உத் கோஷிக்கின்றபடியால் கலையாக ஈசுவரரைக்கூறுதல் விருத்தமன்று இதற்கு ஆகமவசனமும் எடுத்து உதஹரித்துக் காட்டுகிறோமென் றார். ஸொநாதிஶக்த ஸகொவிஜெஞயஃ வஂவ ஶாக்தாதநஃ வாவவியாதக்ஷ்ரதூ | ஸ்ருஷ்டிஸ்திதி ஸஂஹ்ருதி திரொஹா வாஃ தஅநுநுக்ரஹகரணம் ஸ்ராக்தம் ஸதொதித ஸ்ராஸ்ர என்னும் இந்த வாக்கியத்திற்கு அவர்செய்த அர்த்தமாவதுஸர்வசக்தி ஸாமான்யரூப பராசக்தியானது ஸிருஷ்டிஸ்திதி ஸம்ஹிருதி திரோ பாவானுக்கிரக லக்ஷணசக்தி விசேஷங்களாலே நிரூபிக்கப்படாநி ன்றுகொண்டு ஐந்துவிதமாக பேதத்தை அடைந்திருக்கிறது ஆகை யால் ஸர்வஜன சக்தியுபாதிகமான பரமசிவ ஸ்வரூபம் சின்மாத்தி ரம் ஸத்யோஜாத மென்றும் பாலன சக்தியுபாதிகமான பரமசிவஸ்வ ரூபம் சின்மாத்திரவாமதேவரென்றும் ஸம்ஹார சக்தியுபாதிக மான பரமசிவஸ்வரூபம் சின்மாத்திரம் அகோரரென்றும் திரோபா

வசக்தியுபாதிகமான பரமசிவஸ்வரூபம் சின்மாத்திரம் தத்புருஷ ரென்றும் அனுக்கிர சக்தியுபாதிகமான பரமசிவஸ்வரூபம் சின்மாத்திரம் ஈசானரென்றும் ஸத்தியஞான அனந்த ஆனந்தபரிபூர்ண பரசிவன் ஒருவரே, ஐந்துவிதமாக வியவஹரிக்கப்படுகின்றார் என்றனர். இவர்சுலோகார்த்தஞ் செய்வதில்மிகுந்த கெட்டிக்கார ரென்பதாய் தாமே கூறிக்கொள்ளுகின்றார். இவர் சொன்னபொருள் சுலோகத்திலில்லவேயில்லை. இது ஆகம வசனமென்றது நத்தாங்கூடரிஹியெழுதியது போலொத்திருக்கின்றது இவர்க்கு இந்த வசனத்தைக் குறித்துக்கொடுத்த சிவாகமஞ்யரேனும் இதனது அர்த்தத்தைக்குறித்துக் கொடுத்தல்கூடாதா அவருக்குமன்றே இவ்வுண்மைப்பொருள் விளங்கவில்லை சிவாகமத்தின் வாஸ்தவார்த்தம் பரிபாகிக்கு விளங்கத்தக்கதேயன்றி அபரிபாகிக்கங்கனமாதல் கஷ்டஸாத்தியமாம். இதின் வாஸ்தவார்த்தந்தான் யாதெனின், அனுதி முக்தராயுள்ளவர் பரமேசுவர ரொருவரேயென்று அறியவேண்டும். இந்த ஸத்ரூபமான பரமேசுவரருக்கு ஸிருஷ்டியாதிபஞ்ச கிருத்யத்தைச் செய்யும்பொருட்டு மந்திரமயமான அனுக்கிரஹ சரீரம் ஐந்து பிரகாரமாகின்றது என்பதிதின்பொருள். இந்த அனுக்கிரஹசரீரம் நிருபாதிகமன்று, இவற்றை ஸர்வஜன சக்தியுபாதிகமான பரமசிவமென்றரே. இங்ஙன மிவரபிப்பிராயம்யாது. ஸர்வஜன சக்தியால் பரமேசுவரருபாதியுற்று நிற்கின்றாரா, பரமேசுவர சக்தியால் ஸர்ஜனங்களு முபாதியுற்று நிற்கின்றதா, ஸர்ஜன சக்தியால் பரமேசுவரருபாதியடைந்து நிற்க்கின்றாரெனின் உபாதியுற்றோர்க்கு ஸர்வஞ்யத்வாதிஷாட்குண்யபரிபூர்ணத்வமெங்கன மிருக்கப்போகின்றது அன்றன்று பரமசிவம் ஸர்வ ஜனங்களையும் உபாதிசெய்யும்படியான சக்தியுடைவனெனின் இவர் ஸர்வகாருணிகராதலால் இவர் சக்தியால் ஜீவகாருண்யத்துவம் போய்விடும். இங்கன மிவரெங்கேதப்பி பிழைக்கப் போகின்றார் தாம் கண்டதே காக்ஷிகொண்டதே கோலமென பிரச்சன்ன பௌத்தவாதம் புக்கிவேதாகமாதி ஸத்சாஸ்திரத்திற்கு பொருளுரைக்கத் துணிந்தது. விசாரமற்றோர்க்குறு மியற்கையாம். இவற்றால் பரமேசுவரரும் அவரது சக்தியும் நிருபாதிகமென்பது தெற்றென வெளிப்படும். உபாதியுற்ற தாயின் பரமேசுவரருக்கு ஸ்வாதந்திரத்வம் போய்விடும். மேலுமிவர் ஸர்சக்திஸாமான்ய ரூபபரசக்தியானது ஸிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரதிரோபாவானுக்கிரக லக்ஷண சக்திய விசேஷங்களாலே நிரூபிக்கப்படா நின்றுகொண்டு ஐந்துவித

மாக பேதத்தை அடைந்திருக்கிற தென்றார். இங்ஙனமைந்துவித மாக பேதப்பட்டு நின்றது சக்தியா அல்லது சிவமா சிவமெனின் ஸர்சக்தி ஸாமான்யரூப பரசக்தி என்றது குற்றமாம். எல்லாஞ் சக்திவிசேஷமெனின் சிவபெருமானுக்கு கர்த்திருத்வம் போய்விடும். இங்ஙன மென்செய்வீர் இவற்றால் சக்தனையன்றி சக்திவேரன்றாதலால் சிவபெருமானே தமது சக்தியால் அருட்டிமேனி கொள்வாரென்பதிற்றடையில்லை. இவற்றாலிவர் கூறிய துர்வாதம் காலைவாரிக் கொண்டது. இக்காரணங்களை நோக்கியேயன்றோ வேதங்களில் ஸூஸெஹாஸா நஜாநாத ஷூ ஷநாயிஸ்ஹூ ஷநுக்ஷுதெ என பிரதிக்ஞை செய்திருக்கின்றது வேதாகமாந்தர்கதமான கருத்தை குருமுகமாகவே அறியத்தக்கது தாந்தோன்றிந்தம்பிரானாயாராயப்புகுதல் குற்றமென் வர்புருத்தியுங் கூறியிருக்கின்றது. பிரும்மக்ஞானமாகிய சிவஞானம் சிவஞானிகளாகிய சிவாகமஞ்யர் பாலுற்றுணர்ந்துய்யத் தக்கது. சின்மாத்திரரென மாத்திர மிவர் யாவரிடத்திலேயோ கேட்டிருக்கின்றார். இவ்விலக்கணத்திற்கு விருத்தமாய் உபாதிகபர சிவமென்றார். இவர்தான் மிகுந்த வேதாகமார்த்தந் தெறிந்தவர்போல் சப்தசாஸ்திரத்தில் மிக்க வல்லோரென தம் பெருமை பிறர்கூறி மகிழாது தாமே தம் பெருமையைக்கூறி மகிழ்வுற்று வீண்டம்பங்காட்டுகிறார். இவை பிராந்திவாதமா யொதுக்கப்பட்டது. வேதாகம அபிஞ்யராகிய நமது ஸ்வாமிகள் வரைந்துள்ள ஸத்பிரமாணார்த்தங்களுக்கு குறைகூற இவரென்ன தெறிந்துள்ளார் உபாதி பரசிவத்திற்கேற்றுந் துரர்த்தமன்றோ இவரிடங் குடிகொண்டிருக்கின்றது. இவரார்த்தத்திற் கிணங்க நமது ஸ்வாமிகளெழுதவில்லை என்னுமபிப்பிராய மிருந்தாலு மிருக்கலாம். ஸ்வாமிகள் வேதாகமவிரோதமற்ற ஸத்சாஸ்திர வாதமுடையாராதலின் இவர் எழுதியிருக்குங்கருத்தை உற்றுணராது அபார்த்தஞ்செய்து ஸந்தோஷிப்பதால் யாதுபயன்? இவர் கூறிய அர்த்தம் எந்த ஆகமிகாளிடத்தில் கற்றுணர்ந்தாரென்பது தெறியவில்லை? இவர் மேலும், ஸுவிஷ்ணூ ஸுஷ்ணூ நமெஸா ஸஶாஶிவஃ। ஷுயி ஷாஷிஷ தகெவஷ கூஊதகவாயி வாஷூதா। ஊதிய யாஹெள வாகூயிபெதகெவ கஊஹொமொ நிவதுதெ। நிவூத்திஷூ கஜாஜெஷூயா ஷூதிஷூகயூஷெ யாநா। ஶிவாமஊ நுஜூதா ஷூாவூதெ வளாஷெயயா। ஸாஷூதிஷூக

ஞாஜ்ஞயா தத்தோவித்யாநி ஶக்த்யை| ஶாயாகாயப்ரவிவேகே ந வேத்திவித்யாவஶயா| ஸாகஞா வஶாஜ்ஞயா வித்யா ஜ்ஞாந க்ரியாத்மிகா| ஶுஶாயாவிகா ரௌவ ஶாஸ்த்ரீ வஷ்மஸ: வஷ்நயபா| ஸாகஞாஶாஸ்த்ரி ஶிதந்த்ரதாஸாயி காஶாஸ்வஷம் வஷம்| ஶாஸ்த்ரீத கஞாவேத நிஷ்புராணா நஷ்வோயஷா ஜதி| என இவர் வசனமெழுதி ஆகமத்துக்கு அர்த்தமறிந்து கொள்ளாமல் நிர்குணம் ஸகுணம் குணி உருத்திரர் துரீய உருத்திரர் குண மூர்த்தி என்னும், கிளிப்பிள்ளைபோல் சப்தத்தை மாத்திரஞ் சொல்லிக்கொண்டு ஸர்வஞ்யனென்கிற அஹங்காரப் பிசாசத்தாலாக் கிரமிக்கப்பட்டு தலைசுற்றியாடுகின்ற இப்பித்தனுக்குப் பேயோட்டுவாரூர் என வசைமொழிக்காட்டி தூஷிக்க முயன்றூர்.

நமது ஸ்வாமிகள் சிவபெருமானிடத் தன் புடையோராதலா லிவர்களைப் பற்றுதலெங்ஙனம் வேதாகம ஸத்பிரமாண வாயிலாய் சிவஞான முணர்த்தும் நமது ஸ்வாமிகளை பித்தனென்கிறார் இவர் புத்திகௌசல்யம் மிக்கச் சிறப்புடைத்தே ஈசுவர விஷய ஞானஸத்வாதத்தில் பித்தும் பேயும் வருவித்துக்காட்டுவது விவேகிகளுக்கழகன்று மேலே உதகறித்துக் காட்டிய வசனத்திற்கு பொருளில்லதெனத் தெறியாதவரென்பதுவசுவால் தங்கக்ஷியைப் பூர்த்திசெய்த வைபவத்தால் விளங்கும் ப்ரஹ்மாவிஷ்ணுஶ்ச ருத்ரஶ்ச நஶைஶஶ்வஸதாஶிவ:| ப்ரஹ்மவித்யாதிஷ்ண தத்வேஷு க்ரஶாதஸ்வாயி வாஷ்ரதா| என்னும் வசனங்காட்டி பிரும்மா விஷ்ணு உருத்திரர் அனந்தேசர் ஸதாசிவம் முதலிய ஐந்து பேர்களும் பிரதிவ்யாதி தத்வாதி பர்களென்ப திவர்கருத்து ப்ரஹ்மா விஷ்ணுஶ்ச ருத்ரஶ்ச நம தேஶஶ்வஸதாஶிவ:| அணுவக்ஷ ஶிதிவ்யாதம் தத்வ ரூபே ம க்ரஶாக ஷஶேக| என்னுஞ் சிவாகம வாக்கியத்தால் பிரும்மா விஷ்ணு உருத்திரர் அநந்தேசர் ஸதாசிவர் இவர்கள் அணுபக்ஷமுடையோராதலால் இவர்களை தத்வரூபமாய் கிரமமாய் நினைத்தல் வேண்டுமெனக் கூறியிருத்தலால் இவர்கள் தத்வாதிபர்களாகார்.

ப்ரஹ்மவித்யாதி யஜஶாநாஞம் தத்வஞ்ஞேதி ஷஷ்டீத்ருதம்| ஹவாதி வஶஹேஶாஞம் தத்வஶ்வரஶஷாஞ்ரதம்|வாஶாதிவஷஶந்யாஞம் தத்வஶ்யபூ உஷாஞ்ரதம்| ப்ரஹ்மவீஶஷத்ரு ஶாஶஹ்ய யஜஶாநா ஞதோதஷரோ| ஶஷத்ருஷ்டக ஶிதிவ்யாதம் ஶஷத்ருஶஞத

தஃ ஶ்ருணு | வர்ஷாதி ஸம்ஹாரஹ்ய வஹாஞம் க்ஷேத்ரஜ்ஞ ணு | ஸப்தத்வுஷ்ணஶ்ரிதிஷ்வ்யாதம் தத்வஸப்த்த்யு ஶ்ரீம்ஶ்ருணு யாஷிகாதிஸம்ஹாரஹ்ய விஹவ்யஞ தயேஶ்ரீம் | என்னுஞ் சிவாகம வாக்கியத்தால் பிருதிவிமுதல் யஜமான மிருதியாக தத்வமெட்டெனவும் இதற்குதத்வேசுவரர் பவாதி மஹாதேவபர்யந்தமுள்ள எண்மர்களும் தத்வாதிபர்களென்றும் வாமை முதல் ஸர்பூததமனீ பர்யந்தம் தத்வேசுவரீ யெனவும் க்ஷமாமுதல் யஜமானபர்ந்தமுள்ள எட்டும் மூர்த்திகளெனவும் தத்புருஷம் முதல் கவசபர்யந்தம் மூர்த்தீசுவரரெனவும் தாரிகை முதல் விபவிபர்யந்தம் மூர்த்தீசுவரீ எனவுங் கூறியிருத்தலால் இவர் பிரும்மா விஷ்ணு உருத்திர அநந்த ஸதாசிவாதிகளை தத்வாதிபராய் கூறுதலெங்கனம் இங்கனம் பிரும்மா முதலினோர் தத்வரூபமெனவும், தத்வாதிபர் பவாதிகளென்றுந் தெற்றென விளங்கும். இவற்றால் யாருக்கும் சிவாகமார்த்தம் விளங்கவில்லை என்பதைக் கற்றோரும் மற்றோரும் மூகித்தல் வேண்டும். இதற்குமேல் வியவஹரித்துக்காட்டிய யயாஉளவாயிபு வெதசெவ என்றது முதல் நிவபூணா நதவொயஉா என்னும் வாக்கியம் வரையில் நிவர்த்தி பிரதிஷ்டை வித்தை சாந்திசாந்திய தீதம் முதலிய கலாலக்ஷணங்களைக் கூறியவிடமேயன்றி இது இவர் வாதத்திற்கானுகூல்யம்பெற்ற விடமன்றும் ஶாஞ்ஞதீத கஶா ஜெதநிவபூணா நத வொயஉா | எனக் கூறியிருத்தலால் அத்வைதம் இவர்களுக்கு சொந்தப்பொருளெனக்கருதி ஆசங்கித்தலுங்கூடும், ஆநந்தஸ்வரூபியாகிய சிவபெருமான் ஒருவரே அத்வைத ஸ்வரூபி என்னும்ஞானத்தை சாந்திதீயகலை உண்டுபண்ணுமெனக்கூறியிருத்தலால் இங்ஙனம் ஏகாத்ம வாதியாகிய கேவலாத்வைதி இவை தமக்குப் பிரமாணமென்க்கொண்டது. விட்டில் விளக்கு தமக்குணவெனக் கருதி வீழ்ந்திரத்தலை யொத்திருக்கும். இவற்றால் ஸத்யோஜாதாதி பிரம்ம பஞ்சகம் இக்கலைக்கன்ய மென்பதே தீர்மானம். இக்காரணன்னேக்காது பிரும்மா விஷ்ணு உருத்திரர் அனந்தேசர் ஸதாசிவம் முதலிய ஐய்வர்களும் பரமேசுவர பஞ்சமுகங்களாயிருக்கின்றாரென்றதும், பஞ்சகலைதான் பஞ்சமுகங்களென்றதும் விசாரசூன்யமேயாகும், இங்கனமுற்ற இவர் நமது ஸ்வாமிகளை அர்த்தந்தெறிந்து கொள்ளவில்லை என்றது குற்றமாம், நமது ஸ்வாமிகள் நிர்க்குணம், ஸகுணம், குண உருத்திரர் துரீய உருத்திரர் ஸகுண

மூர்த்தி முதலிய சிவஞானவைபவங்களை உண்மை நூலாராய்ச்சி
யுடையார் மாட்டுப்பயன் படக்கருதிவரைந்துள்ள தேயன்றி இவை
யாவும் ஒன்றுதானெனக்கூறும் அவிவேகிபரத்தனாம் இவற்றால்
அகங்கார பைசாசந்தலைசுற்றி யாரைப்பிடித்தாட்டுகிற தென்பதை
விவேகிகள் ஊகித்தறிவார்களாக, மேலுமிவர் அதப்படியிருக்க யென
வரைந்தது வெற்றுரையாயின.

இது நிற்க இவர் அத்வைதத்தை தூஷிக்கவெண்ணங்கொண்டு
யெறவல்வாங்கின இரண்டொரு வேதவாக்கியங்களுக்கு அர்த்தஞ்
சொல்லக்கருதி அவ்வேதவாக்கியத்தினருகில்செல்லும்பொழுது
தன்னை அறியாமல் திடீரென்று இவன் வாயிலிருந்து அத்வைத
மானதுவந்து குதித்தது. அதெப்படியென்றால் எத்தனையோ சொல்லி
யும் வசப்படாதலோக மாதவான ஸீதாதேவியை வசப்படுத்தக்கருதி
ஸ்ரீராமவேஷம்பூண்டு அவள் கிட்டநெருங்கின இராவணனுக்கு திடீ
லென்று அவன் கெட்டயெண்ணமெல்லாம்போய் இவர்தாயாரென்
று தோன்றி பின்சென்றுவிட்டான் ஸ்ரீராம வேஷத்திற்கே இவ்வ
ளவுமகிமையிருக்க ஸாக்ஷாத் ராமசந்திரன் தர்மாத்மா ஸத்யஸந்தன்
மஹாத்மா மஹாமஹிமையுள்ளவரென்று சொல்ல ஆக்ஷேபமென்ன
இருக்கிறது. அப்படி இவ்வாதிசைவனென்பவனிரண்டொரு வேத
வாக்கியத்தை கிரஹித்தமாத்திரத்தினு லிவன்கெட்ட யெண்ணமட
ங்கி இவன் வாயினாலேயே அத்வைதமாகியவுண்மை வெளியாச்சு
தென்றால் குருகுலவாஸாதி நியமத்துடன் ஸாங்கோபாங்கமாக வேத
ங்களை அத்தியயனஞ் செய்து குருமுகமாகவேதார்த்தமான அத்வை
தத்தையறிந்து பிரும்ம நிஷ்டாளாயிருக்கின்ற வைதிகர் மகிமையை
யாவரறிவாரென்று சொல்லவும் வேண்டுமா என்றனர் பேஷ் பேஷ்
நன்றாயிருக்கின்றது. நமதுஸ்வாமிகள் அத்வைதமதமெனத் தனிமத
மில்லை சைவமதமே அத்வைதமென்பது, சிவபெருமான் அத்வைத
ரென சுருதிகளுத்கோஷிக்கின்றபடியால் அத்வைதம் ஸ்வரூபமும்
பரமேசுவரர் ஸ்வரூபியுமாயிருத்தல்பற்றி ஸ்வரூபி ஸர்வசக்திமானாத
லால் ஸ்வரூபியை முதன்மையாகக்கொண்ட சைவமதமே அத்வைத
மென்பதாய் தெற்றென விளங்குமெனக் கூறிய அருமையை நோக்
காது இராமராவண யுத்தக்கதைப் புக்கிமயக்க உணர்ச்சியை ஸாதி
ருச்யங்காட்டினர். இங்ஙனம் ஸாதுக்கள் இராமனைப்போல் வேஷ
மெடுத்தவர்யாவர் உண்மையுணர்ந்து நிற்பவர்யாவரென்பதை அத்

யாவச்யம் ஆராய்ந்தறிவார்களாக, வேஷதாரிகள் அந்த வேஷத்தைத்
தாமென நடிப்பது வேஷமற்றோர் உண்மைக்கு விருத்தமற்றிருப்பது
இங்ஙனம் லோகமாதா வென்றதுவேதம். இது தர்மஸ்வரூபமாயுள்
ளது. தர்ம்மம் அநேகபிரகாரங்களாதலின் அவ்வவற்றிற்கு தமதபிப்
பிராயங்காட்டாது பொருள்பட்டு நிற்கும். இது அபரவித்தை என்ப
தாம்லோகமாதவாய் ஒருத்தியிருந்தால் லோகபிதாப்போலொன்றில்
லாவிடில் அமங்கலத்வமுடையதாகும் பிதா ஸ்த்ரீகள்போல் அஸ்வதந்
திரமல்லாது ஸ்வதந்திரமுடையானாதலின் பிதிருஸ்தானத்திலுள்ள
பரவித்தையாகிய சிவாகமங்கள் ஸ்வதந்திரமுடையதாம். இவைபசு
பதிபாசதிருபதார்த்த ஜன்யஞானத்தை யுணர்த்திப்பதிப்பொருள்
மசிவமே என்றும் ஆன்மாக்கள் பசுவெனவும் இப்பசுபாசப்பிணிப்
புண்டு நிற்கிறதெனவும் பாசன்னீங்கி முக்தியடைதல் வேண்டுமென
வும், பரதர்ம்ம முபதேசித்திருத்தலால், இங்ஙனமுற்ற வேதாகமக்
கருத்தை உய்த்துணரும் பரிபாகமற்றோர் யாமேபிரும்மமென பிர
மித்தெழும் அவிவேகிகளன்றோ இராவணம்போல் வேஷதாரிகளா
வார்கள் இவர்கள்பரத்தில் லோகமாதாவாகிய வேதக்கருத்தும் வே
றுபடும் சைவஸமயிகளோ பரவித்தையாகிய சிவாகமசிவஞானத்தால்
பதிப்பொருள் சிவமேயென்று துணிந்து நிற்பவராதலால் இவர்பரத்து
வேதமும் வஸ்துநிச்சயத்தில் முடிபொருளாய் நின்று நற்பயனளிக்
கும் இவற்றாலிவர்கதை யிவற்கே யிடயூறாயிற்று. இஃதன்றி யிவற்கு
அன்யபதார்த்த மின்றாதலால் இவற்கத்வைத ஞானமனாவச்யகமாம்.
இரண்டுளோர்க்கன்றோ அத்வைதஞானம், கனம்பெறும் இங்ஙனம்
நோக்காது நமது ஸ்வாமிகள் வாயிலிருந்து அத்வைதந்திடீரெனக்
குதித்ததென்றார். அத்வைத ஸ்வரூபியாகிய சிவஞானிகளினிடத்
திருந்து அத்வைதமென்னுஞ் சொல் அபூதகல்பனையாயுண்டாயின
வென பிரமித்தது பிராந்திவாதமுடையாரியற்கையே, இவற்றால்
அத்வைதஸ்வரூப விஷயஞானம் நமது குருநாதருக்கு இங்ஙனமுதித்
தது புதிதன்று.

இதுநிற்க இவர் குருகுலவாஸாதி நியமத்துடன் ஸாங்கோபாங்
கமாக வேதங்களை அத்தியயனஞ்செய்து குருமுகமாக வேதார்த்த
மான அத்வைதத்தை அறிந்து பிரும்மநிஷ்டாளா யிருக்கின்ற வைதி
கர் மஹிமையை யாவரறிவாரென்று சொல்லவும் வேண்டுமோ என்ற
னர் குருகுலவாஸாதி நியமம் ஏகான்வாதிகளாகிய கேவலாத்வைதி

களுக்கு அத்வைதஹானியன்று யாவும் பிரும்மாகாரமாயிருக்க குரு வேது சிஷ்யன்தானேது. குருமுகமாகவேதார்த்தத்தை எது அறிகிரது அறிவிப்பதுயாது, வேதம் யாரால்சொல்லப்பட்டது. இதர்க்கு அர்த்தஞ் சொல்லுபவர்யாவர் ஸர்வஞ்யசாஸ்திரத்திற்கு கிஞ்சிஞ்யர் அர்த்தஞ் சொல்லக்கூடியதோ முன்னுள்ள மஹாத்மாக்களுக்கே வேதார்த்தந்தெறியாது மயங்கி சிவபெருமான் அருளினரென சூதஸம்ஹிதை முதலியபிரமாணங்கள் கூறுவதால் சிவபெருமானையன்றி வேதார்த்தஞ் செய்தற்குறியார் யாவருளர், அத்வைதத்தை அறிந்து என்றீரே, அத்வைதமென்பது யாது அறிபவர்யார், பிரும்மநிஷ்டாளாயிருக்கிர வைதிகர் என்றீரே நிஷ்டாளார், நிஷ்டை எது. இங்கனம் யாவுமிவரே சான்மவாதத்திற்கிழுக்காயிருத்தலினிவற்றிற்கு பகிமை என்பதுமாத்திரம் ஸத்யப்பொருளாதலெங்ஙும் இவற்றுலிவற்பரத்து வைதிகமென்பது மித்யைப்பொருளாம் இவை ஸத்யமாயிருப்பவர்கன்றோ வைதிகமஹிமையும் உண்மைப்பொருளாம். இங்ஙனமற்றதாலன்றோ வேதத்தை இரவல்வாங்கினதென்றார், சிவாகமநிஷ்ட சிவஞானிகளுக்கு வேதஞ்சொந்தப் பொருளாயிருக்க எறவல்யாதுக்கு, சிவபெருமானோடு அன்பரையும் ஸமமெனக்கூறும் பிராந்திவாதமுடையாற்கன்றோ இரவல்வாங்குதல் ஆவச்யகமாம், சிவபெருமான் அத்வைதஸ்வரூபி என்ற நமதுஸ்வாமிகள் வேதமிரல்வாங்கவேண்டுவதவச்யமில்லை. சைவத்தையன்றி அத்வைதமென ஒரு மதமிருக்கிறதென நிரூபிக்க வெளிவருவாரிது விஷயத்தில் இரவல் வாங்கவேண்டுவதுதான். ஆனால் நாம் சைவஸமயிகளாதலால் எம் மதஸ்தர் அவற்குற்றபிரமாணங்கூறினும், அவற்றை அப்பிராமாண்யமென ஒதுக்கவிரும்போம், அவ்வவகாரியகாரணம் நோக்கி பதார்த்தநிர்ணயத்தில் பின்னிடும் ஸாமான்யசாஸ்திரங்களை பூர்வபக்ஷமாக்கி முர்ப்பட்டு நிர்பந்த கைப்பற்றுதல் சைவஸமயிக்குற்ற கடமையாம். இதுவிஷயத்தில் இரவல்வாங்கியாவது சிவனையன்றி அத்வைதஸ்வரூபி வேறொன்றுளதெனக்காட்ட வெளிவரட்டும் பார்ப்போம். அங்ஙனமன்றோ இவர் ஸாமர்த்தியம் விளக்குதல் வேண்டும். வீணே வாசாலம்பனஞ் செய்வதால் யாது பயன் ஸ்வாமிகள் வாதமினத்தென்பதிவரின்று மூஹித்தறிந்திலர் கடிதத்தில் மய்தீட்டுவது கடமை என்றதைக் கைக்கொண்டவராயினர் அந்தோ அனியாய மனியாயம் மேதாவியர்கிவர் வாதமறுவறுப்பைத்தரும் இது நிற்க மேலுமிவர்கூறியுள்ளதை வருவித்துக்காட்டி ஆங்குறுமாசங்கையை பரிகரித்

தொத்துக்குவோமாக இவர்வறைந்துள்ள விஷயங்களாவன இவன் துரீயத்வ பிரதிபாத்யமுடைய நிற்குண உருத்திரரை குணமெனப் பிரமிப்பது கற்றறியாமாந்தர் செயலாமென்று பெழுதியிருக்கிறான். யாராகிலும் நிற்குணவஸ்துவைகுணமென்று இம்மூடந்தவிர வேறொருவன் சொல்லுவனோ, ஒருக்கால் ப்ரமத்தால் ஸகுணமென்று இந்த மூடனைப்போலொத்தவன் சொன்னாலுஞ் சொல்லுவன், குணமென்றுருபித்தனுஞ் சொல்லான். தர்மதர்மிபேதஞான மில்லாதவனாய் முன்பின் விரோதந் தெறியாதவனாய் ஸம்ஸ்கிருத ஸம்ஸ்காரலேசங்கூட யில்லாதவனாய், அளவில்லாவபசப்தங்களைச் சொல்லிக்கொண்டு ஆகமத்தினருகாமையில்கூட அண்ட அனர்கனாய், ஆகமபராங்கதனென்ற பிமானமுள்ளவனாய்த் தாருமாருக உளருகின்றயிவன் தன்னுடைய கற்றறியாத்தன்மையை பிரத்தியார் பேரிலாரோபிக்கிறான். இதுவானது தந்தோஷங்களை பிரிடத்தாரோபிக்கின்ற துஷ்டர்களுக்குறியது. இந்த அஞ்ஞாதகுல கோத்திரனை பாமதடியன் குடியனோ, வெறியனோ பூதமா, பிரேதமா, பிசாசமா இன்னுமென்று சொல்ல இதுவரையில் ஒருவருக்குந் தெறியவில்லை. இந்தக் கொறைக்கொள்ளிவாயன் மதகண்டனஞ் செய்யப்புறப்பட்டு கொள்ளிவாய்ப்பிசாசம்போல் கூத்தாடுகிறான். இந்த நருதமன் உளருபடியை யூகித்துக் கேளுங்கள் அத்வைதத்தை தூஷிப்போமென்றெண்ணங்கொண்டு தன்மதத்தை நிரூபிக்க வேதவாக்கியத்திற்கற்த்தஞ் சொல்ல ஆரம்பித்து அத்வைதத்தை ஸ்தாபித்தான். எப்படிஎன்றால் உருத்திரரைத்தவிர இரண்டாவதுகிடையாது ஆகையால் வேதாந்திகளிந் தர்த்தை யூகித்தறியாதவர்களென்று பிதற்றுகிறான். அத்வைதிகள் மதமே இதல்லவா, உருத்திரரைத்தவிர இரண்டாவது கிடையாது. உருத்திரன்தான் பிரும்மாவென்றும், விஷ்ணுவென்றும், சிவனென்றும், பிரும்மமென்றும் அனேக சப்தங்களினால் வியவஹரிக்கப்படுகின்றார். எனவறைந்துள்ளதோடும், இவையாவும் ஒன்றென்பதற்கு பிரமாணமாய் விஷ்ணு புராணத்தையும், சூதசங்கிதையும் பிரமாணமாக்கிக் கூறினற். முதலிலிவர் நமதுஸ்வாமிகள் துரிய பிரதிபாத்யமுடைய நிற்குண உருத்திரரை குணமெனப் பிரமிப்பது கற்றறியாமாந்தர் செயலென்றதைக் கண்டிக்கப்புகுந்தார். அங்கனங் குணமென்றது ஸகுணமென ஊகித்தல் வேண்டும். இதனால் துரீயரை ஸகுணமென்பதாய் ப்ரமித்தல் குற்றமென்பதவர்கருத்தாயிற்று இதற்கிவர்யாராகிலும் நிற்குணவஸ்துவை குணமென்று இம்

மூடந்தவிர வேறொருவன் சொல்லுவானு என்றனற். பரமேசுவரர் ஸர்வசக்தியுடையவராதலின் ஸகுணம், நிற்குணம், ஸகுணநிற்குணமென்னும் மூன்று திருமேனியுடையாரென்பது வேதாகமமற்றுணிபாதலால் அவற்றையிவர்பரத்து அனுமானத்தாலும் யாம் முன்னெடுத்து சாதித்திருக்கின்றேன். பரமேசுவரசரீரம் ஸகுணமும் அருட்ச்சக்திமத்தாயுள்ளது, ஸகுணநிற்குணமும் அருட்ச்சக்திமத்தாயுள்ளது. நிற்குணமும் அருளுருவாயுள்ளது. இவற்றால் பரமேச்வரசரீரம் ஜீவான்மசரீரம்போலுள்ளதன்று. பிரும்மா, விஷ்ணு உருத்திரபர்யந்தம் ஸகுணமாயிருத்தலால் ஸகுணஉருத்திரர் துரீயஉருத்திரர் எனபேதமிரண்டுளதாகும் இஃர்வாசாலம்பனமாய் நிற்குணவஸ்துவை குணமென்று யாராவது சொல்லுவாரா என்றும் அத்வைதிகள் மதமே இதுவெனவும் உருத்திரரைத்தவி இரண்டாவது கிடையாது உருத்திரந்தான் பிரும்மாவென்றும், விஷ்ணுவென்றும், சிவனென்றும், பிரும்மமென்றும் அனேகசப்தங்களினுல் வியவஹரிக்கப்படுகிராரென்றும் இவரீண்டெடுத்து வியவஹரிக்கும் வியவஹாரம் ஸகுண உருத்திரருக்கும் நிற்குண உருத்திரருக்கும் பேதந்தெறியாது கூறும் விவாதமுடையாரென்பது அறிவுடையோர் யாவருக்கும் நன்குவிளங்கும் இவர் சாஸ்திரங்களில் மிக்கவல்லோராய் பிறர்கூறாது தாமே கூறிக்கொண்டு தற்புகழ்ச்சி செய்கின்றார். உருத்திரரைத் தவிர இரண்டாவதில்லை எனக்கூறிய வேதவாக்கியத்திற்கு ஜகஜ்ஜீவர்களை இல்லை எனக்கூற வெளிவந்து பிரும்ம, விஷ்ணு, உருத்திர் முதலியவர்களையும் பரமேசுவரரையும் ஒன்றுபடுத்திக்கூற விசைந்தார்.

இது வேதாகமாதி பிரமணங்களுக்குமுற்றும் விரோதமாம். இவரைமாத்திர மிங்கனன்னீக்கிக்கொண்டதற்குக் காரணம்யாதோ வஊதாவஹொவெவஶ வொஜிவாஉஷ்ரு ஶ்ரு தாஷாஉஷ்ரு தவூஷ்ஷ்ஷவஶ௦ நாஉயிவதிஃ ஜூாகவாஜெவஂ ஶவஃவாவெஃ வஶ்ஹணிஃ க்ஷீணெஃ க்ஷெமெஜஃநூ ஷதஶ்வஃஶூணிஃ உஜூாநிஉஃ உநாஸாஶாஸு வாஶஂஉஹதி வஷ்லூதஃ என்னுஞ் சுருதிவாக்கியத்தால் த்விபாதசதுஷ்பாத பிராணிகள் பசுக்களென்றும், அப்பசுக்களுக்கு பதிபாமேசுவரரென்றும் இப்பரமேசுவரரை அறிந்தவர்கள் எல்லாபாபங்களினின்றுநீங்கி ஜன்மமிருத்யு

வைக்கடந்து பரமமுக்தி யடைவரென்றும் இந்த சிவஞான விசாரத்தால் சிவபக்தர்கள் பாசத்தை தகிக்கிராரெனவுங் கூறியிருத்தலால் பசு, பதி, பாச, மென்னுந் திருபதார்த்தஜன்ய சிவஞானமேயன்றே வேதாகமங்களால் கூறியுள்ளது. இவ்வுண்மை நீற்றுயாவுமொன்றெனக்கூறும் ஏகான்மவாதிஸகுணம் நிற்குணமென்னும் பேதமுணர்ந்து நிற்பதெங்ஙனங்கூடும். யோதேவாநாம் ப்ரதமம் புரஸ்தாத்விஸ்வாதிகோ ருத்ரோமஹர்ஷி: ஹிரண்யகர்ப்பம் பஸ்யதி ஜாயமாநம் என்னும் சுருதிவாக்கியத்தால் பிரும்மாமுதலிய ஸர்வபிரபஞ்ச ஸிருஷ்டிகளுக்கு பரமேசுவரர்காரணரெனத் தெறியவருவதால் பிரும்மாவேதுரீய உருத்திரர் என்றது வேதமறியாதோர் செயலேயாகும் ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே காரணம் என்னும் சுருதிவாக்கியத்தால் பிரும்மா, விஷ்ணு முதலியவர்கள் பரமேசுவரராலுண்டாக்கப்பட்டவர்கள் இவர்கள் ஜகத்காரணர்களாகாரெனக் கூறியிருத்தலால் விஷ்ணுவே பரமேசுவரரென்றதும் வேதமறியாதோர் மயக்கவுணர்ச்சியாம் இவ்வாருள்ளஞாயம்பலவுளவற்றை விரிவஞ்சி விடுத்தோம் இங்ஙனமுற்ற வுண்மைகளைச் சிறிதும்முற்று நோக்காது ஸர்வோத்பத்திகாரணமாயுள்ள சிவபெருமானையும், அவராலுண்டாகிய பிரும்ம, விஷ்ணு முதலாகியவர்களை ஒன்றெனக் கூறும் வாதிகளுக்கன்றே, இவர் கூறியுள்ள தூஷணங்கள்யாவும் பொருந்தும், சிவாச்சார்ய ஸ்வாமிகள்பாலிவற்றைப் பொருத்த நினைந்தது பொருந்தா விஷயமாம். இவற்றால் ஸம்ஸ்கிருதபாஷையில் தாமே வல்லவராய் தற்புகழ்ச்சி கூறியது விவேகிகள் கொள்ளத்தக்கதன்று இவர்பின்னும் நாராயண மஹாதேவாதி சப்தங்களில் வஸ்து ஒன்றுதானெனக் கூறியதையாம் முன்னெடுத்துக் கண்டித்துள்ள விஷயமாதலின் மீண்டுங்கண்டிப்பதனு வச்யகமாம் மேலுமிவர் காரியகாரண பிரும்மவாதங்கூறி இவ்விரண்டையும் ஒன்றுக்க விரும்பினற். இவர் கூறியஞாயத்தாலேயே இவ்விரண்டும் வேரெனக்காட்டிக்கண்டிக்கப் புகுவோமாக, பதினண்புராணங்களிலும், உபபுராணங்களிலும், சிவபுராணங்களில் விஷ்ணுவுக்கு ஜீவதர்மஞ் சொல்வதால் சிவபுராணங்களிலுள்ள விஷ்ணுநாராயணுதி சப்தங்களுக்கு காற்யபிரும்மம் அர்த்தம் சிவமஹாதேவாதி சப்தங்களுக்குக் காரணபிரும்மம் அர்த்தம். விஷ்ணு புராணங்களில் சிவனுக்கு ஜீவதர்மஞ்சொல்வது விஷ்ணுபுராணங்களிலுள்ள சிவமஹா தேவாதி

சப்தங்களுக்கு காரியபிரும்மம் அர்த்தம். விஷ்ணுநாராயணாதி சப் தங்களுக்கு காரணபிரும்மமர்த்தம், கார்யபிரும்மத்தைவிட்டு காரண பிரும்மம் உபாஸிக்கத்தக்கதென தாத்பர்யமாகிறதென்றார். ஒரு வஸ்துவுக்கே காரியங்காரணமென இரண்டவஸ்தை வருதல்கூடு மோ. மண்ணாகிய காரணம் கடமாகிய காரியம்போல் வருதல்கூடு மெனின் மண்ணும் அசேதனம் அவற்றில் தோற்றியகடமாகிய காரி யமும் மசேதனம். இவற்றால் கடோத்பத்திக்கு சேதனமாகிய குலா லம்போல் நிமித்த காரணமாகாது. மண் துணைக்காரணமாய் நின்று விடும். சிவபுராணங்களினால் விஷ்ணுவுக்கு காற்யபிரும்மத்வத்தை யும், விஷ்ணுபுராணங்களினால் சிவனுக்கு காற்ய பிருமமத்வத்தையும் சாதித்தீர் காரியபிரும்மத்தை நீக்கி காரண பிரும்மத்தை உபாஸித் தல் வேண்டுமெனவும் தாத்பர்யம் விளக்கினீற். சிவவிஷ்ணுவாதி இருவர்களும், காரியபிரும்மமேயன்றி காரணபிரும்மமாகா ரென்பதி வற்றாலேர்படுகின்றது. காரணபிரும்மத்தை உபாஸித்தல் வேண்டு மெனதாத்பர்ய மிருத்தலால் இது இவ்விரண்டிற்கும் அன்யமென்ப திவர் தீர்மானம் அதுதான் பிரும்மம். அந்த பிரும்மந்தான் சிவ விஷ்ணுவாதிகளைக் காரியத்திற்குக் கொண்டுவருகிறது. அதையே பிரும்ம நிஷ்டர்கள் உபாஸித்தல்வேண்டுமென வியவஹரிக்க வெளி வருவார்போல் காணப்படுகின்றது.

இவர் இங்கனங்கூறுவதற்கு பிரமாணமொன்றும் விளக்கவில்லை. இவர்பொருட்டியாம் பிரமாணமெடுத்தாள்வதனவச்யகமாம். மற்று மிவற்றின் வாஸ்தவார்த்தந்தான் யாதெனின் சிவபுராணங்களில் விஷ் ணுவுக்கு ஜீவதர்மங்கூறியுள்ளது மூலபூதராகிய விஷ்ணுவுக்கேயென் றும் விஷ்ணுபுராணங்களில் உருத்திரருக்குக் கூறியுள்ள ஜீவதற்ம மானது ஸகுண உருத்திரபரமாமன்றி சிவபரமாகாதெனவுங் கண்டி த்திருப்பதால் காரியபிரும்மகாரண பிரும்மவாதமிங்கன. முபஜீ வித்திருத்தற்கிடமில்லை. பிரும்ம மொன்றாயிருப்பதால் அதற்கு காரியபரிணமம் வருதலஸங்கதமாம் ஒன்றாயுள்ள பிரும்மம்பரிணம மடையுமாயின் அகண்டங்கெட்டு கண்டப்பொருளாயன்றோ போய் விடும். இவ்வாதிக்கு ஜீவஜகதீசுவரரென்னும் முப்பொருளும் உண் மைப்பொருளன்றும், இவற்றால் முக்திவிசார மிவருபதேசிக்க முந்தி னது விச்சாரணைக்குறைவாம். இவர்களையே நமதுஸ்வாமிகள் ஏகான் மவாதியென்றும் பிம்பபிரதிபிம்பவாதி என்றும், பரிணமவாதியென்

றும், மாயாவாதியென்றும், பிரச்சன்ன பௌத்தவாதியென்றும் பல வாறுய்க்காரணப் பெயர்சூட்டி அவராசங்கபை வருவித்துக்காட்டிக்கண்டித்து வேதாகமமற்றுணிபு நன்கு போதித்துள்ளாராதலின் பந்தலில் நுழையாதே என்றுலிலை பீத்தலென்பார்போல் திரும்பவிவர்விவாதம் ஆபாஸப் படுகுழிவீழ்ந்து தத்தளிக்கின்றது. ஏகான்ம வாதத்தைநாட்ட வெளிவருமொருவர் சைவ வைஷ்ணவமதம்புக்கிக் காலங்கடத்துவதுயாதுக்கு சைவவைஷ்ணவர்களிருவரும் ஆஸ்திகரேயாதலால் பரத்வ நிரூபணத்திலும் முக்திதாரதம்யத்திலும் வேறுபட்ட வியவஹாரிகள் இவற்றுல் ஜகஜ்ஜீவேசுவரரென்னும் முப்பொருளுரு மித்தையென இவ்விருவர்களுரு கூறுர். இவ்வேகான்மவாதிகள் சைவஸமயம் வியவஹரித்தாலும் நமது ஸமயிகள் சைவரென அங்கீகரியார் வைஷ்ணவரும் தம் மதஸ்தராக்க விசையார் அவ்வவஸமய ஸம்ஸ்காரம் பெற்றோர்க்கன்றே அம்மதஸ்தராதல்கூடும். இவர் விஷ்ணுபரத்வஞ் சொல்லவந்தவர்போல் வெளிவந்து விஷ்ணுவுக்கு காரியபிரும்மத்வஞ் சாதித்தது வைஷ்ணவருக்கனுகூலமோ பேஷ், பேஷ், நன்றுயிருக்கின்றது இவர் விஷ்ணுபுராணத்தையும் சூதசங்கிதையு மொன்றுக்கி தாத்பரியம் விளக்கியது விந்தையே தாருக்குமாறுய் துராஹங்காரத்தால் திட்டுவதை கற்காக்கயவர்க் கற்ப்பிதமாயொதுப்பட்டது. இவர்தாங்கொண்ட ஏகான்மவாதமாகிய கேவலாத்வைதத்தை நாட்டவலுவுளோராயின் நமதுஸ்வாமிகள் நிக்கிரஹித்திருக்கும் பூர்வபக்ஷங்களைக் கண்டித்து இவர் ஸ்வமதமாகிய ஏகான்மவாதத்தையன்றே நிலை நாட்டுதல்வேண்டும். அத்வைதிகளெல்லோருந் துரீய உருத்திரபிரதிபாத்யரென்றூர். பின்போயிவர் இந்த உருத்திரர்காரிய உருத்திரரென்றூர். இதற்க்கன்யங்காரண மொன்றுளதென வியவஹரித்து வருகின்றூர். இவ்வியவஹாரம் முன்னொடுபின்முரணி நிற்க்கின்றதென்பதை யிவரின்று மூகித்தறிந்திலர் வாசாலம்பனமாய் ஸகல கலையுங்கற்றவரென்பதாய் பயமுருத்துகின்றூர். பனங்காட்டு நரி சிலுசிலுப்புக்கஞ்சுமோ வென்னும் பழைமொழிபோல் உண்மைப் பொருளுணர் வுடையார் இவர் பயத்தை யொருபொருட்டாய் நினையார். பிரமாணமற்ற வெற்றுறைக்குபார்தானஞ்சுவர் ஒருவர்விசகு நாங்கோடி வசவுவய்யும்படியாயிவர் வியவஹாரமிடந் தருகின்றது. கற்றறிந்தோரங்கன மிறகேந்தத் துணியார். பின்னுமிவர் நமதுஸ்வாமிக்ள்மேல் குறைகூறியதாவது, ஸர்வோத்கருஷ்டர் உருத்திர

ரென அர்த்தமிருக்க விசுவத்தை அதிக்கிரமித்தவர் என்றெழுதியது தப்பெனக் கூறுகின்றார் அதிக சப்தத்திற்மேலெனைப் பொருளாதல் பற்றி அதிக்கிரமித்துள்ளவரென்பது தப்பன்று எவ்வாராயினுமாகுக இங்ஙன மிரண்டர்த்தத்தினுலும் உருத்திரபரத்வத்திற்கு ஹானியுண்டா இவர்கூறியவாறு விசேஷரெனப் பொருள்கொள்வோமாயின் ஸாஜாத்யப்பொருளாய்விடும் விசுவவிசேஷர் என்பதைநோக்க விசுவத்தைக்கடந்தவர் என்பது விசேஷார்த்தமாகும் இவற்றுல் வேதார்த்தம் வேதவியாஸராலும் ரிஷிகளாலும் இவர்போன்ற காவ்யவியாகரணவித்பத்தியுடையவராலும் செய்யத்தக்கதன்று வேதமோ ஸர்வஞ்யனுல் கூறியுள்ள மெய்நூல் இதற்குகிஞ்சிஞ்பர்களாகிய தேவதைகளாலும், ரிஷிகளாலும் கூறியுள்ளது அர்த்தமாகா அனேகதேவதைகளுக்கும் ரிஷிகளுக்கும் வேதார்த்தத்தில் ஸந்தேகம் ஜனித்துபரமேசுவரரே ஈசானவிஷயஞானத்தால் நிவிர்த்தி செய்கின்றரெனபிரமாண முகத்தால் தெறியவருவதால் பசுபதிபரமேசுவரர் திருவாய்மலர்ந்தருளிய வேதார்த்தவிரோதமாய் இவர்கு வியுஷ்டார்த்தகாவ்யவித்பத்தி செல்லுதலெங்கனம், இதுகாரிய பிரும்மங்காரணபிரும்மமென்னுங் கதைபோலாயிற்று இவற்றுல் படிக்காதமுட்டாளென்னும் அகம்பாவச்சொல் யாருக்கென்பதை விவேகிகளுகித்தறிவார்களாக.

இதுவுமன்றி ஸ்வர்க்கலோகமானது ஜோதிஸ்வினுலே வியாபிக்கப்பட்டிருக்கிறதென அர்த்தமிருக்க ஸ்வர்க்கலோகமானது ஜோதிஸ்ரூபமாயிருக்கிறதென்று நமதுஸ்வாமிகள் சொன்னூராம். இதினுல் சப்தார்த்தம் இவற்கு வித்யாஸப்பட்டுப்போச்சுதாம். இங்ஙனம் நமதுஸ்வாமிகள் பதவுறை கூறியிருக்கின்றரா, அபிப்பிராயங் கூறியிருக்கின்றரா இவ்விரண்டையு முற்றுணருந்தரமற்ற விவர்சப்தார்த்தவித்யாஸமெனக் கூறுவதெப்படி சப்தத்தின்மேல் அர்த்தஞ்சொன்னுலன்றே சப்தார்த்தத்தை ஆராய்ச்சிசெய்தல்வேண்டும் வேதாகமங்கள் சப்தசாஸ்திராதிகளை அபரமெனக்கழித்து பூர்வபக்ஷமாக்கியிருத்தலால் இப்பூர்பக்ஷம் சித்தாந்த சாஸ்திரத்திர்க்கு முன்னெங்கனே தலைநீட்டிவாழ்தற்குறியது. இங்கனம் ஸ்வர்க்கலோகத்தில் பரமேசுவரர் வியாபித்திருக்கிறார் எதினுல் வியாபித்திருக்கிறார் ஜ்யோதிஸ்வரூபத்தால் வியாபித்திருக்கின்றரென்னும் அர்த்தபுஷ்டி தோன்றுமாறு ஜோதிஸ்ஸைஸ்வரூபமெனவும் இந்த ஸ்வரூபமய

மாய் ஸ்வர்க்கலோக மிருக்கின்றதெனவும் கூறியுள்ள அருமை நோக்காது பன்னாடைபோல் ஸாரத்தைநீக்கி அஸாரத்தைக் கைப்பற்றுவது விவேகிகளுக்கு அழகாமா இவ்விருதிரத்தாலுமிவர் கக்ஷிக்கனுகூலம்பாதிருக்கின்றது. இவரோகான்மவாதத்திற்கு ஸ்வர்க்கலோக பிரஸ்தாபமிழுக்கன்றோ பதார்த்தம பிரும்மத்தைத்தவிர வேறொன்றில்லாதிருப்பதுபற்றி ஸ்வர்க்கலோக மொன்றிருப்பதாய்க் கூறியுள்ள வேதவாக்கிவற்குப் பொய்யேயன்றோ இங்குருமாசங்கைக்கிவரென்ன விடையளித்திருக்கின்றூர் நமதுஸ்வாமிகள் கேழ்வையின்னதென வூகித்தறியாதிவர் சப்தார்த்தந் தெறிந்தவர்போல் பிரஸ்தாபித்துக்கொள்வதெப்படி, ஆசங்கைதெறிந்தாலன்றோ சப்தஜாலத்தால் தக்கவாறு பொருள்விகற்பமுருமாறு மாற்றுதலுங்கூடும் ஆசங்கையின்னதென உய்த்துணருந்திரமற்ற விவரெங்கனம் போயினுவாதத்திற்கனுகூலமாவதெப்படி. இங்கனமுற்றுணர்ந்தடங்காது விருதாநிந்தாவசனங்களால் தங்கக்ஷி ஜயித்துவிட்டதாய்க் கிதத்தை நிரப்பி ஸந்தோஷித்தார். இன்னிந்தை வசனங்கள் யாவுமவிவேகிக்கற்பிதமாயொதுக்கப்பட்டது. இதுநிற்க,

ஈமஈநு ஈவ்ருஷுநு என்கிர சப்தங்களுக்கு போகிரார்கள் பிரசினிக்கிரார்கள் என்று நமது குருநாதர் அர்த்தஞ்சொன்னூராம். இந்த சப்தத்தைக்காட்டி நமதுஸ்வாமிகள் ஓரிடத்திலும் அர்த்தஞ்சொன்னதில்லை. அவர்கள்சொன்ன அர்த்தத்தில் விகற்பார்த்தத்யோதகமாய் சப்தத்தை நோக்கியிவர் பிரமித்திருக்கலாம். இங்கனமிவர்க்குற்ற பிராந்தி பரிபாககாலத்தில் நீக்கப்படும் பின்னுமிவர் உருத்திரனைத் தவிர இரண்டாவது கிடையாது உருத்திரர் விசுவத்தையதிக்கிரமித்துள்ளவர் ஸ்வர்க்கலோகமானது. ஜ்யோதிஸ்வரூபமாயுள்ளது எல்லாதேவர்களும் ஸ்வர்க்கலோகத்தை யடைகின்றூர்கள். அந்ததேவர்கள் உருத்திரனை பிரச்னிக்கிரார்கள். என்பதினால் துரீயாதீதஸ்தானமாகின்றது. என நமதுஸ்வாமிகள் வியவஹரித்துள்ளவிடத்தின் மஹிமைநோக்காது பரிஹாஸஞ்செய்யப் புரப்பட்டார். இங்கனம் ஸத்வரஜதமோ குணபர்யந்தம் ஸகுணமாகவும், அதற்குமேல் நிற்குணமாகவும் வேதாகமங்கள் கூறியிருப்பதால் குணஉருத்திரர்துரீய உருத்திரர்யென பேதமிறண்டுடைய தென்பதுகாட்டி துரியரும் துரியாதீதரும் பரசிவமென்பதாய் நிரூபித்துள்ளவிடத்தில் இவர் குவிருஷ்டார்த்த கல்பனம் எங்ஙனமே ருதற்குறியது. இவ

றாற்றுநோக்காது தப்பபிப்பிராயங்கொண்டு விருதாகண்டக்ஷேபஞ் செய்வதால் யாதுபயன். இங்ஙன முமிவர்சப்தார்த்த ஆருய்ச்சி பயன்பட்டதின்று இவற்ருலுமிவர் நிந்தாவசனங்களை மூர்க்கறக் கற்பிதமா யொதுக்கப்பட்டது. பின்னுமிவர் ஆகமாக்யகிரேர்மத்யாத் அம்ருதம் ப்ரஸ்ரவத்யஹோ என்னும் சங்கரஸம்ஹிதை சுலோகார்த்தம் சிவாகமமாகிய கிரிமத்தியத்திலிருந்து அமிருதம்பிர வாஹித்துள்ளதெனக் கேட்கப்படுவதால் அதினின்று கொஞ்சமெடுத்து புராணங்களைச் சொல்லுகிறேனென நமதுஸ்வாமிகள் கூறியுள்ள கருத்தைக் கண்டிக்கப்புகுந்து ஆகமபதத்திற்கு வேதம் அர்த்தம் அமிருதபதத்திற்கு மோக்ஷமர்த்தம் பிரவஹிருவதி என்ருல் பிரவாகிக்கிறதென்றர்த்தம் வேதத்திற்குள்ளே மோக்ஷமிருக்கிறது. அதில் கொஞ்சமெடுத்து இந்த ஸ்காந்தம் பண்ணினேனென்றதால் வேதத்திலுள்ள பூர்ணமான அமிருதத்தையடைய புராணத்திலுள்ள ஸ்வர்பஅமிருதமானது ஸாதனமென்றேற்படுகிறதென அர்த்தங்கூறி மகிழ்ந்தார். சங்கரஸம்ஹிதையிவர் தலைமுறையிலேயும் பார்த்தறியாதவரென்பது அர்த்தத்தால் புலப்பட்டுநிற்கின்றது. யதா ஶாஸ்த்ரேஷு வேதேஷு விஶ்வாதிக உமாபதி: | பரேஶ: பரம: ஸாக்ஷாச்ச பதி: பாஶவிமோசக: | பரம்ப்ரஹ்ம பரந்தாம பரஞ்ஜ்யோதிரநாவ்ருதம் | ஶுபம் ஶுபாநாஞ்ச பாவநாநாஞ்ச பாவநம் | ஸர்வமங்கலயோ வேத உத்தமஸ்யாஸ்ய மங்கல: | ஶ்ரீமஶாந்த திரொநித்ய ஶ்ருதம் ப்ரவதந்தி ஹி | ததைவ புராணாநி ஶிவம் ஸாம்பம் த்ர்யம்பகம் | ஸ்வதந்த்ர மேகமத்வைதம் ப்ரவதந்தி நிரங்குஶம் | என்னும் சங்கரஸம்ஹிதாவாக்கியத்தால் எப்படி சாஸ்திரங்களிலும் வேதங்களிலும் விசுவாதிகராயுள்ள பார்வதீஸமேதரான பரமேசுவரர் பரமபுருஷரென்றும் பாசத்தினின்று உண்மையில் விடுவிக்கத்தக்கபதியென்றும், உத்தமஸ்தானமென்றும், மறைக்கக்கூடாத சிரேஷ்டமான ஜோதியென்றும், சுபத்திற்கெல்லாஞ் சுபமென்றும், பரிசுத்தத்திற்கெல்லாம் பரிசுத்தமென்றும், ஸர்வமங்கள ஸ்வரூபரென்றும், பிங்களவர்ணரென்றும், நித்தியரென்றும், மோக்ஷரூபமென்றும் சிவாகமங்கள் சொல்லுகிறதுகளோ அதுபோலவே புராணங்களும் பரசிவனை அம்பாளோடு கூடியவரென்றும், மூன்று கண்ணுடையாரென்றும், ஸ்வதந்திரரென்றும், அஸமானரென்றும், அத்வைதஸ்வரூபி

யென்றும் சொல்லுகிறதுகள். எனக்கூறியிருத்தலால் ஆகமபதத்திற்கு வேதமர்த்தமென்பது. அபரவித்யையாகிய ருக்காதிவேதங்களென்பது பொருளாகாது எனெனில்.—

[illegible]

[illegible]

என்னும் சங்கர சங்கிதாவாக்கியத்தால் முன்காலத்தில் கைலாஸத்தில் பரமேசுவரரைப்பார்த்து பார்வதி, பிரும்மா, விஷ்ணு, ரிஷிகள் இவர்களெல்லோரும் பக்தியுடன் வணங்கி ஆதரவுடன் எங்களுக்கு சிவாகமார்த்தங்களை தயவுசெய்து கிருதார்த்தராகும்பொருட்டு உபதேசிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்கப்பட்டவராய்க்கொண்டு நந்திமுதலான கணங்களுடன் ஆஸனத்திலிருந்தெழுந்து அதே கைலாஸபர்வதத்தினுடைய புஷ்பகிரி என்ற சிகரத்தில் மனோஹரமான ஆலயத்திலிருந்து ஆச்சார்ய முஹூர்த்தமாயமைந்து அம்பாள், கணபதி, ஸ்கந்தர், சாஸ்தா, பைரவர் முதலான பூதநாதர்களுக்கும் வீரபத்திரர் முதலான கணநாதர்களுக்கும், வேதாகமார்த்தங்களை அத்தியனஞ் செய்வித்தார். ஆமர்த்தக்கிரி என்ற மற்றொரு சிகரத்தில் ஆச்சார்ய முஹூர்த்தமாயமைந்து. நந்திகேசுவரர், மஹாகாளர், சந்திரன், நந்திமுதலான பிரமதகணங்களுக்கும் வேதாகமார்த்தத்தை அத்தியயனஞ் செய்வித்தார். கௌளகிரி யென்று பிரஸித்தமான மற்றொறு கொடுமுடியில் குருமூர்த்தமாயமைந்து பிரும்மா, விஷ்ணு, இந்திரன் இவர்களுக்கு அதிகமான சிவாகமார்த்தங்களை உபதேசித்தார். பிக்ஷாச்சார்யமென்கிற பிரஸித்தமான வேறொரு கொடுமுடியில் ஸனகாதிகளான ரிஷிகளுக்கு வேதாந்தார்த்தமான சிவாகமங்களை அத்தியயனஞ் செய்வித்தார். இந்த பிரகாரம் நாலுகொடுமுடிகளிலும் பிரஸித்தங்களான நாலுமூர்த்திகளிருந்தும் அனுக்கிரஹத்தையடைந்த ரிஷிகளனேகருண்டு மறுபடிகொஞ்

சகாலங்கிரமித்து த்வாபரயுகத்தின் கடைசிகாலங்களில் சிவாகமார்த்தங்களும் வேதார்த்தங்களும் அழிந்துப்போக ஆரம்பிக்க சிவபெருமானனுமதியினால் நானுகொடுமுடிகளிலும் சிஷ்யர்களாயிருந்தநாலுகூட்டத்தாரும் பூமியில் அதே ஆச்சார்யர் பெயரை வகித்தவர்களாக அவதரித்து அந்தந்த ஸந்தானப்பேருடன் சிவபெருமானுஞையால்அனேகர்களுக்கு தங்களுடைய வேதசிவாகமஸாமர்த்தியத்தால் சிவதீக்ஷையையுஞ்செய்வித்து சர்யை, கிரியை, யோகம், ஞான மென்னும் நான்குபாதங்களான சிவாகமங்களை உபதேசித்து அனேகமான ஸந்ததிகளை அந்தந்த ஸந்தானக்கிரமமாய் ஏற்படுத்தி வேதசிவாகமார்த்தங்களைத் தன்னைப்போலவே கற்பித்து ஆச்சார்யாபிஷேகஞ்செய்து இவர்கள் கைலாஸத்தை அடைவார்கள். அந்த ஸந்ததியில் பிறந்த குருக்கள் பாரம்பரியக் கிரமமாக இந்த லோகத்தில் பரிபாகமுடைய ஆத்மாக்களை அனுக்கிரிக்கிறார்கள் ஆகையால் சிவாகமார்த்தத்தை தெறிந்த குருக்களை சிவமாக அறியவேண்டியது அவருடைய அனுக்கிரஹத்தால் பரமேசுவரருக்குச் செய்கிரபூஜையானது உடனே பலத்தைக் கொடுக்கின்றது. அவரனுக்கிரஹமில்லாவிடில் ஒரு வித்தையும் ஸித்திக்காது. குருவினிடத்திருந்துதான் எந்தப்பிரகாரமாவது எல்லா வித்தைகளையும் அப்யஸிக்கவேண்டுமெனக் கூறியிருத்தலால் இவர் ஆகமபதத்திற்கு வேதமர்த்தமென்றதை சங்கர ஸம்ஹிதையே புறக்கணித்தொதுக்குகின்றது. வேதசிவாகமங்களிரண்டும் பராபரவித்யாபேதமாய் ஆன்மலாபத்தில் பயன்பட்டு நிற்க்கும் மெய்நூலாதலால் சிவாகமத்தோடொப்ப முடிந்துள்ளது வேதமென்பதாம் இவற்றால் வைதிகரென்பது வேதசிவாகமங்களைக் கைப்பற்றி நிற்போற்குறியதேயன்றி சிவாகமத்தை அப்பிராமாண்யமாக்கூறும் நாஸ்திகர் பாத்தில் வைதிகத்வமேராதென்பது வேதாகமற்றுணிபாம் இருக்காதிகளும், சிவாகமங்களும் சிவபெருமாந் திருமுகத்துதித்தமெய்நூலாதலால் இவ்விரண்டிற்கும் வேதமென்பது பொதுப்பெயர், வித்யாசப்தங்கள் வருமிடங்களில் வேதத்தைச்சாராது சிவாகமத்தைச் சார்ந்து சிரப்புப்பொருளை நன்கு விளக்கிநிற்கும். இவற்றால் வேதமென்றாலும், சுருதியென்றாலும் சிரௌதமென்றாலும் வேதசிவாகம மிரண்டிற்குப் பொதுப்பெயர் வித்தையென்னுமிடத்தில் சிவாகமத்திற்கு மாத்திரமே பயன்பட்டு நிற்கும் சிறப்புப்பேர் இங்ஙனமுற்ற உண்மைப்பொருள் சிற்சிலர்க்கு விளக்கமற்று சிவாகமநிந்தைப்புறியவெளிப்படுகின்றார். இவை வேதாகம புராணாதிஸத்பிரமா

ணங்களின் முன்-நிலை நிற்றலெங்ஙனம். இவற்றால் இவர் தூற்றும் சிவாகமதூஷணம் நிஷ்பிரயோஜனமென்க. இங்ஙனம் புராடாசம் நாய் ஊத்தைவாய் முதலியவசை மொழிகைப்பற்றியது. வேதாகமபுராணேதிஹாஸாதி ஸத்பிரமாணமுடை ஸாதுக்கள் பரத்தாகாதென்பது நன்றுபோதிக்கப்பட்டது.

நெய்யின்குணம் அறிந்தோமென்னும் ஆடம்பரச்சொல் அடியோடற்று தலைசாய்ந்துவிட்டன. இவ்வாராயின் உத்கடேச்சாரூப ருசியுண்டாதலெங்ஙனம் இவர்வீணே பூர்ணானந்தம், ஸ்வரூபம், போதசுகம், நிரதிசயானந்தம் வேதாந்த விச்சாரமென்னுஞ்சொற்களை நிரப்பி ஸந்தர்ப்ப விரோதமாய் கதைவிளப்பதை செவியாரல்ச்செய்து ஸந்தோஷிப்பவர் இவரையன்றி வேறு யாவருளர் வேதாந்திகளாகிய ஏகான்மவாதிகளுக்கு மந்தாதிகாரத்தில் நிர்பந்தது பிரும்மமேயன்றோ இப்பிரும்மத்தின்மந்தத்தை நீக்க புராணாதிகளைப்பண்ணின ரிஷிகள்யார். பிரும்மமாபிரும்மத்திற்குவேறா பிரும்மமெனின் தனது அதிகாரத்தை பேதிக்கவிசையா, பிரும்மமன்றெனின் ரிஷிகள் பிரும்மத்திலுந் தாழ்ந்தோராதலால் பிரும்மத்தினதிகாரத்தை மாற்றவகையற்றோராவர். இவற்றால்புராணங்களை ரிஷிபண்ணினதும் நிஷ்பிரயோஜனமாகும் இதினாலென்னதாத்பர்யமென்றாலென விவர்வருவித்துக் காட்டுபது அத்தியாச்சர்யமாயிருக்கின்றது. இவருக்கு மோக்ஷமென்பது முயற்கோடு போலிருக்க அவற்றை யடைதல்விருத்தமன்று மேலுமிவர் வேதத்திலதிகாரமுள்ள த்ரைவர்ணிகாள் அதாவது பிரும்ம க்ஷத்திரிய வைச்யர்கள் மோக்ஷத்துக்காக வேதாந்தத்தை விசாரிக்கவேண்டும் வேதத்திலனதிகாரிகளான ஸ்திரீ சூத்திரர்கள் பாரதம் முதலான இதிஹாஸங்களையும் ஸ்காந்த விஷ்ணுபுராணம் முதாலான புராணங்களையும் பிராம்மணமுகமாக பிராம்மணனை முன்னிட்டு சிரவணம் பண்ணவேண்டும். ஶ்ராவயேச்சதுரோ வர்ணாந்க்ருத்வா ப்ராஹ்மணமக்ரத:| என்னு ஸ்மிருதி வசனத்தால் சிரவணம்பண்ணிவைக்கிர பிராமணனும் பிராம்மணரை முன்னிட்டு நாலுவர்ணங்களுக்கும் சிரவணம் பண்ணிவைக்கவேண்டும். ஸ்த்ரீஶூத்ரத்விஜபந்தூநாம் த்ரயீ ந ஶ்ருதிகோசரா| இதி பாரதமாக்யாநம் க்ருபயா முநிநா க்ருதம்| என்கிர வசனத்தால் ஸ்திரீசூத்திரர்களுக்கும் ஸ்திரீசூத்திரர்களுக்கு ஸமானுளான த்விஜர்களுக்கும், அதாவது வேதாத்தியயனதி ஸம்ஸ்கார சூன்யாளான வேதாந்த சிரவண அனதிகாரிகளா

சிவலிங்தக பிரச்சன்ன பௌத்தக்ரோட பங்கவஜ்ராயுதம். கடுள

யிருக்கின்ற பிரும்ம க்ஷத்திரியவைச்யர்களுக்கும், பௌராணிக பிராம் மணன் புராணேதிஹாஸாதிகளைச்சொல்லவேண்டும். யஶு தூவெஷுஉ விஷிவ்யு: வூராணாஂவெதீ நாகஸாஷுதஃ। தஂஉஜஷ்டூாஹயஶா ஷொதிவெஷொஶாஂ வஜதிஷெதூூதி। என்கிற வசனத்தில் வேதவேதார்த்தங்களை குருமுகமாக நன்ருகத் தெரிந்துகொண்டு இதிஹாஸ புராணங்களுக்கு ஸம்சய விபர்யயமில்லாமல் அறிந்து கொண்டவனை வைதிக பிராம்மணம் முகமாக அதாவது ஸகலவேத சாஸ்திர ரஹஸ்யந் தெறிந்தவனை அத்வைதி மஹாப்பிராம்மணன் மூகமாக ஸ்திரீ சூத்திர த்விஜபந்துக்கள் இதிஹாஸ புராணுதிகளைக் கேழ்க்கவேண்டும். க்ஷத்திரியவைச்யர்கள்வேதத்திலதிகாரமுள்ள வர்களாயிருப்பினும், அத்தியயனம் பண்ணிவைக்க அதிகாரமில்லாதவர்களாகையால், இவர்கள் புராணஞ்சொல்லவுங்கூடாது. இவர்கள் முகமாக ஒருவரும் புராணசிரவணம் பண்ணவுங்கூடாது. ஷிஜஷ்ரீணாஉவிஶரஸ தஜ்ஞாநாஹா வெஸயிகாஶிதா। என்கிற சூதஸங்கிதா வசனத்தால் த்விஜ ஸ்திரீகளுக்கு வேதாந்த சிரவணத்தில் அதிகாரஞ்சொல்லப்பட்டிருக்கிறது. சுஷ்ரூஶுஉஜஸாஶூஶஜஷெஷா। வூராணெ நைவவெஉநஂ। என்கிற சூதசங்கிதாவசனமானது ஸ்வதர்மநிஷ்டனை சூத்திரனுக்குத்விஜ சிசுருஷைதான் முக்ய விருத்திஎன்கிற சாஸ்திரப்படிக்குத் விஜசிசுருஷைபண்ணிக்கொண்டிருக்கிற சூத்திரனுக்கு புராணசிரவணத்தில் தானதிகாரமென்று சொல்லுகிறது. சுஷெநூஷாஉவிஷவெஷாஂ ஜ்ஞாநாஹாவொவியீயூதெ। ஹாஷாஷுஶெணகாஶெந தெஷாஂவொவஜூவ காஶகஃ। என்கிற சூதஸம்ஹிதா வசனமானது நாலுவர்ணங்களுக்கு கீழ்ப்பட்டவர்களுக்கு பாஷாந்திரத்தாலேக் ஞானப்யாஸமானது விதிக்கப்பட்டிருக்கிறதென்றும் அது காலாந்தரத்தில் பலத்தைக்கொடுக்குமெனவும் சொல்லுகிறது. அதாவது புராணத்திலும் அதிகாரமில்லாத ஸங்கரர்களுக்கு கெதியுண்டு பண்ணுவதற்காகதயவினுல் மஹாத்மாக்களால் செய்யப்பட்டிருக்கிற அத்வைதாத்மபரமான அந்தந்ததேசபாஷை பிரபந்தங்களை ஸங்கரர்கள் படிக்கவேண்டும். அவர்களும்காலாந்தரத்தில் த்விஜசரீரமெடுத்து வேதாந்த விச்சாரம்பண்ணி மோக்ஷத்தை யடைவார்கள் என்று தாத்பர்யம். ஆகமமென்ருல் சைவாகமந்தான், அதிலிருக்கிற அமிருதப் பிரவாஹத்தில் கொஞ்சமெடுத்துக்கொண்டுவந்து ஸ்காந்தத்தில் வைத்

திருக்கிறேனென்று ஸ்காந்த புராணத்தில் கண்டோக்தமா யிருப்பதினாலே புராணத்தைக் காட்டிலும் ஆகமம் சிரேஷ்டமென்று நீ சொன்னது அஸங்கதம் ஆகம பதத்திற்கு நீ சைவாகம மென்றர்த்தஞ் சொன்னால் வைஷ்ணவாகமந்தானர்த்தம், பைரவாகமந்தானர்த்தம், லாகுளாகமந்தானர்த்த மென்றேன் சொல்லக்கூடாது. அவ்விதெல்லா மர்த்தமல்ல சைவாகமந்தானர்த்தமென்று சொல்வதற்கு பிரமாணமில்லையாகையால் நிருபபத ஆகம பதத்திற்கு வேதந்தானர்த்தம். அதிலிருந்து கொஞ்சம் அமிருதத்தைஸ்காந்தத்தில் வைத்தோமென்று புராணார்த்தஞ் சொல்லியிருப்பதினால் புராணம் வேதமூலகமென்று அர்த்தமாசசுது. ஆகமம் வேதமூலகமென்றுசொல்லப் பிரமாணமொன்று மில்லாததினால் நிர்மூலமென்பது ஸ்பஷ்டம் ஆகச்சே வேதமூலமான புராணமானது நிர்மூலங்களான ஆகமங்களைக் காட்டிலும் சிரேஷ்டமென்பதும் ஆகமங்களைக் காட்டிலும், புராணம் நிகிருஷ்மென்று சொல்லுகிற நீ புராணங்களுக்குத் கர்ஷத்தை ஸகிக்காத படியினாலே பாஷண்டி சிரோன்மணி யென்பதும் பாலர்களுக்குந் தெறிபவருமென்பதி லாக்ஷேபமென்னவென வறைந்தார். முதலி லிவர் திரயிவர்ணிக விஷயங்கூறியது நத்தாங்கூடறிஹி எழுதியது போலொருவா ரொத்திருக்கின்றது. வேதத்தி லனதிகாரிகளான ஸ்திரீ சூத்திரர்கள் பாரதம் முதலாகிய இதிஹாஸங்களையும், விஷ்ணுபுராணங்களையும் பிராம்மண முகமாய் பிராம்மணனை முன்னிட்டு சிரவணம் பண்ணவேண்டுமென ஸ்மிருதிவாயிலாய் விளக்கி யிருக்கின்றீரே. இங்ஙனம் பிராம்மணராரென்னுமா சங்கை நிகழ்கின்றது. ஜன்மத்தால் சூத்திரரும், கர்மத்தால் த்விஜரும், வேதாத்தியனத்தால் விப்பிரரும், பிரும்ம ஞானத்தால் பிராம்மணருமாய் தஜ்ஜாதியற்ற ஸம்ஸ்காரானு குண்யபிராம்மணரைக் குறிக்கின்றதா பிரவியாலே பிராம்மண ஜாதியில் ஜனித்தோரைக் குறிக்கின்றதா ஸம்ஸ்காரத்தாலுற்ற பிராம்மணனைக் குறிக்குமெனின் இங்ஙனம் சூத்திரனும் ஸம்ஸ்காராதிகுண்யமான பிராம்மணராதற்குக் காரணமேற்படுகின்றது. முதலில் சூத்திரனு யிருந்தன்றோ ஸம்ஸ்காரத்தால் த்விஜத்வ மேற்படுகின்றது. இவை சூத்திரர் ஸம்ஸ்காரத்தால் பிராம்மணராதற்கு விதியேயன்றோ இங்ஙுற்ற அனதிகாரிகளையா வேதாகமங்கள் பிராம்மணனெனப் புகழ்ந்தோதப் போகின்றது. இவ்ற்றால் பிராம்மணரென்பது சிவபெருமானை வேதாகமங்களில் குறிக்கப்பட்டிருத்தலின் அவர் முகத்தில் தோற்றிய ஆதிசைவ பரம்பாச்சா

சிவநிந்தக பிரச்சன்ன பௌத்தக்ரோடபங்கவஜ்ராயுதம். கருக

ர்ய மூர்த்திகளுக்கு ஜாதியாலேயே பிராம்மணத்வஞ் சித்தித்திருத்த லாலிவற்றை ஸம்ஸ்காரப் பிராம்மணர் மேலேற்றி ஸந்தோஷிக்க விரும்பியது வேதாகம மிருந்தவூரில் குடியிருந்தறியாதோரியற்கையாம். இவற்றை பிரும்ம முகோத்பவர்களான ஸம்ஸ்கார பிராம்மணர்களுக்கு முடிசூட்ட நினைந்தது திருடன் ராஜகிரஹம் புக்கி கிரீடத்தைத் திருடி தந்தலையிலேற்றிக் கொள்வதை யொத்திருக்கும். இது நிற்க ஸ்திரீ சூத்திராளுக்கும், ஸ்திரீ சூத்திராளுக்கு ஸமானளாயிருக்கிர த்விஜாளுக்கும், அதாவது வேதாத்யயன ஸம்ஸ்கார சூன்யாளான வேதாந்த சிரவண அனதிகாரிகளாயிருக்கின்ற பிரும்ம க்ஷத்திரிய வைச்யர்களுக்கும், பௌராணிக பிராம்மணன் புராணேதி ஹாஸாதிகளைச் சொல்ல வேண்டுமென்றார். இதற்குப் பிரமாணமாய்க் காட்டியுள்ள வசனத்தில் ஸ்த்ரீஶூத்ரத்விஜபந்தூநாம் த்ரயீ ந ஶ்ருதிகோசரா। இதிஹாஸபுராணம் க்ருபயா முனினா க்ருதம்। என்னும் வாக்கியத்தால் ஸ்திரீ சூத்திராள் த்விஜன் இவர்கள் பந்துக்கள் முதலியவர்களுக்கு சுருதியிலதிகார மின்மையால் பாரதமென்னு மிதிஹாஸத்தை கிருபையோடு கூடிய முனியால் செய்யப்பட்டதெனத் தெறியவருகின்றபடியால் இங்ஙனமுற்ற த்விஜ சப்தம் சூத்திரற்கு ஸம்ஸ்காரானுகுண்யமாய் வந்திருப்பதாலன்றோ பாரத்தைச் செய்தாரென்றும், உண்மை யிவர் வியவஹரித்துக்காட்டிய பிரமாணத்தால் விளங்குகின்றது. ஜன்மததால் சூத்திரரும் கர்மத்தால் த்விஜருமாயிருப்பவர், விப்ரத்வ பிராம்மணத்வ ஸம்ஸ்காமில்லாதவராதலால் இவர்களையும் ஸ்திரீ சூத்திரர்களுடன் ஒரு படித்தாய் பிரமாணங்கூட்டி முடிக்கத் துணிவுற்றது

இவ்வாருள்ள உண்மைக்கருத்துநீத்து ஸ்திரீ சூத்திரர்களுக்கும் ஸ்திரீ சூத்திராதிகளுக்கு ஸமானளாயிருக்கிர த்விஜாளுக்கும். அதாவது வேதாத்யயனாதி ஸம்ஸ்கார சூன்யாளான வேதாந்த சிரவண அனதிகாரிகளாயிருக்கின்ற பிரும்மக்ஷத்திரிய வைச்யர்களுக்கும் பௌராணிக பிராம்மணன் புராணேதி ஹாஸங்களைச் சொல்ல வேண்டுமெனப் பொருளுணர்த்தினர். இக்கருத்து மூலத்தில் அடியோடற்று நிற்பதால் நிர்மூலமாமென்பது யாவருக்கும் நன்குவிளங்கும் இஃதன்றி யஸ்துதேவேஷு விப்ரேஷு புராணம் வேதிநாஸ்திகஃ। தஸ்ய ஸ்யாத்தோகஸம்வாததிஷேத்வி

என்னும் வாக்கியத்தால் யாதொருபிரும்மணனவன் நான்குவேதங்களை அறிந்தும் புராணஅர்த்தத்தை அறியாதவனுயிருந்தால் அந்த பிரும்மணனைப்பார்த்து வேதம்தன்னை விட்டுவிடுவன் என்று பயப்படுகிறதுஎன இந்தசுலோகத்தின்கருத்துவெளிப்படுவதால் இதற்குஇவர் கூறியகருத்தாவது வேதவேதார்த்தங்களை குருமுகமாகநன்ருகதெரிந்துகொண்டுஇதிஹாஸ புராணங்களுக்கு அர்த்தசம்சயவிபர்யயமில்லாமல்அறிந்துகொண்டவனை வைத்தீகபிராமணன்முகமாகஅதாவது சகலவேதசாஸ்திர ரகசியம் தெரிந்தவனை அத்வைபதிமகாப்பிராம்மணன் முகமாக ஸ்திரிசூத்திரதிவிஜபந்துக்கள் இதிகாசபுராணதிகளை கேட்கவேண்டுமென பொருள்கூறி மகிழ்ந்தார். இவர்கொண்டபொருள் மூலத்திற்கு முரண்பட்டுகிற்கின்றது. இங்கனமுற்ற இவர் சமஸ்கிருத பாஷாபிரவீணரெனத்தர்ப்புகழ்ச்சி கூறுதலிழுக்கன்ரோ இவ்விழுக்குடையார் நம்சுவாமிகள் கூறிய மெய்பொருளுக்கு குறைகூறுதலை அறிவினரங்கிகரிப்பரோ நன்று நன்று கண்டதே காக்ஷி கொண்டதே கோலமென்பார் கூற்றிங்கனமாயிற்று இவற்ருல் புராணர்த்தம் தெரிந்தவரே வேதமொணர்ந்தோராவரென்பது வேதற்றுணிபாதலின் புராணம் அபரிபாகிக்கு கூறியதாழ்ந்த நூலென்னும் குற்சிதவாதம் தலைநீட்டாதொழிந்ததென்க மேலுமிவர் திவிஜஸ்திரி சூத்திரதர்மம் பாஷாந்தர ஞானம் முதலிய சந்தர்பவிரோத திருஷ்டாந் தரங்களால் தன்கட்சியை ஜெயிக்க நினைந்தது பிர்மாணுராயிச் சிபற்றோர் இயற்கையாம். யாம்வேதம் அபரவித்தை எனவும் சிவாகமம்பரவித்தை எனவும் வேதபிராமணங்களால் சாதித்திருப்பதுடன் சங்கரசம்ஹிதையில் ஆகமபதத்திற்கு சிவாகமமே அர்த்தமென்பதாய் நன்குவிளக்கியுள்ளோமாதலால் நமது சுவாமிகள் உண்மைபொருள் அசங்கதமாவதெப்படி மேலுமிவர் ஆகமமென்றதற்கு சிவாகமமென பொருள்கொள்வோமாயின் வைஷ்ணவ பைரவலாகுளாதி ஆகமங்களை அர்த்தமெனகூடாதாவென ஆசங்கித்தனர் சைவாகமம்தான் அர்த்தமென்பதற்கு பிரமாணமில்லையெனவும் கூறினர். சங்கரசம்ஹிதயே இதற்கு பிரமாணமாயிருக்க வேருபிரமாணம் தேடுவதுயாதுக்கு அன்றன்று ஆகமமென்றதற்கு வேதமெனவே பொருள்கொள்வோமெனின் வேதாகமங்களை அத்தியயனம் செய்வித்தார் எனக்கூறுமிடத்தில் எப்பொருள் விளக்குவீர் ஆகமம் என்றதற்கு வேதம்பொருளாயின் வேதாகமமென இரட்டித்துக்கூறுதல்

அனுவசியகமாம் சர்யைகிரியையோகஞ்யானமென்னும்நான்குபாதத்தோடுகூடிய ஆகமங்களை உபதேசித்தாரென்றும் இவைசிவதீக்ஷிசெய்து ஆச்சாரியாபிஷேகம் செய்வித்து ஆன்மாக்களை அனுக்கிரகித்தாரென்றும் கூறிய பெய்னூர் கருத்திற்கு இவராசங்கை முற்றிலும் விரோதமன்றோ இவற்றால் ஸ்காந்தத்தில் கூரிய ஆகமபதம் சிவாகமமென்பதே தீர்மானமாயிற்று இவற்றை நிர்மூலமென கூறுவார் கூற்று குற்றமாய் முடியப்பெறும் இதனிற்க சூதசம்ஹிதயில் சில வசனங்களை இவர் வழுத்திரட்டில் முப்பத்திமூனுவது பக்கம் தொடங்கி 36-வது பக்கம் வரையில் வரைந்து சிவாகம நிந்தைக்கூற துணிந்தார். வேதம் அவித்தை வித்தை யென இறு கூறுய் நிற்றலின் இவ்விரு திறத்தினுண்மை யிவற்கெங்கனே விளங்கப்போகின்றது. அவித்தை அபரவித்தையாகிய ருக்காதி வேதங்களும் வித்தைபரவித்தையாகியசிவாகமங்களும் மென்பதென்றோசூதசங்கிதையின்கருத்து பரிபாகானு குண்ணியமாய் கூறும்ஞ்யானம் உத்தமமெனவும் இவற் காட்டிய வசனங்களில் பொருள்கொள்ள கிடைத்தலால் இவையாவும் இவற்கு சாதகமாவதெப்படி பரிபாகம் மந்தம் மந்ததாம் தீவ்விரம் திவ்விரதரமென் லக்ஷணங்கள் சிவாகமங்களில் கூறியிருத்தலால் இவற்றைஉத்தமோத்தம ஞ்யானமென சூதசம்ஹிதை வற்புரித்தி கூறுவதால் சிவாகமநிந்தை கூறும் பிராகத விப்பிரலம்ப வாதமுடையிற்கு யாம்யாது செய்தல்கூடும் சூதசம்ஹிதையில் சிவாகமம் பரவித்தையென கூரியிருப்பதுடன் ஊர்த்துவ முகத்தாலும் அதோமுகத்தாலும் வேதாகமம் வந்த தென்பதை நன்குவிளக்கி வேதத்தைநோக்க சிவாகமம் வரிஷ்ட தர்மமென வற்புருத்தியு மிருக்கின்றது. இச்சூதசம்ஹிதையில் நிஷேதித்துள்ள தந்திர நிஷ்டதர்மங்கள் கேவல தந்திரமாகிய காணுத காபிலமன் வாதிகளேயே குறித்துணர்த்தும் இவற்றை நோக்க மிசிரதந்திரம் விசேஷமாம் மிசிரதந்திரத்தைநோக்க வேததந்திரம் விசேஷமாம் வைதிக தந்திரத்தை நோக்க சுத்த தந்திரம் விசேஷமென்பது சூதசம்ஹிதையின் அந்தர்க்கத மாதலின் இப்பொருளுணர்ச்சி பெரும்பரிவபமற்று அபரிபாகத்தடிப்பால் பரவித்தியா ரூபமான சிவாகமநிந்தை புரிதல் அறிஞர்க்கழகாமோ.

சிரவுதஸ்மார்த்த தர்மங்களுக்கு சூதசம்ஹிதை விசேஷத்வம் கூரியிருப்பது இவற்றிற்குகீழிட்ட பிரமாணங்களை தாழ்வெனநோக்கியேயன்றி மேலுட்டுள்ள வித்தியாரூபமான சிவாகம பிரமாணத்தை

நோக்கியன்று சிவாகமமும் வேதமும் அவித்தை வித்தையென பேதப்பட்டு ஒரு புடைத்தாய்நிற்றலின் இவ்விருதிரத்து மெய்நூற்களுக்கும் வேதமென்பது பொதுப்பேர் சிரப்பு வகையாய்க்கொள்ளு மிடத்தில் சிவாகமம் வித்யாவாசகத்தால் மேம்பட்டு நிற்கும். இங்ஙமுற்று நோக்காது கற்றவர்போல் வேதாகமக்கருத்துணர்த்த வெளிவந்தது ஸாதுக்கள் பலற்குமறுவருப்பைத் தருகின்றது. வேதாகமபுராணேதி ஹாஸஸ்மிருதி முதலிய ஸத்பிரமாணங்கள் யாவும் ஆன்ம லாபங்கருதி வெளிப்பட்ட மெய்நூல் களேயன்றோ இம்மெய் ஸர்வஞ்யனால் கூறியுள்ள உண்மைநூலாதலால் கிஞ்சிஞ்யராகிய யிவர் போன்றோர் சப்தார்த்த விஷயம் இத்தகய நான்முகத்துமுனை த்தெழத்தக்கதோ, பின்னுமிவர் மேல்கண்டபடி சுருதிஸ்மிருதி இதிஹாஸங்களில் அனர்களாயும் பிராகிருத பாஷாதிகாரிகளைக் காட்டிலும் மேல்போனவர்களாகவு மிருக்கிரவர்களுக்கு ஆகமங்களிலதிகாரம் அவர்கள் ஆகமோக்த குண்டமண்டபாதி பரஸ்பர தீக்ஷா ஸம்ஸ்காரமுள்ளவர்களாய் ஆகமோக்த அனுஷ்டானங்களைச்செய்து கொண்டுவந்தால் காலாந்தரத்தில் வைதிக ஜன்மெடுத்து வேதாந்த ஜன்யஞானத்தினுல் மோக்ஷத்தை அடைவார்களென்று சூதசங்கிதை சொல்லுகிறதென வறைந்து அவ்வசனங்களையும் வறைந்திருக்கின்றார். இவரெழுதிய சூதசங்கிதா வாக்கிய மிவற்க்கனுத்துணையும் பயனளிக்கத்தக்கதன்று, மேதாவியான ஆதிசங்கராச்சாரிய ஸ்வாமிகளே சூதசங்கிதையை அர்த்தந் தெறிந்துகொள்வதற்குப் பதினெட்டுத் தடவை திருப்பித்திருப்பிப் பார்த்தாரென்றால் இவற்கா நற்பொருள்விளைவிக் கப்போகின்றது. இவர்பத பதார்த்தஞாயம் சூதசங்கிதையில் செல்லத்தக்கதன்று சூதசங்கிதையோ காமிகாதி சிவாகமங்கள் ஈசான முகமாகிய ஊருத்வ முகத்தால்த் தோற்றிய தெனவும்; இவை எல்லா தர்மங்களிலும் சிரேஷ்டமுடையதெனவும், இது பரவித்தையெனவும், இந்த ஈசானமுகோத்பவமான சிவ ஞானம் வேதாந்த சிரவணத்தா லயறித்தக்கதெனவுங் கூறியிருப்பதையா முன்னெடுத்து இதே சூதசங்கிதா வாக்கியத்தால் நிரூபித்துள்ளோமாதலின், இவற் வெற்றுறையிங்ஙனம் பயன்படுமோரெங்ஙனம், இவற்றால் சுருதி ஸ்மிருதி புராணங்களில் அனர்ஹராளாயிருப்பவர்யாவர். வேதாகமாதி ஸத்பிராமணங்களுக்கு அப்பிராமாண்யங் கூறும் ஏகான்மவாதிகளேயன்றோ பந்தலில் னுழையாதேயென்றால் எலை பீத்தலென்பார்போலிவர் வைதிகம், பிராம்மணன், சிரௌதம், ஸ்மா

ர்த்தம் எனப்பிரமாணங்களில் கூறுமிடங்களிலெல்லாம் விட்டில் விளக்கைத் தமக்கிதமெனக்கருதி வீழ்ந்திரத்தல்போல் ஆங்காங்கு தலைநீட்டி தலையறுப்புண்டுபோகின்றார். இங்ஙனம்வேதார்த்தமாய்அவரவர்கொண்டபிரமாணமவரவரைத்தாழ்த்திவிடுகின்றது. மன்வாதிஸ்மிருதிகளைவேதார்த்தமாய் கைப்பற்றிநிற்குமேகதேசிகளை அச்சிமிருதி ஜன் சூத்திரத்வங்கூறி சூத்திரற்குவேதத்திலதிகாரமின்மையின் ஜன்மத்தால்சூத்திரத்வமும் கர்மத்தால்த்விஜத்வங்கூறுமிவர்களையும்ஜன் சூத்திரர்களாய்க்கழித்து புராணசிரவணம் பண்ணுதலுசிதமென்பதிவர்வறைந்துள்ள பிருமாணங்களால்நன்குவிளங்கப்பெறும். அஃதெங்கனமெனின் ஸ்த்ரீஶூத்³ரத்³விஜப³ந்தூ⁴நாம் என்னும் வாக்கியத்தால் ஸ்திரீ, சூத்திராள, த்விஜர் பந்துக்களென அர்த்தமாகின்றபடியால் ஸாமான்யத்விஜர்கள் அதாவது ஜன்மத்தால் சூத்திரத்வம் கர்மத்தால் த்விஜத்வங்கூறுமிவர்களுக்கு வேதாகமங்களில் அதிகாரமில்லையென்பது தென்றன விளங்குகின்றது. அதிகாரமுள்ளோற்கு ஜன்மத்தால் பிராம்மணத்வஸித்திவருதல்வேண்டும். இங்ஙனமுற்றோர் சிவஸிருஷ்டாளாகிய ஆதிசைவர்களே யாவார்கள். இவர்கள்சிவத்விஜரெனப்பெயரானும், விசேத்விஜத்வம் பெற்றிருப்பார்கள். சிவமங்களராதல்பற்றி மங்களத்விஜத்வமுடையாரென்பதே யிவற்றின்முடிபொருளாம். இவர்களைநோக்க ஸாமான்யத்விஜர்கள் அமங்களராவாரென்பதை நோக்கியேயன்றே யிவர்களுக்கு வேதாகமாதிஸத்பிரமாணம் அமங்களத்வஞ் சாதித்திருக்கின்றது. இவர்வேதஅனதிகாரத்வங்கூறி விலக்கியுள்ள வசனங்களும், ஸ்திரீ, சூத்திரர், த்விஜர் பந்துவெனக்கூறியிருப்பதால் இங்ஙனம் ஸாமான்யத் விஜரெனப்பொருளாமன்றி விசேஷத்விஜர்களாகிய சிவத்விஜர்களை இங்ஙனம்பொருள்படுத்த விடமில்லை. இவற்றானும் வேதஅனதிகாரத்வ மிவ்வாதிகளுக்கே உண்டாயிற்றென்பது கற்றோர்மற்றோர் யாவருக்கும் நன்கு விளங்கும் பின்னுமிவர் சூதசங்கிதாவாக்கியத்தை ஈண்டெடுத்துக் காட்டிக்கண்டித்தொதுக்கப் புகுவோமாக.

'வேதா³ம்ஶ்ச த⁴ர்மஶாஸ்த்ராணி புராணம் ஸாரதஜ்ஞயா |
வேதா³ங்கா³நி வேதா³ம்ஶ்ச காமிகாத்³யாக³மாநபி | காபாலம்
லாகுலஞ்சைவ ததோ²பே⁴தா³ந்ஜைஷ்டுகா: | ததா²பாஶு
பதம் ஸோமம் பை⁴ரவஞ்சாக³மம் ததா | தேஷாம்பே⁴தா³
வபே⁴தா³ம்ஶ்ச ப⁴க³வான் ருத்³ர: ஸ்வயம் | விஷ்ணும் ஸ்கந்த³ப்³ரஹ்மா

[illegible]

என்னுஞ் சூதசங்கிதாவாக்கியத்தால் ஹேபிராம்மணோத்தமர்களே வேதங்கள், தர்மசாஸ்திரங்கள், புராணம், பாரதம், வேதாங்கம், உபவேதம், காமிகம்முதலிய ஆகமங்கள், காபாலம், லாகுளம், இவைகளின்பேதம் பாசுபதம், ஸோமம், பைரவம் முதலியவைகள் இவைகளின் அனந்தபேதங்கள் விஷ்ணுவாகமம்,பிரும்மாகமம், புத்தாகமம், ஆர்ஹதாகமம், லோகாயதம், விஸ்தாரமானதர்க்கசாஸ்திரம், கம்பீரமானமீமாம் ஸசாஸ்திரம், ஸாங்கியம்யோகம் இவ்வாறு அனேகபேதமான சாஸ்திராந்தரங்களையும், ஸர்ஞ்யனாகிய பரமேசுரவர் ஸங்கிரஹமாகதானே சொல்லியிருக்கின்றார் இப்பரமேசுவரருடைய பிரசாதத்தினால் பிரும்மா, விஷ்ணு முதலானதேவர்கள் ஸித்தாள், வித்யாதராள் யக்ஷாள் இராக்கதர்முதலானோர்கள முனிகளும்மனுஷ்யர்கள் இவர்கள்யாவரும் பரமேசுவரரால் சொல்லப்பட்டசாஸ்திரங்களையே விரிவாகவுஞ் சுருக்கமாகவுஞ் செய்தார்கள். வித்வான்கள் இந்தபிரமாணங்களைச் செய்திருக்கிறார் அதிகாரிபேதத்தால் பிரமாணங்களாக ஆகிறதுகள் இந்தவழிகள் தர்க்கயுக்தியால் கெடுக்கத்தக்கதல்ல எப்படிஜலத்தின் பிரவாகமானது கடைசியில் ஸமுத்திரத்தைப்போயடைகிறதோ அதுபோல் எல்லாவழிகளுக்கும்

ஈசுவரன் அடையத்தக்கவன் எந்தெந்த வழியாயுபாஸித்தாலும் அந்த வழியை யொத்து அவர்களுக்கு ஈசுவரன் அனுகூலமாயிருக்கிறார். அவருடைய அனுக்கிரஹத்தினால் கிரமமாக உத்தமமான வழிகளை மனிதன் அடைகிறான் அங்கங்கிருந்து அவனுக்கு அனுக்கிரஹஞ் செய்கின்றார். படிப்படியாய் இவைகள் வேதவழிக்குக்காரணங்களாகிறதுகள் வேதமார்க்கத்திலிருக்கின்ற ஈசுவரன் முக்திக்கு நேரேகாரணமாகிறார் இவ்வேதமார்க்கத்திலும், கர்மபாகத்திலிருந்து அவர் ஞானபாகத்திலிருந்து அவர் ஞானவழியாய் மோக்ஷத்தைத் தருகிறார் பரமானமுக்தியானது ஒருவிதமாகவே யிருக்கின்றது. முக்திவிஷயமானதோற்றமும்லொன்றாகவேயிருக்கும் பலவிதமாயிருக்கமாட்டாது. வேதாந்தமானது சங்கரனை நிர்விசேஷமான ஒரேபொருளாகச்சொல்லுகிறது. இதைத்தவிர வேறுவழியில்லை. இதனால் வித்தை வேதபுருஷனாலுண்டாக்கியது. இந்த மார்க்கங்களிலுண்டானது ஹேமுனிசிரேஷ்டர்களே அபிமதமாகும் அவித்தை விதனைதயென வேத மிருகூருடையதில் அவித்தை வித்தையாகாது வித்தைய வித்தையாகாது இது விஷயத்தைச் செவ்வயாக நிரூபணஞ்செய்கிறேன். ஹேவேதவித்தமர்களே இக்காரணத்தா லிவ்விரண்டு மார்க்கங்களும் பிரமாணங்களாகும் முக்தியைக்காட்டிலும் வேறுவிஷயங்களில் பிரமாணங்களான வேதாந்தபாகத்திலிருக்கிற மஹாதேவரானவர் சீக்கிரத்தில் முக்தியைக்கொடுக்கிறார் வேறு வழியிலிருந்து கொடுக்கிறதில்லை. அன்யத்திலிருப்பவரும் கிரமமாகக் கொடுக்கிறார். இதைத்தான் வேதங்களும் முறையிடுகிறதுகள் ஆனதால் வேதமார்க்கத்திலிருப்பவர் அன்ய மார்க்கமாசிரியிக்கக்கூடாது. வேதமார்க்கத்திலேயே இருப்பவருக்கு எல்லாம் சுலபமாகவே முடியத்தக்கது. இதிலேயேதான் புக்தி முக்திகள் நிறைந்திருக்கின்றது. இதிலதிகாரிபேதத்தால் மார்க்கங்கள் பிரமாணமாகிறது ஸம்சயமில்லை ஈசுவரருடைய ஸ்வரூபவிஷயஞானத்தில் பந்தத்திற்கு ஹேதுவும் அதுபோலவே ஜெகத்திற்குக் காரணமாயிருக்கிற ஞானம் முக்திகளினுமப்படியே இந்த மார்க்கங்களுக்கு யாதொருவிருத்தாம்சங்களான வேதாந்தத்தினால் ஸமர்த்தாளாயிருக்கிற இவர்களுக்கும் மந்தமதியான மஹாமோஹாவிருதாத்மாக்களுக்கும் அவரவர்கள் விஸ்வாஸத்திற்குத் தக்கபடியதார்த்தமற்றதில் பிரவர்த்திப்பார்கள். புல்லைக் காட்டி ஓட்டுகிறபசுவை மனிதன் பிடிப்பதெப்படியோ அப்படிக்கே மஹேசுவரரானவர்முன் இஷ்டமானக்ஷேத்திரபலத்தைக் காட்டி அ

தின்பின் பரிபாகானுகுண்யத்தினால் உத்தமமான ஞானத்தைக் கொடுக்கிறார். ஆகையாலிதில் சொல்லியிருக்கிறமார்க்கம் ஈசுவரராலேயே சொல்லியிருக்கிறது. இந்த மார்க்கங்கள் பிரமாணங்கள்தான் அப்பிரமாணமில்லை. அப்பிரமாண்யமென்பாராயின் ஈசுவரர் பொய்சொல்லுகிறவரல்லர் மஹாகருணாமூர்த்தியான பரமேஸ்வரரானவர் எல்லாமறிந்தவர் நிர்மலரென்பது பிரஸித்தமன்றோ இந்த வேதமார்க்கங்களுக்குள உத்தமமான மார்க்கமானது எல்லாவற்றையும் கொடுக்கத்தகுந்தது. எல்லாவற்றையும் சொல்லியிருக்கிறதினால் மார்க்கப்பிரமாண நிர்ணயத்தை இந்தப்பிரகாரமறிந்து சுருதியில் சிரத்தையைத் விஜர்கள் வைக்கத்தக்கதென கூறியிருத்தலால் இங்ஙனமிவர்க்கு அனுததுணையும் பயன்படத்தக்கதன்று அவித்தைவித்தையெனவே தமிருகூறாய் நிற்கின்றது விஜ்ஞாநாவிஜ்ஞாநேய த்வெஹொஹயா தூகூ என்னும் சுருதிவாக்கியத்தால் வித்தை அவித்தையென வேதமிரண்டு பிரகாரமாயுள்ளதெனச்கூறியுள்ளது இவற்றிற்கு அனுகூல்யமாய் சூதசங்கிதையும் அவித்தை வித்தையாகாது வித்தை அவித்தையாகாதென கூறியிருக்கின்றது. வித்யாபிரதிபாத்யம் சிவாகமத்திலேறிநிற்றலால் அவித்யாபிரதிபாத்யம்அபரவித்தைக்கு உடன்பாடென்பது திண்ணமாம் வேதம்இவ்வாறு உபயாத்மகமாயுள்ளதென்பது தெற்றென விளங்கும் இவற்றால் சுருதியென்பது வேதசிவாகமிரண்டிற்கும் பொதுப்பெயர். விசேஷித்துக் கூறுமிடத்தில் வித்யாவாசகத்தாலும் ஞானவாசகத்தாலும் மேம்பட்டு நிற்கும் பாகானுகுண்யமாய் உத்தமமானஞானம் கொடுக்கிறாரென்பதாய் இவர்காட்டியவசனத்தால் பொருள்பட்டு நிற்றலின்பரிபாகம், மந்தம், மந்தரம், தீவிரம், தீவிரதரம் என நான்கு பேதமுடையதாய் சிவாகமங்கள் கூறிமுடிபொருளாக்கி நிற்றலின் இவற்றையேயன்றோ சூதசங்கிதை குறித்துணர்த்த விடமபெற்றுள்ளது. இவற்றால் பரமேஸ்வரர் சங்கிரகமாக சொல்லியிருக்கிறேனென குறித்துள்ள வாக்கியமும் சிவாகமமெனவன்றோ இங்ஙனமும் பொருள் பட்டுநிற்கின்றது. இவற்றையன்றிதேவர் ரிஷிமனிதர் முதலியவர்களால் அவரவர்புத்திக்கேற்ப மிகவிரிவாய் பிராமணங்களை செய்துகொண்டிருக்கின்றார் எனவும் அது ஸமுத்திரம்போலுள்ளதெனவும் எல்லாமார்க்கங்களுக்கும் பிரத்தியக்ஷத்தில் மஹேஸ்வரநிஷ்டமான சிவாகமமே சிறந்ததெனவும் இது வேதமார்க்கஹேதுவெனவும் அவித்தைவித்தை இவ்விரண்டும் செவ்வையாக நிரூபிக்கப்பட்டுள்ளதெனவும் ஆகையினால் வேதவித்

தமர்கள் மார்க்காந்தரங்களுக்கு வேதாகமமிரண்டுமே பிரமாணமாகக்கொள்ளவேண்டுமெனவும் இவற்றையன்றி முக்தி கிட்டாதெனவும் இந்தவேதமார்க்கத்திலுள்ள மஹாதேவரானவர் சீக்கிரத்தில் முக்தியைக் கொடுக்கிறாரெனவும் கூறியிருப்பதால் வேதாகமமிரண்டிற்கும் அன்யமான மார்க்கங்கள் அசிரௌதமுடையது யென்பது கருத்து இவற்றுள் ஞானம் சிவபெருமானுக்குரித்தான ஸ்தானமென்றும் கர்மம் இந்த ஞானத்தை அடைதற்கு ஸாதகமென்றும் கர்மஞானபேதமாய் வேதங்கள் இரண்டுபிரகாரமாய் இருக்கிறதென கூறியிருத்தலால் அபரவித்தை கர்மபாக முடையதும் பரவித்தை ஞானபாகமுடையதுமாய் பரவித்தை யாகியசிவாகமமே பரமேஸ்வரருக்குரித்தான ஸ்தானமாயிருத்தலின் இவற்றிலிருந்தும் கர்மபலதாதாவாய் ஆகின்றமையின் இவ்விரண்டும் முத்திமார்க்கமென்பது நோக்கி பிரமாணத்தில் முற்பட்டுகூறுதல் அவசியமாயிற்று. இவற்றால் ஞானம் விசேஷசுருதியாய் பாகுபாடுபெற்று நிற்றலின் சிரௌதமென்னும் சப்தம் இவற்றையே பின்தொடர்ந்து நிற்கும் சுருதி இரண்டினுள் ஒன்று சிரௌதமாய் மேன்படின் மற்றொன்று ஸ்மார்த்தமென இவற்றை தழுவிநிற்றற்கேதுவாயிற்று. இவற்றால் சிரௌதஸ்மார்த்த தர்மமென்பது வேதசிவாகம மென்பதாய்தெற்றென விளங்கப்பெறும். இங்ஙனம் இவரெடுத்தாண்ட சூதசங்கிதை இவற்கே அவைதீகத்வம் சாதித்து வேறொதுக்கிவிட்டது. ஜென்மசூத்திரத்வமுடையார்க்கு வேதம் சொந்தப்பொருளென்ப திழுக்கன்றே இது நிற்க.

இவர் வழுத்திரட்டு (௬௰எ) வது சயிட்டில் சிவாகமங்கள் ஈசானாதி பஞ்சமுகங்களின் வழியாய் தோற்றியுள்ளதென சிவாகமவசனமொன்று வரைந்து சந்தோஷித்தனர். இவ்வசனம் இவரே ஆராய்ந்தெடுத்தனரோ அல்லது ஆசமக்ஞர்பால் கற்றுணர்ந்துரைத்தனரோ யாதோவரிந்திலம் தாமேநேரே நோக்குவதற்கு சிவதீக்ஷாதி பரஸம்ஸ்காரமின்மையின் அங்ஙனம் நோக்கப்புகுதல் வேதாகமவிருத்தமாம். குருக்கள்முகமாய் தெரிந்துகொண்டோமெனின் இவருக்கு வசனமெழுதிக்கொடுத்த குருக்களும் சிவாகமத்தின் வாஸ்த்தவார்த்தம் தெரியாது மயக்குற்றாரென்பதும் நன்குவிளங்கும். குருக்களே இங்ஙனம் மயக்குறுவாராயின் சிஷ்யர்கள் யாதுசெய்வரெனின் குருக்களாயிருப்பின் ஒருபோதும்மயக்கப்பொருள்வருவித்துக்காட்டார். ஆசாரியர், அர்ச்சகர், ஸ்தானீகர், பாசகர், பரிசாரகர் என ஐவகை

பேதமுற்றுள்ள இவர்களுள் ஆச்சாரியர், அர்ச்சகர் இவ்விருவருக்கும் இம்மெய்ப்பொருள் நன்கு விளங்கும் மைற்றோர்க்கு புலப்படுதல் அரிதாதலின் கலிவலித்தடிப்பால் யாவரையும் ஒப்பமுடித்து ஆச்சாரியராக்கி நவீனகும்பாபிஷேகப் பிரவர்த்தகர்கள் கண்டிகுண்டல, பீதாம்பர கௌடு முதலியதுகளால் ஸமர்த்தரெனமயங்கி மெய்ப்பொருள் மறைக்க அவதரித்துள்ள பரிபாகத்தாழ்வுற்ற ஸ்தானீக பாசகபரிசாரகாதி ஆச்சாரியர்களை குருக்களெனமயங்கி அவர்பால் இப்பொருள் கற்றுணர்ந்திருந்தாலு மிருக்கலாம் இங்ஙனமன்றி ஆசாரியமுகமாய் மெய்ப்பொருள் உய்த்துணர்ந்திருப்பராயின் இவ்விபரீதாசங்கை முளைத்தெழக் காரணமில்லை உள்ளபடியே ஆசாரியத்வம் வகித்த குருக்களிடத்தில் மெய்ப்பொருளுணரும் திறமற்றயிவர்தாந் தோன்றித்தம் பிறுனய் வேதாகமார்த்தம் செய்யப்புகுதல் குற்றமன்றே இவர்பரத்து வேதாகமங்கள் மெய்ப்பொருளுணர்த்த பரிபவமற்றோரென்பதை உற்றுணர்ந்து மௌன முற்றிருக்கின்றது. சூதசங்கிதை சிவபெருமான் ஊர்த்தமுகத்தால் காமிகாதி சிவாகமங்கள் தோற்றியுள்ளதாய் கூறியிருக்க பஞ்சமுகங்களாலும் தனித்தனிதோற்றிற் றென்னுமீண்டெடுத்து இவர்வரைந்துள்ள பிரமாணத்திற்கென்னகெதிதேடுவர் வேதாகமமிரண்டும் ஆன்மலாபங்கருதிய மெய்நூலாதலின் இவ்விரண்டும் எம்மனோர்க்கு பிரமாணங்களேயாகும். இவர் வேதமாத்திரமே பிரமாணமெனக்கொண்டு சிவாகமத்தில் அப்பிராமாண்யபுத்தி வகித்தவராதலின் இங்ஙனம் தமக்குற்ற பிரமாணத்தை நீற்று அன்ய பிரமாணத்தில் லக்கணுற்றழிதலெற்றுக்கோ சிவதீக்ஷா விஹீனர்கள் சிவாகமத்தை நோக்குதல் குற்றமென சிவபெருமான் பிராமாணத்தால் வற்புருத்தியிருத்தலை நமது குருநாதர் வேதாகமதாரதம்யத்திலிடை யிடையே நன்குவிளக்கி காட்டியிருத்தலால் அங்ஙனம்நோக்கி மௌன முற்றடங்காது சிவாகமப்பிரமாணத்தை யீண்டெடுத்து வறையத்துணிந்தது பிரமாணவிருத்தங்களேயாகும். இவ்வாறுள்ள வேதாகமவிருத்ததர்ம முடையார் பரத்துவிடையளிக்கயெமது திருக்கரமிரகேந்த விசையாதிருப்பினும் பரிபாகிக்கி விளக்குதல் அவசியமாதலா மிரகேந்திவரை அதனு முசிதயாயின, சிவாகமம்மஹாகிரமமெனவும், பிரதிஸம்ஹிதை கிரமமெனவும், மிரண்டுபேதமுடையது இவற்றுள் மஹோகிரமம் இருபத்தெட்டு சிவாகமங்களும் யீசானமுகத்தில் தோற்றியுள்ளது பிரதிஸம்ஹிதை தனித்தனி பஞ்சமுகத்தில் தோற்றியுள்ளது ஈசானமுகத்தில் யாவும்

தோற்றியது ஆதிஉற்பத்திகிரமம் தனித்தனி பஞ்சமுகங்களில் தோற்றியது ஆங்காங்கு வேதார்த்தந்தெரியாது மயங்கியதேவர், முனிவர் முதலினோர்க்கு கல்பபேதத்தால் கூறியது இவ்வுண்மை வேதாகமஞ்யர்களாகிய ஆதிசைவ பரமாச்சாரியமூர்த்திகள் பால்கற்றுணர்ந்து கொள்ளக்கடவாராக. இங்ஙனமுற்ற மெய்ப்பொருள் உய்த்துணரும் பெரும்பாக்கியம்கிட்ட பரிபவமற்றயிவர் துறர்த்தம்செய்திருப்பதை யீண்டெடுத்துக் காட்டிகண்டித்தொதுக்கப் புகுவோமாக இவர்சைவம், காபாலம், லாகுளம், இவைகளின் அவாந்தரபேதங்கள் பாசுபதம், சோமம், பைரவம் இவைகளுடைய அனந்தாவாந்தரபேதம் பாஞ்சராத்திரம், வைகானஸம், பாகவதம் முதலியவிஷ்ணுவாகமங்கள், பிரம்மாகமம், புத்தார்காதி ஆகமங்கள் லோகாயதம், தர்க்க சாஸ்திர மீமாம்சம், ஸாங்கியம் யோகம் முதலிய அனேக விதமான சாஸ்திரங்களையும் ஸாக்ஷாத் ஸர்வக்ஞரான ஈஸ்வரன் ஸங்கிரமாக நிர்மாணஞ்செய்தார். அவரனுக்கிரகத்தால் பிர்மா, விஷ்ணு, வசித்தர், வித்யாதரர், யக்ஷர், ராக்ஷஸர், முனி, மனுஷ்யன், இவர்கள் விஸ்தாரங்களாகவும் ஸங்கிரகங்களாகவுஞ் செய்தார்கள் ஒன்றுக்கொன்று விருத்தங்களாயிருக்கிற இவைகள் அதிகாரிபேதத்தினால் சொல்லப்பட்டிருக்கிறதுகள் ஆகையால் விரோதமில்லை. ஒருவனைக்குறித்து பரஸ்பர விருத்த ஆகமங்களை சொன்னால் அவைகள் அப்பிரமாண்யங்களாய் விடும். ஒவ்வொரு அதிகாரிகளைக் குறித்து வெவ்வேறுகள் சொல்லப்பட்டிருப்பதால் இவைகளொன்றுமப்ராமாண்யங்களல்ல அந்தந்த அதிகாரியைக்குறித்து அந்தந்த ஆகமங்கள் பிரமாணந்தான். ஆகமங்களெல்லாம் வேத அனதிகாரிகளுக்குப் பண்ணப்பட்டிருப்பதால் வேதாதிகாரிகளான வைதிகர்களால் இவைகள் ஸ்மரிக்கக்கூடத்தக்கதுகளல்ல ஜலப்பிரவாகத்திற்கு ஸமுத்திரமானதுபோலே ஸர்வமார்க்கங்களுக்கும் மஹேஸ்வரர் எல்லையாயிருக்கிறார். அதாவது எல்லாமார்க்கங்களுக்கும் பரமேசுவரனிடத்தில் தாத்பர்யமென்று கொள்க. எந்தெந்த பிரகாரமாக ஜனங்கள் ஈஸ்வரனை யுபாஸிக்கிறார்களோ அந்தமார்க்கத்திற்குத்தகுந்தபடி அவர்களுக்கு ஈச்வரன்பலன் கொடுக்கிறார். அவரது பிரஸாதத்தினாலே உத்தமமார்க்கங்களை மனுஷ்யன் அடைகிறான். அந்தந்த மார்க்கத்திலிருந்துகொண்டு ஈசுவரன் அவனவனுக்கு அனுக்கிரஹத்தைப்பண்ணுகிறார். சைவாகமாதி அனேகமார்க்கங்களில் பிரதிபாதிக்கப்பட்டதேவர்கள் படிப்படியாக வேதமார்க்கத்திற்குஹேது

க்களாயிருக்கிறார்கள். வேதமார்க்கத்திலிருக்கிற ஈசுவரர் ஸாக்ஷாத் தாய்முக்திக்குக்காரணமாயிருக்கிறார். இதற்குத்தாத்பர்யம் காமிகாதி ஆகமங்களில் குண்டமண்டபாதி புரஸ்ஸர தீக்ஷாஸம்ஸ்காரமடைந்து அதுகளில் சொல்லப்பட்டபடி அனுஷ்டானங்களைச் செய்துகொண்டு வேதங்களிலும் வேதாங்கங்களிலும் மிகவுஞ்சிரத்தையோடு நமக்கிந்த ஜன்மத்தில் வேதவேதாங்கங்களில் அதிகாரமல்லாது போய்விட்டதே ஜன்மாந்திரத்திலாவது அவ்வதிகாரங்கிடைக்கவேண்டு மீசுவரா. மஹாத்மாக்களில் மஹிமைதெரியாமல் கௌதமாதி மஹரிஷிகளுக்கு துரோகம் பண்ணினதினால் அவருடைய உக்கிரசாபாக்னியால் தகிக்கப்பட்டு வேதவேதாங்கங்களுக்கு அனர்காளாய் போய்விட்டோமே யென்கிற பச்சாத்தாபத்தை யடைந்து வைதிகாளுடைய பாக்கியமே பாக்கியமென்று வைதிகர்களிடத்தில் மிகுந்த பக்தியுடன் கூடினவர்களாய் காலத்தைக்கழித்து வந்தால் அடுத்த ஜன்மங்களில் ஸ்மிருதி புராணோக்த தர்மாதிகளுக்கு அருகமான த்விஜசரீரமெடுத்து அந்தஜன்மத்திற் செய்யப்பட்ட புண்ணியபரிபாகத்தால் அடுத்த ஜன்மங்களில் வேதோக்த கர்மானுஷ்டானஞ் செய்யத்தகுந்த விப்ரசரீரமெடுத்து அந்த ஜன்மங்களில் செய்யப்பட்ட சிரௌதஸ்மார்த்த கர்மபரிபாகத்தால் அடுத்த ஜன்மங்களில் ஸகுணநிற்கு ணோபாஸனை செய்யத்தக்க பிராமண சரீரமெடுத்து அதன் ஜன்மத்தில் செய்யப்பட்ட உபாஸனாபரிபாகத்தால் அடுத்த ஜன்மதநில் வேதாந்த விசாரத்திற்கு யோக்கியமான ஸாதன சதுஷ்ட யசம்பத்தி யுள்ள பிராம்மண சரீரமெடுத்து சத்குரு பிரும்ம நிஷ்டாளிடஞ் சென்று அவர்கள் பாதகமலசரணாகதியடைந்து அவர்களனுக்கிரஹத்தால் வேதாந்த மஹாவாக்கிய ஜன்யபிர்ம்மாத்மைகத்வக்ஞானத்தை யடைந்து மோக்ஷத்தை அடைவார்களென்று தாத்பரியமென விசித்திரம். பேசினர் மேலுமிவர் வேதமார்க்கத்திலிருக்கிற ஈசுவரர் ஸாக்ஷாத் மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கிறதென்று சொல்லி வந்தோம் அதற்குமேல் சுலோகங்களுக்கு அர்த்தஞ் சொல்வோம். வேதங்களிலுங் கர்மபாகத்திலிருக்கிற ஈசுவரர் ஞானசிரத்தையைக்கொடுக்கிறார், ஞானபாகத்திலிருக்கிற ஈசுவரர்ஞானத்தைக் கொடுத்துமோக்ஷத்தைகொடுக்கிறார். இதினால்ஸாதன சதுஷ்டய ஸம்பன்னனான வைதிக குலோத்பன்ன உத்தம பிராமணனுக்கு ஈசுவரன் க்ஞானத்தால் மோக்ஷத்தைக் கொடுக்கிறார். சைவாகமங்களி லிருக்கிற ஈசுவரன் கிர

மமாக படிப்படியாய் உத்தரோத்ர உத்தம ஜன்மங்களைக் கொடுத்து வேதாந்தமார்க்கத்தில் கொண்டுவந்து ஞானத்தைக்கொடுத்து மோக்ஷத்தைக் கொடுக்கிறரென்று சொன்னதினுல் வேதத்தைக் காட்டிலும் ஆகமமானது அத்யந்தம்நிக்ருஷ்டமென்றும் வைதிகனுக்கு தாந்திரீகன் அதிநீசனென்றும்,திடப்பட்டதென்று கொள்க. பரமுக்தியானது ஏகரூபமானது ஆகையாலே முத்திவிஷயஞானமும் ஏகரூபமாயிருக்கிறது நானுரூபமாகமாட்டாது. வேதாந்தமானது சங்கரஹோ ஸாக்ஷாத் நிற்விசேஷாத்வய ஸ்வரூபமாக சொல்லுகிறது. சைவாகமாதி மார்க்காந்திரமானது அப்படிச்சொல்லவில்லை. ஆகையால் வேதவாக்யத்திலுண்டாகிற ஞானந்தான் வித்தையென்று சொல்லப்படுகிறது. சைவாகமங்களாலுண்டாகிற ஞானமானது அவித்தைதான் வித்தையென்று சொல்லப்படாது. இதுயதார்த்த நிச்சயமாகையால் சைவாதியாகமங்களுக்கு முக்திவிஷயங்களில் பிரமாண்யமில்லை. முன்சொன்னகிரமப்படிக்கி வேதாந்தத்திற்குபரம்பறையாக காரணமானதைப்பற்றி கௌவுணமாக பிராமாண்யம் சொல்லப்படுகிறது. ஆகையால்தான் சாசுவதசுருதியானதுவேதாந்தபாகத்திலிருக்கிற மஹாதேவர் மற்றொன்றை அபேக்ஷிக்காமல் சாக்ஷாத் மோக்ஷத்தைக் கொடுக்கிறர். தாந்திரிகமார்க்கத்திலிருக்கிற மஹாதேவர் வேதாந்த ஞானத்தை யபேக்ஷித்து பரம்பறையாக மோக்ஷத்தைக் கொடுக்கிறர். சாக்ஷாத் மோக்ஷத்தைக் கொடுக்கிறதில்லை யென்பதுகருத்து. ஆகையால் வேதமார்க்கத்திலிருக்கிற வைதிகர்கள் ஆகமமார்கத்தை ஸ்மரிக்கவேகூடாது. வைதிகர்களுக்கு துர்பலமொன்றுமில்லை.அதாவது இந்த லோகத்தில்புத்திரமித்ரகளத்திரகிரஹாரம்பக்ஷேத்திரவித்யாதி ஜென்யசுகமும், ஸ்வர்க்காதிகளில் அரம்பாதிஸம்போக ஜன்யசுகமும் ஸத்தியலோகத்தில் உத்தமசுகமும் ஞானத்தினுல் பரமமுக்தியும் வேதத்தினுலேயே கிடைக்கக்கூடியதாயிருக்க ஆகமாதிகளாகவேண்டியது யாதொன்றுமில்லை ஆகமிகளுக்கு வேதத்தில் வந்துதான் பூர்ணமான போகமும்மோக்ஷமும் கிடைக்கவேண்டியதாயிருக்கின்றது. அதுகிடைக்க வேண்டியகிரமம் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது அதிகாரிபேதத்தால் ஆகமாதிகள் பிரமாணந்தான். ஈசுவரச்வரூபத்தையும் பத்தஹேதுவையும் பந்தத்தையும் அதின் ஸாதனங்களையும் வேதாந்தத்திற்கு விருத்தங்களாக சைவாகமாதிகள் சொல்லுகிறதுகள் அவையெல்லாமனுதி மாயையால் மோஹத்தையடைந்திருக்கிற அல்பபுத்திகளான வேத அனதிகாரி

களுக்கு பிரதிபந்தக பாபக்ஷயத்தின் பொருட்டும் அந்தந்த லோக பிராப்தி பலத்தைக்கொடுத்து வசீகரணம் பண்ணிவேத மார்க்கத்தில் கொண்டுவருவதற்காகவும் பரமேசுவரனாலே ப்ரவர்த்திக்கப்பட்டிருக் கிறதுகள் இளம்புல்லைக்காண்பித்து ஓடுகிறமாட்டை கிரகிக்கிறாப் போல் ஈசுவரனானவர் ஆகமாதிகளால் அல்ப பலத்தைக்காட்டி பின் னால்பரிபக்குவச்சித்தனுக்குவேதமார்க்கத்தில்கொண்டுவந்துஞானத் தைக்கொடுக்கிறார். மந்தாதிகாரிகளுக்கு ருசியை யுண்டுபண்ணு வதற்காக சைவாதி ஆகமங்களை பரமேசுவரர் சொல்லியிருக்கின் றார். அந்த மந்தாதிகாரிகளைக் குறித்து அவைகள் பிரமாணந் தான். அந்த புருஷாதமாளேயும் கடைத்தேரச் செய்வதற்காக ஒரு உபாயந்தேடி பரமகிருபாளுவான பரமசிவனபிப்பிராயம் நல்லதா கையால் அவைகளப்ரமாண்யமென்று சொல்லக்கூடாது. ஸத் ப்ரமாண மூர்த்தன்யமான வேதத்தில் கிரமமாக அதிகாறத்தை யுண்டுபண்ணி முன்சொன்னபடி ஜன்மாந்திரத்தில் ஞானத்தை யுபதேசிக்கக்கருத்துள்ளவராகையால் பரமேசுவரன் மிருஷாவாதி யல்ல. ஆனால் சகல மார்க்கங்களுக்குள்ளேயும் வேதமானது சர்வ சாதகமாகையால் ஹேத்விஜர்களே இப்படி யறிந்துகொண்டு வேதத் தில் பரமசிரத்தையைப் பண்ணுங்களென்று ஸ்லோகங்களுக்கு அர்த் தம். இவ்விடத்தில் தெரிந்துகொள்ளவேண்டிய ரகசியமென்ன வென்றால் சைவாதி ஆகமங்கள் பரமசிவனால் செய்யப்பட்டதாகை யால் நமக்குங்கிரகிக்கத்தக்கது தானென்றிருக்கால் சிலமந்த வை திகாளுக்கு ப்ரமமுண்டாகியவைகளை அவர்கள் கிரகித்துக் கெட்டுப் போகக்கூடாதென்று கிருபையால் உபஸம்ஹார சுலோகத்தால் மஹரிஷியானவர் வியவஸ்தைபண்ணி முடிவு செய்கிறார். ஹே! பிராம்மணளே ஈசுவரன் பண்ணினதினால் சைவாக மமுத்தமமென் றால் புத்தாகமம் ஆர்ஹதாகமம் லோகாயதம் இவைகளும் ஈசுவர னால் பண்ணப்பட்டபடியால் உத்தமங்களென்று சொல்லவேண்டிய தாய்வரும். அவைகள் ஆஸ்திகாளுக்கு பிரமாணமல்ல வென்றால் சைவாதியாகமங்கள் வைதிகர்களுக்கு ப்ரமாணமல்ல ஆகையால் கௌதமாதி ரிஷிகள் சாபத்தால் இவர்களின் வேதாதிகாரன் தகிக்கப் பட்டுப்போனதினால் இந்த பிருஷ்ட பிராம்மணதமர்களுக்குச் செய் யப்பட்ட காமிகாதியாகமங்கள் வைதிகர்களுக்கு ஒருக்காலுங் கிர கிக்கத்தக்கதுகளல்ல பூர்வஜன்மபாபத்தால் சூத்திர சரீரமெடுத்த ஜாதிசூத்திரரும் இந்த ஜன்மத்தில் பாதகமில்லாதவர்களும் ஆகமத்

உநுகலு ஊஷாஹுதம் | ஜாமாஹ ஸூஊதநுகலு ஞெுதி கீதிூதம் | என்னும் பரவித்யா வாக்கியத்தால் விபூதி நான்குபிரகாரமெனவும், அவை கல்பம் உபகல்பம், அனுகல்பம், அகல்பமென பேத மூன்றுளதெனவும்,விரஜாநலம்சிவதீக்ஷாபரமாயுள்ளது. கல்பமெனவும், சிவோத்ஸவாதிகளிலும், சிவபிரதிஷ்டாதி சிவபாகத்திலுண்டானது. உபகல்பமெனவும் சிவாக்னிஹோத்திரத்தில் அதாவது சிவாகமோக்தமான அக்னிஸம்ஸ்கார ஈசானுதிபிரும்மபஞ்சகவித்யாதேகஹிருதையாதிஷடங்க கல்பனூரூபமான சிவாக்னியிலுண்டானது அனுகல்பமெனவும், ஜாடராக்னிபரமான வைஸ்வாநராக்னியிலுண்டானது அகல்பமெனவுங்கூறியிருத்தலால் வற்றுள் ஸர்வஜனபரிக்கிரஹீத பஸ்மாவொன்றும் தாம்மாத்திரமணியத்தக்க பஸ்மாவொன்றுமாய் பேதப்பட்டு நிற்கும், கலூாதி சுநுகலூாஞம் ஸவெுவிவஸி஗ுஹெஸ | சுகலுஉநெு ஸவெுவிந஗ுஹீதம் கஉாவந| ஶிவாஉநுதூ ஊூதுுளவயெ ஜகுூயெந தீக்ஷிதாஃ | தெஷாஉஹூம வஉாயாயுஉகலுஉ ஶிவம் யுவம். | என்னும்பரவித்யாவாக்கியத்தால் கல்பம்முதல் அனுகல்ப்பர்யந்தம் எல்லாஜனங்களாலுங் கிரஹிக்கத்தக்கதெனவும், அகல்பம் அன்யர்களால் ஒருக்காலுங் கிரஹிக்கக்கூடாதெனவும், சிவபெருமானுக்கு அன்யமானமூர்த்தியிடத்தில் பக்தியுடையவர்களும் சிவதீக்ஷையற்றோர்களுமான இவர்கள் அகல்பத்தை ஸதாதறிக்கத்தக்கவர். இவை அமங்களத்தைஉண்டாக்கும் நிச்சயமெனக்கூறியிருத்தலால் சிவாகமநிஷ்ட பஸ்மாவிசேஷமும் ஸர்வஜனபரிக்கிரஹீதமும் வைசுவாநராக்னிபஸ்மா தமக்குமாத்திர மணியத்தக்கது. சிவபாகமற்ற அகல்பமாதலால் இவைஅமங்களத்தை யுண்டாக்குமெனவுங் கூறியிருத்தலால் நிர்மூலதர்ம்மமானகேவலதந்திர நிஷ்டபஸ்மா அசுத்தமென்பது தீர்மானம். இதுமட்டோ வஊகவஊவ அஜாவெஷொவெஉாயுஷெ்ஹகவஊவது | தஉாவிஊநிஶாஉூுஶா ஸ்ரா வாஹெஷெநஹெஷிதாஃ|சுநஞாவெஷிஜா வெஉாவெஉாயொுவி ஷிஜொதூஉாஃ| சுநஞொவெஉவெஉஸூஶஂகாஸூஶிவஸூது| என்னும்வாக்கியத்தால் வேதம்ஒன்றும்,வேதார்த்தமாகிய சிவாகமமொன்றுமாய் வேதம், சாகாபேதமாய் அநந்தபிரகாரமாம், வேதார்த்தமான சிவாகமங்களும் அநந்தபிரகாரமாகும், இவ்விரண்டும் சிவ

ஸம்பந்தமாயிருத்தலால் ஓரேபிரமாணமுடையதென்க் கூறியிருத்தலால்வேதார்த்தமாகிய சிவாகமத்தால் கூறியுள்ள விரஜாநலாதி அநுகல்ப பர்யந்தமுள்ள பஸ்மாவையே அணிதல்வேண்டுமென்பதுவேதற்றுணிபாம், அகல்பம் முதலியவை பாசுபதர்முதலினோர் அணியத்தக்கது. பாசுபதர்சிவதீக்ஷை அல்லது அக்னிரித்யாதி அதர்வண மந்திரங்களால் விபூதியிடுபவர்கள் இவை நிஷேதமென்பதாய் சூதசங்கிதையில் கூறியுள்ளவசனங்களை எண்டெடுத்துவிளக்குவோமாக

யத்யத்யாதூ [illegible] க்ரஹணம் வ்ரதம் ।
அக்நிரித்யாதிபிர்மந்த்ரைர் க்ருஹீத்வா பஸ்ம பாண்டுரம் ।
ஸர்வாங்கோத்தூளநம் யத்து வ்ரதம் ப்ரோக்தம் மநீஷிபி: ।
ததேதச் சிரோநிஷ்டா: ப்ராஹு: பாஶுபதம் புதா: ।
கேசிச்சிரோவ்ரதம் ப்ராஹு: கேசிதத்யாஶ்ரமம் விது: ।
கேசித்து வ்ரதமித்யூசு: கேசிச்சாம்பவமைஶ்வரம் ।
ஸர்வவ்ரத [illegible] ஸம்ஸ்திதம் ।
ஸர்வபாபஹரம் புண்யம் ஸம்யக்ஜ்ஞாநப்ரகாஶகம் ।
[illegible] வ்ரதேநாநேந ந த்யஜேத் ।
[illegible] நிஶ்சய: ।
[illegible] ।
அநேந விதிநா யுக்தோ பஸ்மஜ்யோதிர்பவிஷ்யதி ।

என்னுஞ் சூதசங்கிதைவாக்கியத்தால் தர்மத்தை பிரயோஜனமாக உடைத்தானதற்கும் ஆத்மசுத்தியின்பொருட்டும் ஸ்வல்பமாகக் கிரஹிக்கக்கூடியது விருதம் அப்படிக்கில்லாவிட்டால் அதர்வண மந்திரங்களினலே சுத்தவெளுப்பான பஸ்மாவை கிரஹித்து ஸர்வாங்கங்ளிலும் உத்தூளஞ்செய்துகொள்ளவேண்டியது யாதொன்றுண்டோ, அது புத்திமான்களாலே ஒருவிருதமாகச் சொல்லப்படுகிறது. இந்த விருதத்தைத்தானே வேதாந்திகள் பாசுபதமென்கிறார்கள் ஹேமுநிசிரேஷ்டர்களே சிலபேர்கள் சிரோவிருதமென்கிறார், சிலர் அத்தியாசிரமமென்கிறார், சிலர் தத்விருதமென்கிறார், சிலர்சாம்பவமென்கிறார், சிலர் ஐசுவரமென்கிறார், எல்லாபாபத்தையும் போக்கடிக்கத்தக்கதாயும் செவ்வையாக ஞானத்தை பிரகாசப்படுத்துவதாயும் உள்ள இந்த விருதத்தினுடைய மாஹாத்

மியத்தை ஆகமாந்தரங்களில் வைக்கப்பட்டிருக்கின்றது. யாதொரு பசுவானது இந்த விருதத்தினுலே தன்னுடைய பசுத்வத்தை விடவில்லையோ அப்படிப்பட்டவனை கொன்றவனுக்கு பாபமில்லையென்பது வேதாந்தத்தின் நிச்சயம் ஹேமுனிசிரேஷ்டர்களே சுருக்கமாகவெல்லா நியமங்களும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விதியில் சொல்லியிருக்கிறபடி அனுஷ்டித்தானுனல் அவன் பஸ்மஜோதிஸ்ஸாக ஆகிறான், எனக்கூறியிருத்தலால் வேதார்த்தமான சிவாகமத்தில் ஆத்மா பசுவெனவும், பதிபரமேசுவரனெனவும், ஆணவம், மாயை, கர்ம்மம், பாசமெனவும்,இப்பாசம்பசுவாகிய ஆத்மாவை பந்தித்துள்ளதெனவும். இப்பாசத்தை ஆச்சார்யன் ஞானுக்னியால் தகித்து சிவதீக்ஷையால் பசுத்வநிராகரணஞ் செய்து சிவத்வத்யோதகஞ் செய்தல் முக்தியெனவுங் கூறுதலால் இச்சிவதீக்ஷையை சிவாச்சார்யமுகமாய் அடையாது பசுத்வமுடைய வொருவனைக் கொன்றுல் தோஷமில்லை யென்பது சூதசங்கிதையின் றுணிபாம். இவ்வாறு வேதாந்தமே அறுதியிட்டிருக்கின்றதென சூதசங்கிதையே கூறுவதால் சிவதீக்ஷைபெறாதோர் வேதாந்தி மஹாப்பிராமணாதலெங்ஙனம் பாசுபதம், விருதம் இதுகள் யாவற்றிலுஞ் சிரந்ததாயிருக்க யிவற்றிற்குக் குறை கூறுதலெங்கனங் கூடுமெனின் சூதசங்கிதை முதலிய பிரமாணங்கள் பசுத்வத்தைப் போக்கி பதிப்பொருளோடொன்று பட்டுநிற்றலை சிவாகமவாயிலா யுய்த்துணர வழிகாட்டி நிற்றலின் இத்திர முணராதோற் கெட்டுணையும் அவ்விருதம் பயன்படத் தக்கதன்று மாகாத்மியமற்ற கேவலபாசுபதம் விருதமாத்திரமாய் அமயப்பெறுமன்றி பசுத்வமோசகமாகக்காரணமில்லை. பசுத்வமோ சகத்திற்கு வேதஞ்சிவாகமத்தை விரும்பி நிற்கின்றது. இச்சிவாகமக்கருத்தை யிங்ஙனமாராய்ந் தறியாதோர் கேவலபாசுபதாளாகின்றுர். இக்கேவல பாசுபதாள் வேதக்கருத்தை வேதார்த்தமாகிய சிவாகமத்தாலறியப்புகாது தாம் வேதவாதியென வீண்டம்பங்காட்டி நிர்மூலமான மன்வாதி கேவலதந்திரம்புக்கி பாசுபதவிருதமகிமை யுணர்வதறிதாய் அதர்வண்மந்திரத்தால் விபூதிகுழைத்திடுதலை பாசுபதமென மயக்குற்று பசுபதிவிமுகாளாயிருத்தலாலிவர்கள் கேவலம் பஸ்மதாரணம்மாத்திரங் கைப்பற்றி பசுபதியின்னுரெனப் பகுத்துணராது சிவம், விஷ்ணு முதலியபேதமற்று பின்போயிவ்விருவர்களும் மித்தைபிரும்மஞ்சத்தியமெனப்பிரமித்து பிரும்மம்யார்,நீர்யாரென்னுமிடத்தில் எம்மை

த்தவிர பிரும்மம் வேறொன்றில்லை யெனவும், யெமக்கன்யம் பொ ய்யெனவும், தம்மை பதிப்பொருளோடொன்று சேர்க்கமேர்க் கூறிய கேவல தந்திர நிஷ்டபாசுபதம் முயல்வதால் மஹாராஜா யாமென மயக்குற்றுக் கூறுவோன் ராஜாக்ஞையால் தலையறுப்புண் டுபோவதுபோல் சிவபெருமான் பிரும்மஸ்வரூபியாயிருக்க யிங்ங னங் கேவலபாசுபதர்தம்மை பிரும்மமாகக்கூறிக்கொள்வதால் இவர் களையும் சூதசங்கிதை முதலியஸத்பிரமாணங்கள் சிரச்சேதஞ் செய் யவற்புருத்தியிவற்றால் தோஷமுண்டாகாதென மேலுங்கூறியிருக் கின்றது. இங்ஙனமுற்றோர் பாசுபதம் உயர்வாதலெங்ஙனங்கூடும். உண்மை நூற்களில் ஜீவவதை புறிவதைக்குற்றமாய்க் கூறியிருக்க யிங்ஙனஞ் சூதசங்கதைகொன்றாலுந் தோஷமில்லையென்பது கூடு மோவெனின் ஜகத்ஜீவேசுவரர் முதலிய முப்பொருளும் ஒப்பியவற் கன்றோ ஜீவவதை கூடாதென்பதை கோடலமைவுடைத்து யாமே பிரும்மமென்பாற்கு கொல்பவரும் பிரும்மந்தான். கொல்லநின்ற தும் பிரும்மந்தான். பிரும்மம்பிரும்மத்தைக் கொன்றதால் தோஷ மாதலெங்ஙனம் தற்கொலைதோஷமாய் கூறியிருத்தலால் பிரும்மத் தைக்கொன்றதாலுந் தோஷமுண்டாகுமெனின் கொன்றபிரும்மத் திற்கு கொல்லும்பிரும்மமித்தை கொல்லும்பிரும்மத்திற்குக் கொல் லநின்ற பிரும்மம்மித்தை யிவற்றால் கொன்றதென்பதும் மித்தை யாய் முடிதலால் கேவல பாசுபதர்மதரீதியாய் கொலை, காமம், கட் களவு முதலியமஹாபாதகங்களும் யோக்காரணமில்லை யாதலின் சூதசங்கிதையுமங்ஙனமே கூட்டிமுடிக்கத் துணிவுற்றது. அங்ஙன முங் கொன்றாலுந் தோஷமில்லையெனக் கூறியிருத்தலால் ஸ்வமதம் பற்றி உம் என்பது கூடாதென்பதை விளக்குவதால் கொலை செய்வது கூடாதென்பதே சூதசங்கிதையினந்தர்க்கதம் இங்ஙனங் கூறியதற் குக்கருத்து யாதெனில், குண்டமண்டலாதி தீக்ஷாபுரஸ்ஸரமாய் பசுத்வத்தைக்கொன்று பதித்வத்யோதக சிவதீக்ஷை செய்தல்வே ண்டுமென்பது கருத்து. இவற்றால் சிவாகமத்திற் கூறியபரஸம்ஸ் காரமாம் அதீந்திரியவிஷய சிவதீக்ஷாதி ஸத்பாவம் ஆத்மபாவத்தி ற்கு உறியதென வேதசிவாகமங்கள் சாதித்திருத்தலை சூதசங்கிதை யும் அவற்றை மேற்கோளாக்கி கூறத்துணிந்தது. நமது நண்பர் குண்டமண்டபாதி புரஸ்ஸரமான சிவதீக்ஷையை நிந்திக்கப்புகுந் தார் இந்நிந்தை வேதபாக்யர்களாகிய காணுதகாபாலமன்வாதிக ளான ப்ரச்சன்ன பௌத்தர்பரத்தொதுக்கி இந்நாஸ்திகரை சிறச்

சேதம் செய்தல்வேண்டுமென சூதசங்கிதை பொருள்கூட்டி முடித்து திரஸ்கரித்திருத்தலால் இவர் நிந்தைகனம் பெருமாறெங்ஙெனம் இங்ஙனம் கேவலபாசுபதர் இன்னாரென்பதாய் பிரமாணவாயிலாய் விளக்கியுளளோமாதலால் கௌதம சாபம் இப்பாசுபதர்க்கே பற்றத்தக்கது ஸ்ரீமத் ஜகத்குருமணியான ஆதிசைவர்களையே பற்றுமெனின் மேல்படி சாபப்பிரகரணத்தில், ஜஹாதெவவஸூஹக்ஷளவ எனவும் ஜஹாதெவவஸூவிஜகூர்ரெ எனவும் மஹாதேவ பக்தர்களாகிய ஆதிசைவர்களிடத்திலும் மஹாதேவஞானமாகிய சிவாகமங்களிடத்திலும் விமுகாளாககடவதென கூறி ப்ராம்மணாதமாளாகக்கடவீரென சபித்திருப்பதால் இவை சிவபக்தாளான ஆதிசைவ பரமாச்சாரியர்களை பற்றுதலெங்ஙனம் மேல்படி கௌதமரிஷி இறுதியில் அரிதியிட்டுக் கூறியதாவது வெகுவிரிவாய் சொல்வதினால் யாதிருக்கின்றது. பிரத்தியக்ஷத்தில் ஸம்ஸாரமோசகரான சிவபெருமானிடத்திலும் அவர் சம்மந்தமான எல்லாசுருதியாகிய சிவாகமங்களிலும் அவர் சம்மந்தமான ஸ்மிருதிகளாகிய நான்கு வேதகங்களிலும் உங்களுக்கும் உங்கள் வமிசத்தாருக்கும் சிரத்தையற்றுபோகக்கடவதென சபித்திருப்பதால் இச்சாபம் ஆதிசைவர்களிடம் எட்டுணையும் நேரக்காரணமில்லை. ஆதிசைவர்கள் வேதாந்தரூபமான பரவித்தையாஞ் சிவாகமத்தையும், ருக்காதிவேதரூபமான அபரவித்தையாகிய வேதங்களையும் மற்றுமுள்ள பிர்ம்மஸ்ரூப விஷயமான சிவோபாசனைக்கு விரோதமற்ற புராணாதி ஹாஸங்களையும் ப்ரமாண ஆராய்ச்சியில் முதற்கண்வைத்து ஆராயப்புகும் சாதுக்களாதலின் இவர் பாத்துற்ற ப்ரமாணம் இருதிறத்திலும் வேதப்ரமாணமாய் நிலைநிற்றலால் இவரையன்றி அத்வைதிமஹாபிராமணன் வேறொருவர் இருப்பதாய் மயக்கப்பொருள் வருவித்துக்காட்டியது விகர்ப்பவுணர்ச்சியாம்அந்தோகலிவலிதடித்துகூறும் உன்மத்தவுரை உல்லங்கனப்பட்டொழிந்தது நமதுநண்பர் இங்கனமுற்று நோக்காது. அத்வைதிமகா பிராமணன், வேதாந்திமகாப் பிராமணன், யேகான்மவாதி மகாபிராமணன், பிரதிபிம்பவாதி மகாபிராமணன், பிரச்சந்நபௌத்த மகாபிராமணன், பரிணாமவாதி மஹாபிராமணன், கிடாபிர்ம்மவாதி மஹாபிராமணன், மாயாவாதி மஹாபிராமணன், சுராமாம் ஸபுக்தவாதி மஹாபிராமணன், நிர்மூல தர்மவாதி மஹாபிராமணன், அக்னிதெய்வ தாத்மகவினைவாதி மஹாபிராமணன், மித்தியாவாதி மஹாபிராமணன் இவ்வா

றுள்ள் பிராமணவிருத்தங்களான நிஷேதமுடைய யிவர் பிராம்ம ணரென்றும் சொல்லெங்கனு மொருங்கே கைப்பற்றி தன் தலைமே லேற்றி மகிழ்வுரவிரும்பியது சாலச்சிரிப்புடைத்தே இவர்கள் இவ்வ ஸப்பியவாதப்படுகுழி வீழ்ந்து தத்தளித்து மீளாநரகிர் க்காளாய் வாணுளை வீணுளாய் போக்கும் தீயநெறியுடையாற் வேதார்த்தமா கிய சிவாகமத்தை உற்றுநோக்கி நல்லரங்கைப்பற்றுது வேதப்பிரா மணர்போல் தன் தலைநீட்டி நிர்மூலமான மன்வாதிஸ் மிருதிகளை வேதார்த்தமென மயக்குற்று இவ்வேத விருததார்ச்சார படுகுழி வீழ்ந்து ஜீவஹிம்சை நிறைந்தயாகாதிகிருதுக்களை சத்காரியமென கைப்பற்றி கள்ளும் புசிக்கவிரும்பும் இச்கேவலதற்திர பிரவிஷ் டர்களை சூத்திரரிலும் கடையாய் ஒதுக்கவன்றோ வேதாகமங்கள் விதித்திருக்கின்றது.

இவர்கள் பாசுபதானுஷ்டானி போற்பூதிசாதனத்தாற் ஸ்தூல வடிவில் தோற்றிநம் பசுபதியை கைப்பற்றி சிவானந்தானுபவ வே த்தியமான பாசனசபசுத்வ நிராகரண சிவதீக்ஷாதிபரஸம்காரமின் மையின் இங்ஙனமிவர் பசுபதிவிமுகாளாக காறணமாயிற்று. இக் கேவலபாசுபதம் உபாசனையற்று விருதமாத்திரமாய் கைப்பற்றி நிற் பதிமுக்காம் உபாசனை நித்தியமும்விருதம் நைமித்திகமுமாய் முடி தலால் நித்யத்தை கைவிட்டு உபாசனையற்ற நைமித்திகத்தில் அல க்கணுற்றழிபவர் பவுத்தரிலும்கடையானேரென்பதி லென்னதடை புத்தர் உபாசனு மூர்த்தியாகிய அப்ரத்தியக்ஷவஸ்துவான பதிபொ ருள் இல்லையென ஆசங்கைபூண்டு ஜகஜ்ஜீவர் உள்ளபொருளென சித்தாந்தித்து நிற்பதால் இவர்களுக்கு அப்ரத்யக்ஷவஸ்து இன் மைப் பொருளாகின்றது. மேற்கூரிய கேவலதந்திர பிரவிஷ்டர்கள் முதலில் உபாசனை செய்பவர்போல் மயக்குற்று அவ்வுபாசனை விருத ரூபமான நைமித்திகத்தில் கழித்து இதற்கன்னியம் பிர்ம்மஞ்ஞான மொன்றிருப்பதாய் பிரமித்து யாம்பிர்ம்மமென்னும் மமதைமேலீட் டத்தால் ஜெகஜ்ஜீவேசுரர் முதலியமுப்பொருளும் மித்தையே இறு தியால் கூறிமுடித்தல் புத்தர் அபிமதத்திலும் தாழ்ந்ததேயன்றோ அவர்கள் இருபொருளை யொப்பிமைத்தொன்றில்லை யெனக்கூறு கின்றூர் இவர்கள் முப்பொருளும் பொய்யெனகூறுகின்றூர். இவ் விருதிறத்தாருள்ளும் யாவர் ஆஸ்திகரென்பதை விவேகிகள் ஊகித் துணரக் கடவாராக, திருடன் ராஜகிரகம்புகும் பெரும்பாக்கியம்

கிட்ட பெரினும் அவர்சொத்தை தன்னதாக பாவித்து திருடுவதுடன் ராஜாங்கமான கிரீடத்தை தந்தலைமீதேற்றி சிம்மாசனமேறி இராஜ்ஜியாதி பத்தியம் செய்யத்துணிவாறுயின் அவனது சிரம் இராஜாச்ஞையால் ஏன் கண்டிக்கப்படமாட்டாது இதுபோல் சிவபெருமான் பிரம்மஸ்வரூபியாய் இருத்தலை யறியாது அப்பரமானுர் கற்பிக்கப்பட்ட அவரது சொத்தாகிய உலகம்யாவும் தம்மதெனஸ்வீகரித்து திரும்பஅவற்றை மித்தையென வாயால்ப்பொய்சொல்லி முடிபில்யாமே பிர்ம்மம் எம்மைத்தவிர பிர்ம்மம் வேறொன்றில்லையென இவர்கள் சிவஸ்தானமுற்று நிற்றலால் இக்கேவல தாந்திரீக பாசுபதர்கள் சிறத்தையும் வேதாகமங்கள் துணித்தலுசிதமென விதிமுகத்தால் கூறவிடம்பெற்றது. இங்ஙனமுற்றபாசுபதாளாகவேயன்றோபோகக்கடவதாய் மகாத்துமாவாகிய கௌதமரிஷியும் சபித்திருக்கின்றார் இவற்றை ஆதிசைவ பரமாசார்யமூர்த்திகளின்மேல் ஏற்றி தூஷிக்கமுயன்றது வேதார்த்தம் தெரியாதோர் இயற்கையாம் இங்ஙனம் கேவலதந்திரத்தை ஆதிசைவர்கள் கைப்பற்றாமையால் பிருஷ்டராதல் யாங்ஙனங்கூடும். இவை துலுக்கற் பிராம்மணரை தமது குரானிற்கூரிய தர்மங்களை அனுசரித்துய் யாததால் அவைதீகர் எனவும் பிராம்மண ப்ருஷ்டரெனவும் குறைகூறுதலையொத்திருக்கும் சைவர் என்பது ஆதிசைவர், மகாசைவர், அனுசைவர் அந்தியசைவர் முதலியயாவருக்கும் பொதுப்பேராதலால் இச்சமயத்துற்றோர் சுரா மாம்ஸம் புசிக்க கனவிலும் விரும்பார் இவற்றுள் ஆதிசைவர் சிவப்பிராம்மணரும் மகாசைவர் இவர்களிடம் சிவதீக்ஷைபெற்ற பிராம்மணரும் அநுசைவர், க்ஷத்திரிய, வைசியர்களும், அந்தியசைவர் ஸத்சூத்ரிகளும் ப்ரவரசைவர், அனுலோமர்களும்அவாந்தர சைவர் பிரதிலோமர்களும் ஆவார்கள் இவ்வெழுவகை பேதமுடைய சைவஸமியிகள் மேற்காட்டிய நிர்மூலதர்மங்களை ஒருபோதும் கைபற்ற விரும்பார் ஆதிசைவர்முதல் அவாந்தரசைவ மிறுதியாக எழுவகை சைவர்களை நீற்று ஜிஹ்வாசாபல்லியத்தால் சுராமாம்ஸம் புசிப்போரை புலையரெனவன்றோ வேதாகமங்கள் கழித்தொதுக்கி இருக்கின்றது இங்ஙனமுற்றோர் சைவஸமயிகளை தூஷித்தல் எங்கனம்கூடும் தத்காலமுள்ள உலகவழக்கிலும் நீ சைவனு அசைவனுவென ஆசங்கிக்க மாம்ஸம் புசிப்போர் அசைவரெனவும் மாம்ஸசம்புசியாதோர் சைவரெனவுமன்றோ விடையளித்துவருகின்றார். இங்குற்ற அதினீசம்பெற்ற மாம்ஸம் புசித்தலை நிர்மூலதர்ம

மாகிய மன்வாதி ஸ்மிருதிமேற்கோளாய்கொண்டிருக்கின்றது அந்தோ கொடிது கொடிது, சூத்திரரிலும் சைவ அசைவபேதத்தால் ஸத்சூத்ரீ அஸத்சூத்திரீ என பேதமிருகூறுயிருத்தலின் அஸத்சூத்ரீ ஸத்சூத்திரியை தமது தீயசெயலையுற்றுணராது தூஷிக்க முயல்தலுங்கூடும், அதுபோல் பிராம்மணருள்ளும் சிவப்பிராம்மணர்களை தாழ்த்தநினைப்போர் அஸத்பிராமணர்களே யாவார்கள். அஸத்பிராமணர் தாம் ஸதாசாரமாக கைக்கொண்டயாகாதி கிருதுக்களில் ஜீவ ஹிம்ஸை ஆவசிகமென கைப்பற்றியிருத்தலால் வேதத்தை நோக்க வேதார்த்தமாகிய சிவாகமங்களில் ஜீவஹிம்ஸை அறவே நீங்கப் பெற்றிருக்க தாம்ஸத்காரியமாய்கொண்ட தீயவழியை நீக்கமுயலும் சிவாகமங்களில் பொறுமைகொண்டு சைவமதமே கிடையாதென தூஷிக்க முயன்ற அவஸரம் எங்ஙனே கனம்பெரப்போகின்றது சூத்திரரிலேயே ஸத்தஸத்துவிசாரம் வேதாகமங்கள் கூறத்துணிவுற்றிருத்தலால் இங்ஙனம் பிராமணபரத்தும் இவைவிதியாகா தொழிதலெங்ஙனம் இவற்றால் மாமிஸம் புசிக்கும் பிராம்மணன் அஸத்பிராம்மணனெனவும் அவை புசியாதோர் ஸத்பிராம்மணனெனவும் பேதப்பட்டு அஸத்தைநோக்கஸத்து உயர்வுற்றிருத்தலின் அஸத்தைகழித்து ஸத்தை மேற்கோளாய் வேதாகமங்கள் முடிபொருளாக்கி கூறுநிற்கும் இங்ஙனமுற்ற பிராமணருள் பிரவியால் பிராமணத்துவம் பெற்றவரும் ஸம்ஸ்காரத்தால் பிராமணத்துவம் பெற்றவருமாய் இறுகூராவர் பிறவியால் பிராமணத்துவம் பெற்றவர் ஆதிசைவபரமாச்சாரிய மூர்த்திகளும் ஸம்ஸ்காரத்தால் பிராமணத்துவம் பெற்றவர் பிறவியால் பிராமணத்துவம் பெற்றவரிடத்தில் தீக்ஷிக்கப்பட்டு மகாசைவராவார்கள் பிறவியால் பிராமணத்துவம் பெற்றவர் ஆச்சாரியரும் ஸம்ஸ்காரத்தால் பிராமணத்துவம் பெற்றவர் சிஷ்யருமாய் சொல்லப்படும். இவ்விருதிறத்தாரும் குருசிஷ்யபாவத்தால் ஸத்பிராமணரென்பதே வேதாகமற்றுணிபு, இங்ஙனமன்றி பிரவியாற் சூத்திரராய் ஸம்ஸ்காரத்தால் துவிஜத்துவம் பெற்று சிவதீக்ஷாதி பரஸம்ஸ்காரமில்லாதவர் அஸத் பிராமணரென்பது முடிபாம் மேற்குறித்த ஸத்பிராமணர் அஸத்ப்பிரம்மணர் இருவருள்ளும் ஆதிசைவபிராமணர்கள் மோக்ஷார்த்தமான ஸ்திரலிங்கபிரதிஷ்டாதி ஆலயங்களில் நித்யம், நைமித்திகம், காமிய மென்னும் பிரதிஷ்டை உத்ஸவம் பிராயச்சித்தாதிசிவ கைங்கரியங்களை செய்தல்வேண்டுமெனவும் மகாசைவர்கள் இவ்வாச்சாரியசிவகைங்கரியத்திற்கு தக்க

வாருபரிசர்யாதிகிரியைகளை செய்தல் வேண்டுமெனவும் இவை பரம ஹம்ஸஞகியவேதாந்திக்குவிசேஷவிதியாய் கூறியுள்ளதெனவும் சூத சங்கிதை ஈண்டெடுத்து விளக்கியுள்ளதை நோக்குமளவில் ஆதிசை வபிராமணன் மகிமைபரமஹம்ஸஞகிய ஸங்நியாசிக்கும் கிட்டுதல் அரிதன்றே, இவ்வாதிசைவ மஹாசைவ சிவகைங்கரியபராளான ஸாதுக்களுக்குள் ஆதிசைவர்களுக்குசிவாலயத்திற்குள்ளேயே கிரமம் மரியை என்னும் நான்காவது பிரகாரத்திலும் மகாசைவாதி அந்திய சைவமிறுதியாக சிவகைங்கரியபராளான சிவபக்தர்களுக்கு மகாமரி யை அதாவது ஐந்தாவது பிராகாரத்திற்குள்ளேயும் மற்றுள்ள அசைவர்களுக்கு ஆலயத்திற்கு வெளியே அவரவர் பரிபாகத்திற் கேற்றவாறுபத்தனம். ராஜதானி, புரம், நகரம், கிராமம், குப்ஜகம், கேடகம், முதலிய பேதங்களில் மகாருஜாக்கள் அவரவர்க்கு இருப் பிடங்கல்பித்து ஸ்தாபித்தல்வேண்டுமென மெய்நூல் கூறி யிருத்த லால் அஸத்பிராமணர்களாகிய கேவலதந்திர நிஷ்டாளான நிர்மூல தர்ம்மமுடையாரை இச்சிவகைங்கரியத்தில்பிரவர்த்திக்கசெய்தல் கூ டாதெனவும் பிரவர்த்திப்பாராயின் ராஜராஷ்டிரம் முதலியவற்றிற் கு ஹானி உண்டாமெனவும் இவர்களுக்கு சிவபூஜை நைமித்திகமாத லின் இவர்கள் சிவபூஜைசெய்தல்கூடாதெனவும் ஆத்மார்த்தத்திலும் சிவதீக்ஷை யன்றி சிவபூஜை கைப்பற்று வராயின் இவர்களுக்கு தேவலகத்து வாதிதோஷமேறிச் சண்டாளராவாறெனவும் இச் சண்டாளர்களை மகாருஜாக்கள் கவனித்து புத்தர் ஆர்ஹதர்முதலிய கிரகத்திற்கு வெளியே வீடுகட்டிக்குடிப்புகச்செய்தல வசியமெனக் கூறியுள்ள விதியை உற்றுணர்ந் தடங்காது ஸாதுக்களை இங்ஙன மாக்க முயன்றது விசாரணைக் குறைவாம் ஆதிசைவ பரமாச்சாரிய மூர்த்திகள் சிவஸ்வரூபி யாதலால் இவர்களை திருக்கோயிலுள் வை த்து மகாருஜாக்கள் கும்பிடுதல் வேண்டுமெனவேதாக மங்கள்விதி த்திருக்கின்றது. இவற்றை யறியாவேத பாஹயர்களான சிற்சிலர் கலிவலித்தடிப்பால் இச்சத்பிராமணர்களை ஆதிசைவா ளென்கிற அமேத்தியங்களானதுகள் எனவறையத் துணிந்தனர் பன்றிகள் ஷட்ரஸோபேதமான அமுர்தமிருப்பினும் இதமிவற்றைகைக்கொள் ளாது அமேத்யமே தமக்குணவென புசித்து வருவதுபோல் இச் சூகரம் ஸாதுக்களாகிய ஆதிசைவர்களையும் தமக்குணவாக அமே த்தியமென கூறத்துணிந்தது கட்குடிப்போர் ஆறு குளம், குட்டை, முதலியயாவும் கள்மயமாய் நிற்குமாயின் நாம் குடித்து கூத்தாடுவ

தற்கு அனுகூலமாமெனகருதும் குடியற்கதை போலாயிற்று சிவன் விஷ்ணு பேதமற்றுகூறும் ஒருவர் பன்றிக்கொப்பாவரென நாம் மேலெடுத்து விளக்கிய விஷயமாதலின் ஜாதிக்கேற்ற புத்திநீனிக் கேற்றலத்தி என்பதுபோல் தாம் மனிதராயிருப்பினும் பன்றியுரு வழாவேசித்து தமக்குணவான அமேத்யத்தை புசிக்க விரும்பியது. ஸஜாதீயத்தாலுற்றசெயலேயன்றி வேறன்று, அந்தக னொருவன் குதிரையை கழுதையென்றாலும் மனிதனை நாயென்றாலும் கண்ணு ள்ளோர் ஒப்பாருதலின் இவர் கூறிய அமேத்யபதம் ஸாதுக்கள் இவர்க்கேசொந்த ஸ்தானமாக்கிவிடுவர், சிவ தூஷணத்தால் நிறையம் தமக்குறிய ஸ்தானமாயிருத்தலால் பின்வரும் துன்பம் ஈதென்ப தை நம்பரமன் அறிகுறியாய் இவர் வாக்கினிடமிருந்து உற்பவிக்கச் செய்தனர், தீயனெறியால் மலத்திடை யழிந்திக்கிடக்கும் கிரிமிகீட ங்கள் அம்மலமே தமக்குற்ற ஸ்தானமென நினைத்துழுவதுபோல் மலத்தடிப்புற்ற முழுமலதேகி நிர்மலான்மாவான ஆதிசைவ பரமாச் சாரிய பூதர்களை மலமெனச்சுட்டியது தம்மலத்தடிப்பே யன்றிவேற ன்று இது நிற்க நமது குருமணியாம் ஆதிசைவ பிராமணர்களை வே தவேதாங்க பிருஷ்டர்களென பின்னரும் தூஷித்திருக்கின்றார். வே தவேதாங்கம்யாவும் அபரவித்தையாகவும், வேதார்த்தமாகிய சிவா கமங்களை பரவித்தையாகவும் பிரமாணத்தில் முன்வைத்து இவ் வேதாகமத்திற்குபுரம்பான ஹேயதர்மங்களை அறவே ஒழித்து சிவ பெருமானையன்றி வேறுபதிப்பொருளில்லையெனத்துணிந்து சர்யை, கிரியை,யோகம், ஞானமென்னும் சாதன சதுஷ்டய ஸம்பத்தியுணர் ந்து சிவக்ஞானம் சித்திக்கப்பெற்று இவை தன்பொருட்டும் பிறர் பொருட்டும் லோகானுக்கிரககரமாய் செய்தற்குறிய ஜகத்குருமணிக ளான ஆதிசைவ பரமாச்சாரியமூர்த்திகளை வேதவேதாங் கபிருஷ்ட ரென்பதாய்எந்தப் பிரமாணங்கள் ஓதுக்கத்துணியும், ப்ரச்சன்ன பௌத்தரூபமான நிர்மூலதர்ம்மமாம் காணுத காபிலமன்வாதி ஸ்மி ருத்யனுஷ்டேயகேவலதந்திரப்ரவிஷ்டர்களே வேதசிவாகமவேதாங் கபிரஷ்டர்களாய் வேதாகமங்கள் ஓதிக்கிவைத்திருக்கின்றது.

நமது நண்பரிங்ஙனமுற்று நோக்காது சிவதூஷணஞ்செய்யப் புகுந்தது மஹாத்மாவான கௌதமரிஷியின் சாபத்தடிப்பாலிவற்கு நேர்ந்த தோஷங்களென்பது யாவற்கும் நான்கு புலப்பட்டு விளங் கும். இதினுல் நமது ஆதிசைவ பரமாச்சார்ய மூர்த்திகளுக்கு வேத

வேதாங்கப்பிரஷ்டத்வமெங்கனே யோப்போகின்றது. வேதார்த்தரூபமான சிவாகமக்கருத்தை கைவிட்டு வேதத்துட்பொருளாராயப்புகுவோரை. வேதம்தாம் அபரவித்தையென கீழ்ப்பட்டுத் தமக்கு மேல்பரவித்தை யொன்றுளதென ஸித்தாந்தித்து அப்பரவித்தையன்றி பிரும்மஞானங் கிட்டாதெனக்கூறி யிருத்தலால் இப்பரவித்தை யறியாதோரன்றோ வேதவேதாங்கப் பிரஷ்டராதல்கூடும். வேதாகமசிக்ஷாதியாவு மொப்பப் பிரமாணமாய்க் கைக்கொண்டு வேதார்த்தத்தால் முடிபொருளுணர்ந்துய்ய விரும்பிநிற்கும் நமது குருமணிகள் வேதவேதாங்கப்பிரஷ்டராதலெங்ஙனங்கூடும். வேதவேதாங்க மிரண்டும் வேதார்த்தத்தால் பயன்படுவதன்றி தனித்துப் பயனளிக்கத்தக்கதன்று இவற்றால் வேதவேதாங்க வேதார்த்தம் இம்மூன்று முடிபிலொருபுடைத்தாயனாலென்பதே மேதாவிகள் கொள்கை இத்திரமுற்றுநோக்கும் பரிபவமற்று வேதார்த்தரூபமான சிவாகமங்களைக்கை நழுவவிட்டு நிர்மூலதந்திரமாம் காணுதகாபில மன்வாதி கேவலதந்திரப்படுகுழிப்பட்டு வருந்து மிவரா ஆதிசைவர்களை வேதவேதாங்கப் பிரஷ்டரெனக்கூற வலியுளோர், பேஷ் பேஷ் நன்றாயிருக்கின்றது. நான்கு வேதங்களையும் அத்யயனஞ்செய்தவனாயிருப்பினும் வேதார்த்தந் தெறியாதவனாயின் இவன் வேதத்திற்குப் புரம்பாவனெனக்கூறியுள்ள பிரமாணவாக்கியம் யாமேலெடுத்து நிரூபித்துள்ளோமாதலின் வேதார்த்தரூபமான சிவாகமங்களை அறியாதோர் வேதவேதாங்க பிரஷ்டராவரென்பதே தீர்மானம். இதை ஆதிசைவர் மேலேற்றி தூஷிக்கமுயன்றது வியப்பினும் வியப்பே, இதுநிற்க நமது ஜகத்குருமணிகளான ஆதிசைவபரமாச்சார்யமூர்த்திகளை மஹாசிவத்துரோஹியென தூஷிக்கமுயன்றார். சிவதுரோஹம் சிவமே யில்லையாமே சிவமென அகந்தைமேலிட்டு வேதவேதார்த்தமான வேதசிவாகமங்களைப் பொய்யெனக்கை னழுவவிட்டுநிர்மூலதர்ம்மமாகிய மன்வாதி ஸ்மிருதியைக் கைப்பற்றி சுராமாம்ஸம்புசிக்கும் யாகத்தைச்செய்து வைசுவாநராக்னியைத்தவிர வேறுபதிப்பொருளில்லை யென்னும் அஸப்யவாதமுடைய வேத அவிச்சாரிகளாகிய அவைதிகர்களுக்கன்றோ மஹாசிவத்துரோகிகள்யென்பது பொருந்தும். வேதவேதார்த்தங்களை நன்குணர்ந்து ஹிம்ஸையற்ற வேதார்த்தரூபமான சிவாகமங்களில் கூறியுள்ள சிவயாகம், சிவத்யானம், சிவயோகம், சிவபோகம், பசுத்வநிராகரணம், சிவத்வத்யோதகம், அதீந்திரிய விஷயஜன்யசிவஞானம், இவைமுதலிய

ஸதானுஷ்டேய பரமசாம்பவாக்ரேஸரர்களான ஆதிசைவபிராம்மணர்களை மஹாசிவத்ரோகிகளென்றதடாது,நமதுபரமாச்சாரியர்களுக்குயிகலோகபரலோகமில்லை யென்பதாய் தமதுவழுத்திரட்டில் வரைந்துவிடுத்தார்,இகபரமிரண்டையும்மித்தையாய்கொள்ளும்மித்யாவாதிக்கன்றோ யிகபரமில்லை யென்பதுகூடும். இவ்விரண்டையும் உள்ளபொருளாய்க்கொண்டு சிவோபாசனை புரியும் ஆதிசைவர்களுக்கு இகபரமிரண்டும் சொந்தப்பொருளேயாகும், பரத்தால்முக்தியடையக்கருதிய ஆன்மாக்களுக்கு ஒருங்கேசிவக்ஞானமளித்துநிற்கும் ஆதிசைவர்களுக்கு இகலோக பரலோகமில்லையென்னும் துர்வாதம் கௌதமரெஷியின் சாபத்தடிப்பால் வெளிவந்த உன்மத்தருரையாம். மேலுமிவர் ஆதிசைவர்கள் ஆச்சாரலேசமுமில்லாதவர் எனவரையத்துணிந்தார். இம்மஹாத்மாக்கள் ஆச்சாரமற்றிருக்கும் விஷயங்கள் யாவை? இப்பரமாச்சார்யபூதர்கள் நிர்மூலதர்ம்மமுடையார்போல் கிளப்புவைத்து உபஜீவிக்கின்றனர்களா? சுறு மாமிசம்புஜிக்கும் யாகத்தைச்செய்து துருச்சார ப்ரவிஷ்டராகின்றார்களா? கிறிஸ்தவர் துலுக்கர்,புத்தர்,ஜெயினர் முதலிய துர்மதங்களில் புக்கிஜான் ஞானஒளிமற்றும் பல்வகைப்பட்டப் பெயர்பூண்டு சிலுவையிட்டு திரிகின்றார்களா? கனபாடிபிள்ளைகளும் ஹூணபாஷாப்ரவீணருய் பன்றியின் மாம்சம் புலயர்கையால் புசித்தானந்திக்கின்றார்களா? தோல்கிடங்கு, சுருட்டுகிடங்கு, சாராயடப்போ, வாண்ணார்வேலைசெய்தல், கள்ளு, எண்ணெ, உப்பு, நவதான்யம்முதலிய துர்வியாபாரஞ்செய்து வயரோம்பிவருகின்றனரா, தண்ணீர்பந்தல் பரிச்சாரகங்கள் செய்து வயரோம்புகின்றனரா, நீச்சரிடத்திலுங் கைகட்டி வாய்புதைத்து உத்யோகஞ்செய்து வயரோம்புகின்றனரா,வேதவிக்ரயம், சாஸ்திரவிக்ரயம், மந்திரவிக்ரயம், முதலியதுருசாரங்கள் இவரிடமேறப்பெற்றிருக்கின்றனரு? இவ்வாறுள்ள அஸந்தர்ப்பங்கள் பலவுளவற்றை விறிவஞ்சிவிடுத்தோம் இங்ஙனமுற்று நோக்காது சிவைகநிஷ்டாளான ஆதிசைவ பரமாச்சாரியர்களை ஆச்சாரலேசமற்றோரென்பது எங்ஙனம்பொருந்தும் கௌதமரிஷியின் சாபத்தால் நீசவிருத்தியை அவலம்பித்து மதப்ருஷ்டருய் அர்த்தசந்திர, வர்த்துள, அச்வத்தபத்ர, சூலம்முதலிய நிஷேதபுண்டிர முடையாருய் ருமானுக்கு ஸமானமாய் அன்னிய தேவதைகளையும் உடன்படுத்திக்கூறும் அவைதிகர்களை ஆச்சாரலேசமற்றவரென்பது பொருந்தும் இதுநிற்க.

ஆதிசைவர்களை நித்ய தரித்திராளென்றனர் தரித்திரம் யாவர்க்குளதென்பது மேற்காட்டிய விஷயத்தால் இவரேனின்றும் ஆராய்ந்தரிந்துய்ய விரும்பிலர், ஆதிசைவர்களுக்கு மஹதைச்வரியத்தையும் கொடுக்கத்தக்க பரமேச்வரரே உபாஸனாமூர்த்தியாய் யமையப்பெற்றிருத்தலின் இப்பரமன் பொய்த்தாலன்றி இவர்க்கு நித்யதரித்ரத்வம் உண்டாகக்காரணமில்லை இவர்கள் நித்யதரித்ரர்போல் சோற்றுக்கடை, இட்டலிக்கடை, தோல்கடை, தண்ணீர்ப்பந்தல், பரிசாரகம் சண்டாளரிடங்களில்கைகட்டி சேவகாவிருத்திசெய்தல்இவை முதலிய ஹேயமார்க்கப் படுகுழிவீழ்ந்து தத்தளிக்கின்றனரே இதுவும் கௌதமரிட்ட சாபத்தினியற்கையாம், இங்ஙனமுற்ற உபஜீவனம்பிராம்மணதமர்களுக்கு உறித்தாம் தீயநெறியென்பது தெற்றென விளங்கும். மேலுமிவர் ஆதிசைவர்கள் மூதேவிசாநித்தயமாய்யுள்ளவர்கள் லெக்ஷ்மிகடாக்ஷலேசமில்லாதவர் எனவரைந்திருக்கின்றார் அந்தோ "கொடிது; கொடிது" மூதேவி, லெக்ஷ்மி, ஸரஸ்வதி, துற்கை, பார்வதி, பரமேச்வரர் முதலிய எல்லா மூர்த்திகளையும் பொதுநலங்கருதி பிரதிஷ்டித்து ஆன்மாக்கள் அவரவர் பரிபாகத்திற்கேற்ப சுகதுக்கானுபவங்களை அநுபவிக்கச் செய்யநியாமகமுடைய பரமாச்சார்ய மூர்த்திகளை மூதேவிபற்றுதலெங்ஙனம் இம்மஹாத்மாக்கள், அபரிபாகமுற்றோரை நோக்கி மூதேவிபற்றக்கடவதென நினைத்தால் இம்மூதேவி அவர்களைப்பற்றி பெண்பிள்ளைகள் சுற்றத்தார்முதலிய யாவரும் இவர்க்கு தவியற்று இகலோக பரலோக மில்லாத்தீய வழியில்செல்லவைத்து இவனை மொட்டையடித்து பிண்டாபாவமாக்கி தெருக்கடை பிக்ஷையிட்டுண்ணவடித்து விடும். இவ்வாதிசைவர்கள் புண்ணியமிகுதிபற்றிய ஆன்மவர்க்கத்தினிடத்தில் லெக்ஷ்மிகடாக்ஷ முண்டாவதாய் நினைப்பினும் அவர்களை மஹதைச்வர்யசம்பன்னராய் ஆக்கிவிடுவார் மூதேவி, லெக்ஷ்மி, சரஸ்வதி முதலியயாவர்களும் இவர் ஏவல்கேட்டு நடப்பவர்களாதலால் இப்பரமாச்சார்யர்கடாக்ஷமேயன்றோ லெக்ஷ்மிகடாக்ஷமென்பது இங்ஙனமுற்று நோக்காது கௌதமருஷிசாபத்தால் லெக்ஷ்மி கடாக்ஷமற்று மூதேவி வாஸம்செய்தற் கறிகுறியாம் துர்விருத்திபுக்கிவயரேம்பு மொருவர் ஆதிசைவர்களுக்கு லெக்ஷ்மிகடாக்ஷமில்லை யெனச்சந்தோஷிக்கப் புகுவது நரகத்திலுழலும் புழுநிர்மலமான கரையில் நிற்பவரை குடிக்கதண்ணியற்றவிடத்தில் நிற்கின்றாரெனதூஷித்து திருப்தியடைந்திருப்பதையொத்திருக்கும்

அங்ஙனமாயின் ஆதிசைவர்களுள்ளே லக்ஷாதிகாரியாய் ஒருவராவது யிருக்கின்றார்களா? இவ்வாறன்றி இவர்கள் திரவியமற்றிருப்பதால் லெக்ஷ்மி கடாக்ஷமில்லாதவராவரெனின் அங்ஙனமாயின் மஹதைச்வர்யத்தையும் கொடுக்கத்தக்கசிவபெருமான் திகம்பரராயும் கபாலதாராயும் ஸர்ப்பாபரணபூஷிதராயும் உடைத்தாயிருப்பதை லெக்ஷ்மீகர மற்றவரியற்கை யென்பதாய் தூஷிக்கப்புகுவான் கூற்றாய் முடிந்துவிடும்.

ஸகலஸம்பத்தையும் பிரர் பொருட்டீந்து அவரவர்கன்மானுகுண்யமாய்ஸ்வர்க்க, நரக யாதனைகளை யனுபவிக்கயேவும் கர்த்ருத்வமுடையாறிவற்றை தம்பொருட்டு கைப்பற்றி நிற்றலெங்ஙனம் கூடும். உலகம்யாவும் சிவபெருமான் சொத்தாயிருத்தலாய் அவையாவும் சிவாச்சார்யர்களின் சொத்தென்பதில் யாதுதடை? இச்சிவாச்சார்யர்கள் அநுக்ரகித்த சொத்தால் அனேகர் கோடீச்வர வந்தர்களாயிருக்க, இவர்களுக்கு சொத்துண்டோவென விசாரிக்கப் புகுதல் "அம்மாளுக்கு ஓச்சி யுண்டோவென" விசாரிக்க புகும்சிசுவின்கதையாய் முடிந்துவிடும். இதுநிற்க மஹாவிஷ்ணு த்வேஷிகளாய் பிர்மத்வேஷிகளாய், அதிமலினராய், ஆதிசைவனென்கிற அப்ரசித்த நாமமுள்ளவராய் அதிநீசர்களாய் சிவத்ரோகத்தினால் ஜீவனஞ் செய்யத்தக்கவர்களாய்ஜீவச்சதங்களாயுலாவுகின்றாரென்றனர். "பேஷ்பேஷ்" நன்றாயிருக்கின்றது. ஆதிசைவர்கள் விஷ்ணுத்வேஷிகளென்பது எஞ்ஞானறும் பொருந்தாது. ஸதாஶிவஃ நஞுஞு ஸ்ரீகஂ௦ஶஂவிகாஞயா | ஷ்கநஂவிஷ்ணு ஙுஜ்ஹாணஂ மஂஙஹநு ஸவ்வாநு கூஶாஸவூஷெஙஸ| என்னும் வாக்கியத்தால் ஸதாசிவம்அனந்தர், ஸ்ரீகண்டர், அம்பிகை, ஸ்கந்தர், விஷ்ணு, பிர்மா, இவ்வெழுவர்களையும் பறவித்தையாகிய சிவாகமங்கள் பரமாச்சார்யராய் பாவித்தல்வேண்டுமெனக் கூறியிருத்தலால் ஆதிசைவர்கள் மஹாவிஷ்ணுவை த்வேஷிக்கின்றாரென்பதை யாவரோப்புவர்ஆனல் இவரை கௌதுமசாபத்ததடிப்பால் பதிப்பொருளோடொன்றுபடுத்திகூறும்.

அவைதிகர்போல் கூறாது பதி பரமேச்வரரெனவும் மஹாவிஷ்ணு இப்பெருமானை உபாசித்து மேம்பாடுற்றிருகின்றனராதலின் இவரை பரமாச்சார்ய பூதரென வணங்குதல் உரியதாயிற்று. இதனால் இவர்கள் விஷ்ணுத்வேஷிகளாவதெப்படி நிர்மூல தர்ம்ம

முடையஏகான்மவாதிகள்சிவபெருமானையும் விஷ்ணுமூர்த்தியையும் முதலிலொப்புவதுபோலொப்பி பின்போய்இவ்விரண்டும்மித்தைபிர்மந்தான் சத்தியமென்னும் படுகுழிவீழ்ந்து ; அந்த பிர்மம் இவ்விரண்டிற்கும் அன்னியம்; அது என்னை தவிர வேறொன்றுமில்லை தன்னைத்தவிர அன்னிய பதார்த்தம் ஒன்றிருப்பதாய் கூறுமிடங்களில் அத்வைதஹானி வந்துவிடும் எனபிரமித்து அடிமுதல் நுணிபர்யந்தம் சூன்யவாதாவலம்பியாய் நிற்றலால் ஆதிசைவர்கள் மஹாவிஷ்ணு உள் பொருளாய்கொண்டு பாசிப்பவரகளும் இச்சூன்யவாதிகள் இல்போருளாய்கொண்டு நிற்பவருமாய் காணப்படுதலால் இவ்விருதிரத்தாருள்ளும் விஷ்ணுத்வேஷிகள் யாவரென்பதை விவேகிகள் ஊகித்து அறியக்கடவாராக, இதுநிற்க ஆதிசைவர்களுக்கு பிர்ம்மஸ்வரூபியாகிய பரமேச்வரர் சொந்தப்பொருளாயிருக்க இவர்களைபிர்ம்மத்ரோகிகளெள்கூறுதல் கூடுமோ? பிர்ம்மஸ்வரூபியாகிய சிவபெருமானை மறந்துதாமேபிர்ம்மமென அகங்கரித்தெழுவார்க்கன்றோ பிரும்மத்ரோகி யென்பதுபொருந்தும். தாமே பிர்மமென்பது பிர்மத்ரோகமாவதெப்படிக் கென்னில் தான் பத்தமுத்திக்கேதுவாம் சரீராதி தநுகரண புவனபோகம் புசித்திருப்பதை அறியாது தாம் பரமபதியென மயக்குற்றுபதிப் பொருளையிழந்து நிற்பதால் இவ்வுயிர்க்கு உற்றதுணையாம் பசுபதியை யெழந்து அவற்றை கைவிட்டோராகின்றூர். இவற்றுல் இவர் தன்னையே ஹத்திசெய்துகொண்டவராவாரென சூதசங்கிதை முதலிய பிரமாணம் கூறுதலால் இங்ஙன முற்றவாதிகளுக்கு பிர்ம்மத்ரோகம், சிவத்ரோகம், விஷ்ணுத்ரோகம், சகல தேவதாத்ரோகம், ப்ரபஞ்சத்ரோகம், ஆத்மத்ரோகமுதலிய யெல்லாத்துரோகங்களும் சுருதி யுக்தி அநுபவ வாயிலாய்சாதிக்கப்பட்டு இவர்தலைக்கே இவை பெருஞ்சுமையாயிற்று. இதை ஆதிசைவர் மேலேற்றி சந்தோஷிக்க முயன்றது வேத வேதார்த்தம் தெரியாதஅவைதிகறியற்கையாம். இவர்களை அதிமலினுளென்றனர் இப்பரமாச்சார்யர் கைப்பற்றியுள்ள சிவபெருமானுக்கு மாலினம் வந்தாலன்றோ இவர்களுக்கு மலினத்வம் சம்பவிக்கப்போகின்றது. இப்பரம்பொருளை இழந்துதான் தோன்றிதம்பிராணுய் தாமே பிர்ம்மமெனபிரமித்தெழும் நிர்மூல தந்த்ரநிஷ்டர்களேயே பிம்மலினத்வம் ஆட்டி அலக்கழித்து நிற்கின்றது. இவற்றை ஆதிசைவர்பாலேற்றி மகிழ்வுரநினைந்தது மஹரிஷியிட்ட சாபத்தடிப்பாலன்றி வேறன்று பின்னுமிவர் ஆதிசைவாளென்கிற அப்பிர

சித்த நாமமுள்ளவர்களாய்யென வரைந்தார். வேதார்த்தமாகிய பர வித்தையாம் சிவாகமங்களில் பிரசித்திபெற்றுள்ள ஆதிசைவரென்கிற மஹாத்மாவை அப்பிரசித்தமென குறைகூரவந்தது வேதாகம மறியாவேதபாஹ்யர்களின் செயலேயன்றோ? மஹாருஷியின் சாபம் வேதவேதார்த்தம் தெரியாது சிவனிடத்திலும் சிவபக்தர்களாகிய ஆதிசைவர்களிடத்திலும் த்வேஷபுத்திவகித்து பிராம்மணதமாளாக கடவதென சபித்திருக்க சாபக்ரஸ்தாளுக்கு ஆதிசைவநாமா அப்பிரசித்தமாக தோற்றுதலு சிதம்தான் ஐயோ இவர் வினையிருந்தவாறு "கொடிது கொடிது" பின்னுமிவர் ஆதிசைவர்களை அதிநீசரெனக்குறித்தார். வேதாகமநிஷ்டதர்மமுடைய ஆதிசைவர்களை அதிநீசம்பற்றுதல் எங்ஙனம்கூடும் குலை, களவு, கட், காமம், கோமாம்ஸம்புஜித்தல் முதலிய ஹேயதர்மங்களை கைப்பற்றி நிற்போர்க்கன்றோ அதிநீசத்வம் சொந்தப்பொருளாய் நின்றுவிடும், நிர்மூல தர்மங்களாகிய மன்வாதி, ஸ்முருதிமுதலியவைகள் கோமாம்ஸம் புஜித்தல் ச்ரார்த்தநியமமென வற்புருத்தியிருத்தலால் இக்கேவலதந்திரநிஷ்ட தர்மமுடையார்க்கு அதிநீசத்வம் யேனையா உண்டாகாதிருக்கும்? இங்ஙனமுற்று நோக்காது ஆதிசைவர்களை அதிநீசரெனக்குறித்தது கௌதமருஷியின் சாபவலியினியற்கையாம் இதுநிற்க, நமதுநண்பர் ஆதிசைவர்கள் சிவத்ரோகத்தால் ஜீவனஞ் செய்யத்தக்கவரென கூறிமகிழ்ந்தார். சிவத்ரோகம் சிவமேயில்லையாமே சிவமென உண்மைப்பொருளை வருவித்துக்காட்டும் பிறந்தர்க்குறித்தாயதேயன்றி சிவபெருமானை உள்ளபடியே உணர்ந்துய்ய ப்ரதிஷ்டித்து ஆன்மகோடிகள் அநுக்கிரகம்பெற்று புக்தி முக்திகளையடைய சதாசாரம்வகித்துள்ள ஆதிசைவர்களுக்கு சிவத்ரோகம் எஞ்ஞான்றும் மேறக்காரணமில்லை சிவத்ரோகமென்பது சிவனுக்கு அபாவம் கூறுபவரையேபற்றி ஆட்டி அலக்கழிக்கும் வலியுளது. சிவோபாசனையை சிவத்ரோகமென்பதாய் வேதவேதார்த்தங்களாகிய வேதசிவாகமங்கள் மறந்தும் கூறியதின்றாதலால் யிவர் கூறும்துர்வாதம் எங்ஙனே தலைநீட்டி வாழ்தற்குரியது சிவபெருமானின் பொருட்டீந்த எண்ணை, நெய், தயிர், பால், ப்ரசாதம் முதலியவற்றை குறுக்கள் கைப்பற்றுவதால் இவை சிவத்ரோகமாகாதோ வெனின் இவைகளை குறுக்கள் கைப்பற்றிவிட்டால் அபிஷேகம், நைவேத்தியம், பூஜை முதலிய சத்காரியங்கள் நன்னடைப் பெறுதல் எங்ஙனம்கூடும், இவ்வாறு ஒரு குருக்களும் கைப்பற்ற

விரும்பார் கொடுக்கும் திரவியத்தில் கொஞ்சமெடுத்தல் கைப்பற்ற லாகாதோவெனின் எல்லா திரவியங்களிலும் நாலிலொரு அம்சம் ஆசார்யபாகமாயெடுக்க வேத வேதார்த்தமாகிய வேத சிவாகமங்கள் விதிமுகத்தால் விளக்கியிருக்க இவை சிவத்ரோகமெனகூற வெளிவருவார். வேதபாஹ்யரேயாவார்கள் சிவனுக் கற்பிதமான திரவியம் இவர்சொந்தமாய் அனுபவிப்பது சிவத்ரோகமாகாதோ வெனின் சிவபெருமான் ஆச்சார்யரை அதிஷ்டித்து அநுக்கிரகிக்கும் இயல்புடைத்தாய் நிற்றலின் ஆஸ்தானம் அதிஷ்டானம் இவ்விரண்டும் சிவபெருமானுயிருக்க, இங்ஙனம் சிவத்ரவியத்தை சிவம் அபகரித்ததாயன்றோ கூறவேண்டிவரும். இங்ஙனம் தமது சொத்தை தாமே எடுத்துக்கொள்வது சிவதிரவ்யாபகாரமாவதெப்படி? சிவத்திற்கன்னியமாய் இருப்பவர்கிரகித்தாலன்றோ சிவத்ருவ்யாபகாரம் என்பது பொருந்தும் இங்ஙனமுற்று நோக்காது பரமாசார்ய பூதர்களை சிவத்ரோகத்தினல் ஜீவிப்பவரென குறைகூறியது மஹருஷியிட்ட சாபத்தினியற்கையாம்,தம்மைத்தவிர சிவமேயில்லையாசிமே சிவமெனபிரமித்துநிற்கும் ஏகாந்மவாதிகள் சிவபெருமானுக்கு அணுத்துணையும் சம்மந்தமில்லாதிருக்க இவர்கள் கமிட்டி, மானேஜர், பேஷ்கார்,ஸம்ப்ருதி,அத்தியானபட்டர்,முதலியகோவில் பெறிச்சாளிகள் அடியோடறுத்துத்தள்ளி சிவபெருமானுக்கு பிண்டாபாவமாக்கி ஸதிர், பாட்டுக்கச்சேரி, அண்ணுத்தைக்கூட்டம்விருந்து, அன்னியமதஸ்தர்களுக்கு ஆடு கோழி அடித்து குலைபாதகஞ் செய்து விருந்திடுதல்,முதலியவற்றல் கோயில்சொத்தை சூரையாடி தமது இஷ்டம்போல்சிலவிடும் இவர்களுக்கு சிவத்ரோகம் ஏணையா பிடித்தாட்டாமல் விடப்போகின்றது. நமதுரஜாங்கத்தார் ஹிந்து தேவஸ்தானங்களுக்கு ஹிந்துக்களே கமிட்டிமானேஜர்களாயிருக்க திருக்கோயில்சொத்தை இவர்களிடம் ஒப்பித்திருப்பதுநமதுதேவாலய நன்மையைக்கருதியேயன்றோ? இத்தேயத்துள்ளார் இவர்கள் சைவசமயிகள் அல்லாதிருப்பினும் விபூதியாடும்ஒருகாரணத்தால்நிர்மூலதர்ம்மமாகிய கேவலதாந்திரிகரை சைவசமயினென மதித்து வக்கீல் முதலிய சிற்சிலர்களுக்கு ஓட்டுக்கொடுத்து நியமிக்கும்படி செய்கின்றார்கள்.

இவர்கள் வேலைக்குவந்தவுடன் சிவஸ்வரூபாளான குருக்கள் மார்களையும் பரமேச்வரரையும் பிண்டாபாவமாக்கி பாத்தியா பாத்தியகேளைக்கிளப்பி நித்தியபூஜை, உத்ஸவம், பிராயச்சித்தம், பிரதிஷ்டை முதலிய நல்லறம்வியாச்சிய வியவகாரத்தால் தடைப்பட்டுபோக நிறுத்திகோயிலை இழுத்துசாத்த தனக்குபவர்யிருக்கிறதென பலர் பார்த்து கௌரவம்கொள்ள மறித்துபூட்டிட்டு பூஜையை நிறுத்திவிடுகின்றார்கள். "அநியாயம் அநியாயம்'' இவர்கள் உண்மையானசைவஸமயிகளாயிருப்பின் இச்சிவத்ரோகத்திற்கு துணிவரோ? கமிட்டிக்கு வருவதற்குமுன் ஸர்க்காரில் தேவஸ்தானங்களை வைத்துபார்த்தபொழுது ஒருபொழுதாவது திவ்யக்ஷேத்திரங்கள் சாற்றப்பட்டிருக்கின்றதா? கண்ணிமைபோலன்றோ கவர்ன்மேண்டார் நமது தேவஸ்தானங்களை பாதுகாத்துவந்தார்கள். கிருமாந்தரங்களில்முன்னுள்ளமஹாராஜா, தனவந்தர்கள், மற்றுமுள்ள புண்ணியவான்கள் இவர்கள் ஆங்காங்கு சிவலிங்கப்ரதிஷ்டை முதலிய சிவபுண்ணியம் அபிவிருத்தியடைவதற்கு ஆதிசைவபரமாச்சார்ய மூர்த்திகளான குருக்கள்களை ஸ்தாபித்து சிவபெருமான் சொத்தை இவர்க்குச்சொந்தமாய் ஆண்டு அனுபவித்து பூஜைநிவழித்தொண்டுபுரிந்துவர அமைத்து இவ்வாறே நீண்டகாலமாய் இச்சிவபுண்ணியம் நன்னடைபெற்று வந்தன, தற்காலத்தில் குருக்களுக்கு கோயில்நிலம் முதலியயாவும் பாத்தியமேயில்லை யெல்லாம் கிருமத்தாருதுதான் நாங்கள் யாரைவைத்து பூஜைபண்ணினாலும் கேட்கக்கூடாது அல்லது பூஜையை நிறுத்தினாலும் தைவங்கூட எங்களை கேட்கமுடியாதென கிருமம்முழுதும் ஒன்றுகூடி ஊருக்கு ஒருகுடியான குருக்கள்மார் தலைமுறைதலைமுறையாய் அநுபவித்துவந்த வீடு, வாசல், நிலம், ரொக்கம் இவைகளை பரிமுதல் செய்து கடைசியாய் இச்சிவபெருமான் போரால் ஏற்பட்டபட்டாக்கோசங்களைமுதலில் சமுதாயப்பட்டாவாக்கி கொஞ்சங்காலங் கிரமித்து கிருமத்தார்பேரால்செய்துகொண்டு அதின்பின் கோயில் ஒருமைல் விஸ்தாரத்திற்கு கட்டிக்கிடக்கிறது. கடை, வீடு கட்டி வாடகைக்குவிட்டால் கோயிலுக்கு லாபமென நினைப்பான்போல் பிறர்மெச்ச வெளிச்சம்போட்டு அக்கடையும் தமக்கு ஸ்வாதீனமாக்கிகொண்டு பின்சந்நிதானங்களிலும் தெரிசனார்த்தம் வருபவற்கு சாப்பாடு சௌகரியத்திற்கு பக்ஷணக்கடை, சாப்பாட்டு கிளப்பு

இவைகளுக்கு வாடகைக்குவிட்டு அந்த வாடகையும் தம்வயிறு நிறைக்கசாதகமாக்கிஇங்ஙனமுற்ற இடையூரால் சிவபெருமானுக்கு பிண்டாபாவமாயிருப்பதை குருக்கள், ஸ்தானீகர், பரிசாரகர் முதலிய தேவஸ்தான கைங்கர்யஸ்தர்கள் பார்த்து இனி இக்கமிட்டி மானேஜர்முதலிய கோயில்பெரிச்சாளிகளை எதிர்பார்த்திருப்பது சிவாபசாரம் நாம் கடைத்தெருவு பிச்சைவாங்கியாவது நித்தியபூஜை உத்ஸவம் பிரதிஷ்டை, பிராயச்சித்தம் முதலிய சிவ கைங்கரியம் செய்ய உத்தேசித்தால் தர்மவான் பிரவேசிக்கு முன்னிலையில் இக் கமிட்டியார் முதலினோர்க்கு வாய்க்கட்டைபோடாது தர்மத்தில் பிரவேசிக்க முடியாதென பிரவர்த்திப்போர்க்கு புத்தி யுண்டாகுமாறு கமிட்டியார், கிரிமினல் லீவில் முதலியவம்புகளிழுத்து தம் பொட்டி நிறம்பப்பணத்தைவாங்கி தர்ம்மசீலர் நமது சிவபெருமானுக்கு உத்ஸவஞ்செய்து பவனிவருந்தருணத்தில் இம்மாம்ஸபர்வதங்கள் கருத்தகோட்டும் ஷை டொப்பியும், கால்ச்சிறாய் மூஞ்சியைப்போர்த்துக்கொள்ளும்வலை காலில் பூட்ஸ் இவ்வாருள்ள பூஷணத்தால் சோபாயமானமான அண்ணுத்தைக் கூட்ட பைகாட்பிரதர்களுடன் இவர்கள் உத்யோகந் தெரியுமாறு ஜவானென்பவனிடத்தில் தோல்வடங்கொடுத்து உள்ளபடியே சிவபெருமானிடத் தன்புள்ளபக்தர்கள் கராஞ்சலிசெய்து நிற்கும் கைமுறிந்துவிழ அடிதடிசெய்து உத்வத்தைநிறுத்த இடையூறுசெய்துவிடுகிறார்கள்.

இவர்கள் இன்னமதஸ்தர்களென்பது ஸர்க்காருக்குத் தெறியுமாயின் கம்ட்டி, மானேஜர், மற்றுமுள்ள தர்ம்மவிச்சாரணையில் நேமிக்கமாட்டார்கள். இவர்கள் தர்ம்ம விச்சாரணைக்கு வரவேண்டுமென ஓட்டுவாங்கும்பொழுதே நம்மவர்கள் ஒன்றுசேர்ந்து இவர்கள் சைவமதஸ்தர்களன்று ஸ்மார்த்தர்கள் கேவலங்கர்ம்மவாதியாதலாலிவற்கட்குச் சிவபக்தி இன்றியமயாக்கருவியாயிருப்பவர் சிவாலயதர்ம்மம், சிவாகமம், சிவாச்சாரியார், சிவம் முதலினோர்களிடத்தில் பற்றற்று நிற்பவர்கள் இவர்களிடத்தில் நம்திருக்கோயில்களை ஒப்பிவித்தால் கல்வறிதீர்ந்துவிடுவார்கள் கோர்ட்டார் விசாரித்து யேர்ப்படுத்த வேண்டுமென மனுச்செய்துகொண்டால் ஒருபோதுமிவர்களை கம்ட்டியாராக ஸர்க்காரில் நியமிக்கமாட்டார்கள். கோயிலும்புகாரற்று பூஜை நன்னடைபெற்று லோகக்ஷேமமுமுண்டாகும்

நமதுதேவாலயங்களில் எங்ஙனுமொருங்கே நெய் தீபமிட்டு மகிழ்ந்திருக்க தத்காலம் மண்ணெண்ணைக் குலாட்டிரிபோடுகின்றது, சாராயம், கந்தகம், காந்தம் முதலிய பைசாசதீபமாவேசித்து நமது பெருமானாவிர்ப்பாவத்தைக் குன்றிவறச்செய்கின்றது. திருசிரகிரியின்கண் தேவஸ்தானப்பசுவை அடிமாட்டிற்கு யேலம்போட்டு நீலய்யாவென்னுங் குருக்களொருவர் நம்பெருமானிற் கற்பிதமான கோவை அடிமாட்டிற்குஏலம் போடுவதாவென்னும்பச்சாத்தாபம் மேற்கொண்டு ஏலத்தில் முடிந்ததொகையைத் தாங்கொடுத்தெடுத்துஸம்ரெக்ஷித்துவருகின்றார். அங்ஙனமுற்ற கம்ட்டிமானேஜர்களின் தேவஸ்தான விச்சாரணை சாலச்சிறிப்புடைத்தே இவர்களித்துடனொழியாமல் தேவஸ்தான ஆக்டெனவன்றே புதிதாய்ச்செய்ய விரும்புகின்றார்.

ஆக்டுசெய்யாதிருக்கும்பொழுதே யிங்ஙனமிருக்க அவைசெய்தால் கோயில் குட்டிச்செவுருதான் தேவஸ்தான ஆக்டு தேவஸ்தானசாஸ்திரம் பார்த்தவர்களன்றோ செய்தல்வேண்டும். செக்கும் சிவலிங்கமும் தெறியாதயிவர்கள் தேவஸ்தானசட்டஞ் செய்வதெப்படி, முன்னுள்ள நம்முன்னோர்கள் தேவஸ்தானத்திற்கு பூஜா கைங்கர்யம்புறியும் ஆச்சார்ய பிரமுகர்களுக்கு கிரஹம், நிலம் ரொக்கம் முதலியயாவுங்கொடுத்து அவர்கள் சுபசோபனாதிகளுக்குத்தக்கவாறு ஸம்மானமளிக்க ஸ்வர்ணாதாயமும்வைத்து யென்னாளிலும் இந்த தர்ம்மமழியாது யாவராலும் பாதுகாக்கத்தக்க நிலைமையில்வைத்திருக்க தர்க்காலமுள்ள தர்ம்மசீலர்கள் குருக்கள் வீட்டையும் ஷையார் நிலங்களையும் பிடுங்கி சொந்த உபயோகப்படுத்த முயல்வதால் இன்னல்லறமெங்ஙனேதலைநீட்டி வாழ்தற்குறியது குருக்கள்வாயில் தெள்ளுமண்போடுவது ஸ்வாமிக்கே பிண்டாபாவமாய்முடிதல் இதுதேசத்திற்கே அறிஷ்டமாய் முடிகின்றது தத்காலம் யெந்தக்கோயில்களிலுங் குருக்களுக்கு ஸ்வாதந்திரியமற்ற பூஜையாயிருப்பதால் தர்ம்ம விச்சாரணைக்கர்த்தர்களிஷ்டம்போல் பூஜை நடந்துவருகின்றதேயொழிய சாஸ்திரோக்தமான அனுஷ்டானம்எந்தக்கோயிலிலும்பொய்த்துவிட்டது கம்ட்டிமுதலினோர் சாஸ்திரவிச்சாரமற்ற ஆஞ்யராயிருத்தலால் நாம் படித்தென்பயனென்பதாய் குருக்கள்மார் படிப்பிலியாய் மென்மேலும் அபிவிருத்தியடையக்காரணமாயிருக்கின்றது.

ஏழுத்காமே இங்ஙனம் முற்றுநோக்கியாவர் சிவத்திரிவியத் தாஹுபஜீவிக்கின்றவ ரென்பதை அறிந்தடங்குவீராக இவற்றால் நமது ஜகத்குருமணிகளான ஆதிசைவ பரமாச்சார்ய மூர்த்திகள் வேதாகம வேதாங்க பரமவைதிகர்களென்றும் ஷட்கர்மாதிகாரத் வமுடையவரென்றும மங்களகரமான சிவப்பிராம்மணர்களென்றும் இவரதுகடாக்ஷம் பெற்றோற்கேலக்ஷ்மீகடாக்ஷமுண்டாகுமென வும் இவர்கள்செய்யும் சிவோபாஸனையில் உலகமுய்யக்காரணமா யிருத்தலின் பரமசாம்பவாக்கிரேஸரர்களென்றும், இவர்கள் ஜன்மத் தாலேயே பிராம்மணத்வஸித்தியும் கர்மத்தால் சிவத்வஸித்தியும் பெற்றுள்ள மஹாத்மாக்களென்றும் இம்மஹாத்மாக்களேயன்றி தீக்ஷை மந்திரோபதேசம் பெருதற்குமற்றோ ரருஹரன்றென்றும் இவ்வாதிசைவ மஹாப்பிராம்மண பாதபங்கய சரணகநிஷ்டர் களுக்கே இஹபரசாம்பிராச்சிய புக்திமுக்திகள் கிட்டுமெனவும் பிர மாணவாயிலாய் தீர்மாணிக்கப்பட்டு இம்மஹாத்மாக்களை தூஷித் துத்திரிபவர்களை அஸத்பிராம்மணரெனவும் அவைதிகரெனவும் நிர் மூலதந்திர பிரவிஷ்டமதப்பிரஷ்ட பிரச்சன்னபௌத்த ரெனவும், மாயாவாதியெனவும்இஹலோகபரலோகமில்லாதவரெனவும் ஜன்ம சூத்திரரெனவும்,சிவத்திரிவ்யத்தாஹுபஜீவிப்பவரெனவும், யஜனயாஜ ஞாதிஷட்கர்மங்களுக்குமிவர்களனர்ஹாளெனவும்,மந்திரோபதேசம் முதலிய ஸதாச்சாரங்கள் இன்னோஸ்திகரிடம் பெருதல் கூடாதென வும் சிவபெருமானேயும் விஷ்ணுமுதலினேரையும் ஸமத்வம் பாரா ட்டுவதால் சூகரத்வமாவேசித்துள்ளவரெனவும், மித்தியாவாதம், சீடாபிரும்மம், பிரிஞமம், பிரதிபிமபம், ஆரோபிதம், அவித்யாகஹு ஷிதம், வியாவஹாரிகபாரமார்த்திகம் பிராந்தி முதலிய அஸத் வாதமுடையவரெனவும் இங்ஙனமும மஹாத்மாவான கௌதம சாபத்தால் நேர்ந்த துக்காந்தகாரமுடையாரென்பதையும் இவர் களுக்கு கிரஹம் ஆர்ஹதபுத்தர்முதலினேற்கும் வெளியே கட்டி வித்து பரமசாம்பவாக்கிரேஸரர்களான ஆதிசைவ மஹாசைவ அநு சைவாந்தியசைவர் முதலினேர்களைத் தீண்டி அசுத்தஞ் செய்யா திருக்க மஹாராஜாக்கள் செய்தல்வேண்டுமென்பதையும் சுருதி

யுக்தியனுபவத்தால்நன்குவிளக்கிதீர்மானித்தொதுக்கியுள்ளோமாத லால், நமது முத்கரமிங்ஙனம் நாணி நல்லவழிதேடிப்பிழைப்பீராக ஹேமுத்கரமே சிவநிந்தக பிரச்சன்ன பௌத்தக்குரோட பங்க வஜ்ஜிராயுத மென்னும் புத்தகம் இத்துடன் முதற்பாகம் முடியப் பெற்றது. மீந்துள்ளனவற்றை இதினடுத்த இரண்டாம்பாகத்தில் கண்டித்தொதுக்க விருப்புற்றேமாதலால் ஈண்டு நிருத்தவிடம்பெற் றது. ஆங்குற்றுநோக்கியுணர்ந்துய்வீராக. சுபம், சுபம், சுபம்.

ஸ்ரீமத் ஸத்யோஜாத குருப்யோநமஃ

முற்றிற்று.

இங்ஙனம்:

தத்புருஷசிவம்.



உ

சிவமயம்

ஆதிசைவர் முதலிய சைவசமயிகள் யாவருக்கும் இதினால் தெரிவித்துக்கொள்வதாவது. நாம் பிரமாணமாய்க் கைப்பற்றிய வேதாகமமிரண்டினுள். சிவாகமத்தையும் சைவஸமயத்தையும் மற்றுள்ள சிவாச்சாரியார் சிவதர்ம்மம் முதலியவற்றையும் சிவஞானபாஷ்யம். ஸ்ரீ கண்டபாஷ்யம் முதலிய ஸத்கிரந்தங்களை சிற்சிலர் அறியாது பத்திரிகை ரூபத்தாலும் புஸ்தக ரூபத்தாலும் தூஷித்து நாத்திரராக வகைதேடி வருகின்றாராதலின். அவர்களும் நம்பெருமானிடத்தன் புருமாறு எம்மால் வெளியிடப்பட்டவே வேதாகமதாதாத்ம்யமென்னும்—புஸ்தக மொன்றும். தேவகோட்டையில் ஸன்யாஸியொருவர்—ஆதிசைவ நாமகெளலேயக முகபங்க-முத்கரமென்னும். வழுவாசக கண்டனமாய் யெமதுசிஷ்ய கோடிகளிலொருவனாகிய தத்புருஷ சிவத்தால் வெளிப்படுத்திவரும் சிவநிந்தக பிரச்சன்ன பௌத்தக்குரோடபங்க வஜ்ராயுதமென்னும் புஸ்தகம் முதற்பாகமும் இந்த புத்தகத்தில் சேர்த்து பைண்டு செய்யப்பட்டிருக்கின்றது. இதில் சிவாகமம் மிக்க உயர்ந்த தென்பதற்கு வேதம். உபநிஷத். புராணம்—மற்றுமுள்ள யுக்திப்பிரமாணத்தினாலும் சாதிக்கப்பட்டிருக்கின்றது. இதை ஆதிசைவர்களும் மகாசைவர்களும்—சைவர்களும் அத்யாவச்யம் வாங்கி வாசிக்கத்தக்கதோடும் இதைக்கண்ணுற்ற ஒவ்வொருவரும் தாங்கள் ரூ 1—0—0 கொடுத்து பெற்றுக்கொண்டு இச்சிவபுண்யம் அபிவிருத்தியடைய விரும்புவாராக. ஏனய்யா இந்த புஸ்தகத்தை குருக்கள்மார் வாங்கிவாசித்து கேட்பவருக்கு ஸந்தேகநிவிருத்திசெய்தல்கூடாது. எவ்வளவோ அபூர்வமான விஷயங்கள் வெளிப்பட்டிருக்கின்றதே இதை கொஞ்சமும் அவர்கள் பார்க்க விரும்புகிறதில்லை. மென்மேலுமிவ்வாரி ரூஜு வாங்கி வாசிக்க விரும்புவாராக. நமது பெருமானிடத்தன்புடைய சைவசமயிகளுமிவற்றைநோக்கி ஆனந்திக்கவிரும்புகிறேன். நமது சைவ மடாதிபர்களும் இது விஷயத்தில் மௌனமுற்றிருக்கின்றார். அவர்கள் தூக்கச்சீர் தூக்கமொன்று வெளிப்படவிருக்கும். சுபம். சுபம்..

இப்புஸ்தகம் வேண்டுபவர். ரூ 1—0 –0 கொடுத்து நேரிலாவது வீ. பி யிலாவது பெற்றுக்கொள்ளலாம். 2 வது பாகம் ஸஞ்சிகையாய்ப் போடப்பட்டுவருகின்றது. ரூ. 1—0—0 கட்டினால் மாதாமாதம் புத்தகம் வந்துகொண்டிருக்கும்

என் விலாஸம்- ஸத்யோஜாதசிவாச்சாரியார்.

திருவானைக்காவல் திருச்சி.